உ

கடவுள் துணை.



# செந்தமிழ்

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

ஒரு தமிழ்ப்பத்திரிகை.

## பதினோராந்தொகுதி






பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரை:

தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1912-1913.

உ

## "செந்தமிழ்"ப் பதினோராந்தொகுதியின்

# உள்ளுறை.

---

## "செந்தமிழ்"ப் பதினோராந்தொகுதியில் வெளிவந்த நூல்கள்.

[முற்றுப்பெற்றது.]

1. திருமந்திரநூறுபாட்டுக்குரை:— } ஸ்ரீமத்-சே. ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்கள். ச, ரு பகுதிகள்,

---

(முற்றுப்பெறாதது.)

1. மாறனலங்காரம்:—பத்திராதிபர். க, உ, ங., ச, ரு, சு, எ, அ, [கூ, கO, கக, கஉ பகுதிகள்.

---

உ

கடவுள்துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக.] பரீதாபி ஹூ கார்த்திகைமீ [பகுதி-க.

## பரிசோதனத்தொடர்.



தமிழ்மொழி வளர்ச்சிக் கின்றியமையாத பலவகை நயமுமமைந்த பெருமைவாய்ந்து பழையவும் புதியவும் சிறியவும் பெரியவுமாயுள்ள தமிழ்நூல்கள் பல. அவற்றுள் ஒருசில உரையெழுதப்பட்டனவும் பலபல உரையெழுதப் படாதனவுமாகி யேட்டி லெழுதிவைத்துப் போற்றப்பட்டு வந்தனவாயினும் அவை பெரும்பாலும் கற்றோரா னெழுதப்படாமையாலும், மெய் நெடில் முதலிய வெழுத்துவேறுபாடுதோன்றப் புள்ளி முதலிய கொடுத் தெழுதப்பெறாமையாலும், எழுதுவோர் தவறுதலாலும், சிதைந்த விடங்களில் அவரவர்க்குத் தோன்றியவாறு சேர்த்தெழுதுவதாலும், படிப்போர் பொருள் தோன்றாது மயங்கியவழித் தமக்குத் தோன்றும் பொருளுக்கேற்பத் திருத்துதலாலும் பலவாறு பரம்பரையே பிழைபட்டிருக்கின்றன.

அப்பிழை முற்காலத்தே மூலபாடங்களிற்றோன்றியன சிலவுள. அவற்றைச் சுத்தபாடமாகக்கொண்டு பின்புள்ளார் உரையெழுதி வைத்தனவுஞ் சிலவுள. உரையிடைப்பொருள் விளக்கவேண்டிப் பின்வந்தா ரிடைச்செருகிய வுரைவாக்கியங்களும்பல, அவற்றுட் பிழைபடுவனவுஞ் சில.

இங்ஙனம் உருவழிந்துகிடந்த தமிழ் நூல்களை யுருக்குலையாது பாதுகாக்கக் கருதிய லோகோபகாரசிலரான பண்டிதர்களால் அவை

*

பரிசோதித்து அச்சிற் பதிப்பிக்கப்பெற்றனவும் பெறுகின்றனவும் பெறவேண்டுவனவுமாகியுள்ளன.

பரிசோதனம் மிகவும் அரிதென்பதும் அது பலவகை யிடர்ப்பாடுடையதென்பதும் அதிலும் பாக்கினு லோரோவழித் தவறுதல்கூடுமென்பதும் அறிஞர்கள் அறிந்தனவாம். அங்ஙனம் காணும் ஓரோர் தவறுகொண்டு பதிப்பித்தவர்க்கு ஒருவர் ஒரு குறைகூறத் துணிவது அவரது செய்ந்நன்றிகோறலின் வேறன்று. ஆதலால் அந்நூல்களை யெழுதினோர்க்காயினும் உரைசெய்தோர்க்காயினும் பதிப்பித்தோர்க்காயினும் ஒரு குறைவுகூறக்கருதாது அவர்களிடத்து நன்றியறிதலுடையராகவே யந்நூல்களைப் பரிசிலகம்பண்ணும் பண்டிதர்களாற் சிறந்த பாடபேதங்களாயினும் திருத்தங்களாயினும் ஓரோவழிக்கண்டால் அவற்றைப் 'பரிசோதனத்தொடர்' எனப் பெயர் கொடுத்துச் செந்தமிழ்வாயிலாக வெளியிட்டுவருவாராயின் அச்சிட்ட கம்பராமாயண முதலிய பல நூல்களும் எளிதிற் றிருத்தப்பட்டுச் சுத்தபாடமாகி இன்னும் சிறப்படையுமென்ப தொருதலை.

இத்தகைய திருத்தங்கள் முன்பு செந்தமிழில் வெளிவந்தன சிலவுண்டு. அவை அந்நூல்களைப் படிப்பவர்க்கும் பதிப்பிப்பவர்க்கும் மிகப் பயன்பட்டிருக்கின்றன. அவ்வாறு இன்னும் பதிப்பித்தநூல்களிற் காணப்படும் திருத்தங்கள் பலவும் தொடர்ந்து செந்தமிழ் வாயிலாக வெளியிடப்பெறின் மிகப் பயன்படுமென்று ஒரு பெரியாரும் பணித்திருக்கின்றனர்.

பரம்பரையே பலவேறு வகைப்பட்ட பாடபேத முதலியவற்றிற்குச் சில வுதாரணம் பின் வருவனவற்றுட் காண்க.

சென்ற மாதச் செந்தமிழில் சுன்னாகம் வித்வான் ஸ்ரீமத்-அ. குமாரசுவாமிப்பிள்ளையவர்க ளெழுதிவிடுத்த "வினைப்பகுதிவேறுபடுகை." என்னும் அரிய செப்புரையில் "பைவரல்=மெலிதல், துயருறல். 'பைவராவருங்காளி' லென்று வில்லிபுத்தூரர் கூறுவர்." என்று உதாரணம் காட்டப்பட்டிருக்கிறது. இது வில்லிபுத்தூரர் பாரதத்தில் "செய்வராலினமுகளு" மென்னுஞ் செய்யுளில் உள்ளது.

(கிருட்டிணன்றூதுச் சருக்கம். செ— 5) அச் செய்யுள், அச்சுப் பிரதியில்

"செய்வாரவினமுகனுந்திருநாடுபெறநினேவோசென்றுமீளப்
பையராவருங்கானிற்படர்ந்துதிரிதரநினேவோபகைத்தபோரி
லுய்வாரெனவிரைவினுருத்தெழுந்துபொரநினேவோவுண்மையாக
வைவராமவனிபர்க்குநினேவேதென்றருள்புரிந்தானமரர்கோமான்.

எனப் பதிப்பிக்கப்பட்டு அதற்கேற்பப் பொருளு மெழுதப்பட்டிருக்கிறது. மற்ருெரு பிரதியில் "பைவராயருங்கானி" லெனப்பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. பழைய சில ஏட்டுப்பிரதிகளிற் "பைவராவிருங் கானிற் படர்ந்து" என்றெழுதப்பட்டிருக்கிறது. இவற்றுள் எதுகை நயமும் பொருட்சிறப்பும் நோக்கப் பைவராவென்பதும் படர்ந்து திரிதரவென்பதற்கேற்ப இருங்கானில் என்பதும் சிறந்த பாடங்களாகக் காணப்படுகின்றன. பைவராயருங்கானில் என்ற பதிப்புக்குப் பொருளின்மையால் பைவராவருங்கானென்ற பாடமே வகரம் விழ வேண்டுமிடத்து யகரம் விழுந்த அச்சுப்பிழையென்று கருதக் கிடக்கின்றது. பையராவருங்கானமென்ற பாடமும், பைவராவருங் கானமென்பதனையே ஏட்டிற் சிதைவுபற்றியவிடத்தில் யகர வகரங்களுக்கு வேறுபாடு தோன்ருத வழி எதுகை நோக்கிய பைவரா வென்னு மருஞ்சொற் பொருள் தோன்ருதொழியக் கானுக்கேற்ற அடையாகிய பையராவென்பது பொருந்துமெனக் கருதியோ ரெழுதி வைத்த பாடபேதம்போலும்.

இவ்வாறு மூலப்பிரதிகளிற் காணப்பட்ட பாடங்கட்கிணங்கவே முன்னேரெழுதிவைத்த வுரைகளுஞ்சிலவுள. நான்மணிக்கடிகையுள்,

மொய்சிதைக்குமொற்றுமையின்மையொருவனேப்
பொய்சிதைக்கும்பொன்போலுமேனியைப்—பெய்த
கலஞ்சிதைக்கும்பாலின்சுவையைக்குலஞ்சிதைக்குங்
கூடார்கட்கூடிவிடின். (செய்— 23 )

என்ற பாட்டில் "ஒருவனேப் பொய்சிதைக்கும் பொன்போலு மேனியை" என மூலபாட மெழுதப்பட்டிருத்தலால் அதற் கிணங்க "ஒருவனேத் தன் பொன்போலுமேனியைத் தானுரைக்கும் பொய்

கெடுக்கும்” என வுரையெழுதப்பட்டிருக்கிறது. பொய் மேனியைச் சிதைக்குமென்பது தகுதி சாலாததாகவும், வழக்கு வழிப்படாததாக வுங் காணப்படுகிறது. “பொய்யுளான் மறந்தோர் மெய்ம்மை புக னிலும் பொய்பதாகும்” எனக் காசிரகசியம் கூறுதலால் “பொய் சிதைக்கும் பொன்போலும் மெய்யினை” என விருப்பின் அது தகுதி சான்றதும் வழக்கு வழிப்பட்டதுமாம். ஆகவே உடல் என்னும் பொருளில் மெய், மேனி என்ற சொற்கள் பரியாயப்பெயராய் வழங் கப்பட்டமையாற் பாடமின்றியே ஏடெழுதுவோர்க்கு மெய்யென்ற துணையானே பாக்கினல்வந்த வுடலுணர்ச்சிவாயிலாக, அதன் பெயரை நினைந்து “பொன்போலுமேனியை” யென்றெழுதவுங் கூடும். அங்ஙனமெழுதிய பிரதியின் பரம்பரையா லப்பாடம் பரவுதலு மியலும். அப்பாடம்பற்றி யதற்கேற்ப வுரையெழுதினோர் “ஒருவனைத் தன் பொன்போலுமெனியைத் தானுரைக்கும் பொய் கெடுக்கும்” என்றுரையெழுதலும் பொருந்தும். ஆயினும் ‘பொன்போலு மெய் யினை’ யென்னும் பாடம் கிடைக்கவேண்டும்.

இவ்வாறு ஒரு நூலின் மூலமும் உரையும் வேறுபட்டிருக்கப் பிறிதோரிடத்து வேறுபாடம் கிடைப்பதுமுண்டு. ஐங்குறுநூற்றில் தொண்டிப்பத்துள்,

தோளுங்கூந்தலும்பலபாராட்டி
வாழ்தலோல்லுமோமற்றேசெங்கோற்
குட்டுவன்றொண்டியன்ன
வெற்கண்டுநயந்துநீநல்காக்காலே.

என மூலமும், இதற்குத் “தலைமகன் தோழியை யிரந்து குறையுறு வான் சொல்லியது” எனத் துறையமைப்பும், “செங்கோற்குட்டுவன் றொண்டியன்னவென்” என்றது “தன்னைத் தேறுதற்பொருட்டுத் தன் செப்பங்கூறியவாறு”. எனத் தாற்பரியமும் எழுதப்பட்டிருக் கின்றன. இப்பாட்டு நம்பிகப்பொருளுரையில்,

தோளுங்கூந்தலும்பலபாராட்டி
வாழ்தலொல்லுமோவண்கோற்குட்டுவன்
றொண்டியன்னவேற்கட்
கண்டுநயந்துநீநல்காக்காலே.

எனத் தன்னிலே தலைவன்சாற்றற்கு உதாரணமாகக் காட்டப்பட்டிருக்கிறது.

இவ்விரண்டு பாடங்களுள் நம்பியகப்பொருளுரையின்கணுள்ள "குட்டுவன், ஞெண்டியன்னவேற்கண்" என்பது தலைவன் தலைமகளை வியந்துரைத்தலாற் ருற்பரியத்தால் வழுக்களையவேண்டாமையானும் பின்னிரண்டடியு மெதுகைத்தொடைபெற் றின்பம்பயத்தலானும் அவை செவ்வியவாகக் காணப்படுகின்றன. இப்பாடம் ஐங்குறுநூற் றுரைகாரர்க்குக் கிடைத்திருப்பின் இடர்ப்பாடுற்றுத் தாற்பரியவுரை யெழுதி யமைவுடையதாக்கத்தகும் அப்பாடம் கொள்ளார். ஆதலால் ஏடெழுதுவார் ஏட்டிற் சிறிது சிதைந்தவிடத்துள்ள மூலபாடங்களைத் தமக்குத் தோன்றியவளவிற்றிருத்தி யெழுதிவைப்பதுகொண்டு இப்பாடபேத முண்டாயிருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது. "வண்கோக்குட்டுவன்" எனப் பாடம்கிடைப்பின் இன்னும் செவ்விதாம்.

இவ்வாறே இராமாயணத்திற் பலபல பாடபேதங்களும் இடைச்செருகலான சில செய்யுட்களுங் காணப்படுகின்றன. இவ்வாறே வடமொழியிலும் இதிகாசங்களிற் சில பிரதிகளில் அதிக பாடங்கள் காணப்படுகின்றனவென்றும் அவை க்ஷீ்ப்த) இடைச்செருகல் என்றும் கூறுகின்றனர்.

பண்டைக்காலத்து உரைகளிலும் இடைச்செருகலுள்ளன. தொல்காப்பிய வுரையில் உரையாசிரியருரையென்று கொண்டெழுஞ் சங்கைகளை யொழிக்கும் சேனாவரைய வாக்கியங்களின் குறிப்பால், உரையாசிரியருரையென்று காட்டும் அவ்வாக்கியங்கள்பலவு மிடைச்செருகலெனத் தோன்றுகின்றன. இதற்கு உரையாசிரிய ருரைப் பிரதிகளில் அவ்வாக்கியங்கள் சில வேறுபட்டிருத்தலும், சில காணப்படாமையும் சான்றாகின்றன.

இன்னும் திருக்கோவையாரின் முதற்பாட்டுரையில் உரைக்கு உரையுரைத்த வாக்கியங்கள் சில காணப்படுகின்றன. அவை "திரு வென்பது கண்டாரால் விரும்பப்படுந்தன்மை நோக்கம்" என்றது அழகு, என்னுந் தொடக்கத்தன. அவற்றிடையே, இன்பத்தை

நதலிய தேன்றுராயினும் இன்பந் தலைக்கிடாக அறம் பொரு ளின்பம் விடெ.ன நான்கு பொருளையு நுதலிற்று;என்ற வாக்கிய மிருக்கிறது. இதனுள் என்றுராயினும் என்னும் படர்க்கைக்கூற்றால் இவ்வாக்கிய மெழுதியவர் வேறெனவும், “இப்பாட் டென்னுதலிற்றோவெனில் அறம் பொருள் இன்பம் வீடென்னும்நான்குபொருளில் இன்பத்தை நுதலி.................வுணர்த்துதனுதலிற்று. என அவதாரிகை யெழு தியவர் வேறொருவ ரெனவும் கொள்ளற் கிடனுண்டாகின்றது. வேறொருவராயிருப்பின் இங்ஙனம் உரைக்குரையாக வெழுதியுள்ள சில வாக்கியங்க ளிடைச்செருகலென்பது பெறப்படும்.

இதுவன்றியும் உரையின் இரண்டாம்பத்தியில் வாய்ந்தென்பது நடையின் வினையாகலாற் சினைவினைப்பாற்பட்டு முதல் வினையோடு முடிந்தது; என வினைமுடிபிலக்கணமெழுதப்பட்டிருக்கிறது. இதற்கு உலரயின் பத்தாவது பத்தியில் யாதோ ரியைபுமின்றி “வாய்ந்தென் பது நடையின்வினையாகலிற் சினைவினைப்பாற்பட்டு முதல்வினையோடு முடிந்தது” என்றது அன்னத்திற்குச்சினை கால், காலிற்குச் சினை நடை ஆகைபால் முதலென்றது அன்னத்தை என விவரண மெழுதப் பட்டிருக்கிறது. இவ்விவரணம்

திருவளர்தாமரைசீர்திகழ்காவிகளிசர்தில்லைக்
குருவளர்பூங்குமிழ்கோங்குசெங்காந்தள்கொண்டோங்குதெய்வ
மருவளர்மாலைபோர்வல்லியினெல்கியனநடைவாய்ந்
தருவளர்காமன்றன்வென்றிக்கொடிபோன்றேளிர்கின்றதே.

என்னு மிப்பாட்டினுள் மாலை நடைவாய்ந்து ஒளிர்கின்றது. என் னுந் தொடருக்கு (இரண்டாம் பத்தியில்) வினைமுடிபுரைத்த வாக் கியக் கருத்தை விளக்கவந்ததாகக் காணப்படுகிறது. இங்கு வினை முடி புரைக்கக்கருதிய வினை முதற்பொருள் அன்னமென்றது பொ ருந்துமா? அதன் வினையாது? அதனுடன் மு,வதெங்ஙனம்? என வினவுவார்க்கு விடை தருதலரிது. இங்குமுடிக்குஞ் சொல்லாகிய ஒளிர்கின்றதென்னும் வினைக்கு மாலையே வினைமுதலாம்; அன்னம் வினைமுதலன்று. மாலையொளிர்கின்றதென வியையும்; அன்னம், ஒளிர்கின்றதென்பதோடியையாது நடைக்கடையாகக் கிடக்கின்றது.

அனநடைவாய்ந்து என அன்னத்தின் நடையை மாலைக்கேற்றிக் கூறினமையால் அனநடை மாலைக்கு உறுப்பும் அம்மாலை அந்நடைக்கு முதலுமாயின. மாலைக்கு நடை உறுப்பாகக் கருதப்பட்டமையால் அதன் வினையாகிய வாய்தல் சினைவினைப்பாற்பட்டதெனவும் அது அந் நடையுடையதாகக் கருதப்பட்ட மாலையின் வினையாகிய ஒளிர் தலைக்கொண்டு முடிதலால் முதல்வினைகொண்டு முடிந்ததெனவும் உரைகாரர் கருதினரெனக் கொள்ளினும் ஒருவாறு பொருந்தும்.

இம் முறையினன்றி அன்னத்திற்குச் சினை கால் காலுக்குச் சினை நடை ஆதலால் முதலென்றது அன்னத்தை யென்றெழுதியது "எழுத்தென்பரின்புலவோர்" என்று சிறப்பிக்குமாறு அரிய விலக் கணங்களா லமைந்த திருக்கோவையாரின் நிட்ப நுட்பங்களையுணர்ந் திச் செல்லும் பேரறிவாளராகிய அவ் வுரைகாரர் கருத்துக்கொரு சிறிதும் பொருந்தாமையால் தேர்ச்சியில்லாதார் தமக்குத் தெரிந்த வாறெழுதிச் சேர்த்திருக்க வேண்டுமென்று தோன்றுகின்றது. இவ்வாறே நன்னூல் விருத்தியுரை முதலியவற்றிலும் பலவிடங்களி லிடைச்செருகல் காணப்படுகின்றன. அவை யெல்லாம் பண்டிதர் கள் கண்டிருக்கக் கூடுமாதலாற் கற்பவர்க்கெல்லாம் பயன்படுமாறு ஒவ்வொருவரும் செந்தமிழிற் சிறிது சிறிதாக வெளியிட்டு வரு வாராயின் அது தமிழ்நூல் பலவு முருவழியாது நிலைபெறுவதற்கும் தமிழ் நாடு தமிழ்ப்புலமை தலைசிறந்து விளங்குதற்கும் பெரிதும் சாதகமாம்,

திரு. நாராயணையங்கார்,

பத்திராதிபர்.

---

உ

சிவமயம்.

# மநுநீதிகண்ட சோழர்காலம்.

————:0:———

மநுநீதிகண்ட சோழர் திருவாரூரை ராஜதானியாகக்கொண் டரசியற்றிய சோழர்களு ளொருவர். அவர் மநுநீதி சிறிதும் வழுவா தரசியற்றியவராதலின் மநுநீதிகண்ட சோழரெனப்பட்டார். அவ ருடைய நீதித்திறம், ஒருநாள், தற்செயலாயோடித் தமது புத்திர னூர்ந்துசென்ற தேர்க்காலின்கீ ழகப்பட்டிறந்த வொரு பசுக் கன்றுக்காக அவனுயிர்வாங்கியவாற்று னுணரப்படும்.

இலங்கை அரசருள்ளும் B. C. 161-க்கு முன்னே அரசுசெய்த ஏலேலனை நீதியிலே மநுவெனக் கூறுவர். அவனும் தனது சயன மண்டபத்திலே மஞ்சத்திலே ஒரு மணிகட்டி அதனை அசைத்தடிக்கு மாறு ஒரு கயிறுதொடுத்துக் கோபுரவாயிலில் விட்டிருந்தானென் றும், குறையுடையோர் அதனை யிழுத்தசைத்துத் தங்குறை யெடுத் துரைப்பரென்றும், ஒருநாள் அவன் மகன்சென்ற தேர்க்காலின் கீழோ ரான்கன்று தற்செயலா யகப்பட்டிறக்க அதன்பொருட்டு அம்மைந்தனுயிரை வாங்கினனென்றும் மகாவமிசம்என்னும் சிங்கள சரித்திரங் கூறுகின்றது. பெரியபுராணத்திற் கூறப்படும் மநுநீதி கண்ட சோழர் சரித்திரமும் மகாவமிசத்திற் கூறப்படும் ஏலேலன் சரித்திரத்தில் பசுவுக்கு முறைசெய்த பகுதியும் ஒரு சிறிதும் வேற் றுமையின்றி ஒத்திருக்கின்றன. இருவர் பெயரும் ஊரும் வேறு படுவதேயன்றிச் சரித்திரத்தில் வேறுபாடுசிறிதுமில்லை. சோழரும் ஓராராய்ச்சிமணி கட்டியிருந்தார். ஏலேலனும் ஒரு மணி கட்டி யிருந்தான். அங்குந் தாய்ப்பசுவேசென்று மணியையடித் தலறிற்று. இங்குந் தாய்ப்பசுவேசென் றவ்வாறுசெய்தது. அங்கும் ஏக புத்திரன். இங்கும் ஏகபுத்திரன்.

மநுநீதிகண்ட சோழர் சரித்திரம் பெரியபுராணத்தில் மாத்திர மன்று. சிலப்பதிகாரத்திலும் கூறப்படுகின்றது. அது,

"வாயிற்கடைமணிநடுநாநடுங்க
வாவின்கடைமணியுகுநீர்நெஞ்சுசுடத்தான்ற
னரும்பெறற்புதல்வனையாழியின்மடித்தோன்"

என்பதனாலறிக. அது கலிங்கத்துப் பரணியிலுஞ் சுட்டப்படு கின்றது. அது,

"அவ்வருக்கன்மகனாகிமநுமேதினிபுரந்
தரியகாதலனையாவினதுகன்றுநிகரென்,
றெவ்வருக்குமும்வியப்பமுறைசெய்தகதையும்"

என்பதனாலறிக. அதுநிற்க,

இவருள் எவர்முந்தியவர் என்பது இங்காராயத்தக்கது. ஏலேலன் B. C. 205 முதல் B.C. 161 வரையும் அநுராதபுரியிலிருந் திலங்கை யரசியற்றினேன் என்பது மகாவமிசம். மநுநீதிகண்ட சோழர் மகன் வரராமதேவசோழன். அவன்மகன் குளக்கோட்டன். அவன் திரிகோணமலைக்குவந்து ஆங்குள்ள சிவாலயம் புதுக்கி நிபந்தம் அமைத்தானென்றும் அது நிகழ்ந்தது கலியுகம் 512 இடபமதி 10உ என்றும் திரிகோணமலைக் கல்வெட்டுக் கூறுகின்றது. இது நம்பத் தக்க அதிபுராதன சாசனமென்பது அநேகர் துணிபு. நம்பத்தக்க தாகுமாயின் மநுநீதிகண்ட சோழர்காலம் இற்றைக்கு 4500-வருடத் துக்கு முற்பட்டதாகும்.

யாழ்ப்பாணம்,
நாவலர்கோட்டம்.
8—12—12.

இங்ஙனம்,
ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.

---

# ஔவையாரது நீதிநூல்கள்

(பத்தாந்தொகுதியின் ௫௨௨-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

(21) "𑌮𑌨𑌸𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍍𑌵𑌚𑌸𑍍𑌯𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍍𑌦𑍁𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 ।
𑌮𑌨𑌸𑍍𑌯𑍇𑌕𑌂 𑌵𑌚𑌸𑍍𑌯𑍇𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌕𑌂 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 " ॥

இதன் பொருள்:—தீயோருடைய மனம் வேறும், சொல் வேறும், செய்கை வேறுமாயிருக்கும். நல்லோருடைய மனமு மொன்று, சொல்லு மொன்று, செய்கையு மொன்றேயாம்.

"மனம்வேறு சொல்வேறு மன்னுதொழில் வேறு
வினைவேறு பட்டவர்பான் மேவு—மனமே
மனமொன்று சொல்லொன்று வான்பொருளு மொன்றே
கனமொன்று மேலவர்தங் கண்."

நீதிவெண்பா 75.

(22) "𑌸𑌂𑌦𑍇𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌾𑌤𑍍𑌸𑌾𑌧𑍁𑌰𑍍𑌦𑍁𑌰𑍍𑌜𑌨𑌵𑌨𑍍𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇 ।
𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌵𑌲𑍍𑌮𑍀𑌕𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌾𑌦𑍍𑌰𑌜𑍍𑌜𑍁𑌃 𑌸𑌰𑍍𑌪𑌾𑌯𑌤𑍇 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 " ॥

இதன் பொருள்:—சந்தேகப்பட்ட விடத்தைப்பற்றி யதுகாரணமாக நல்லவனும் கெட்டவனென்று கொள்ளப்படுவான். இரவு நேரத்திற் பழுதையானது புற்றடுத்துக்கிடந்தாற் பாம்பென்றே நினைக்கப்படுமன்றோ.

"நல்லொழுக்க மில்லா ரிடஞ்சேர்ந்த நல்லோர்க்கு
நல்லொழுக்க மில்லாச்சொ னண்ணுமே—கொல்லும்விடப்
பாம்பெனவுன் னுரோ பழுதையே யானலும்
தாம்பமரும் புற்றடுத்தாற் சொல்."

நீதிவெண்பா 86.

(23) "𑌹𑍀𑌨𑌸𑍇𑌵𑌾 𑌨 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌮𑌹𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ।
𑌪𑌯𑍋𑌽𑌪𑌿 𑌶𑍌𑌣𑍍𑌡𑌿𑌕𑍀𑌹𑌸𑍍𑌤𑍇 𑌵𑌾𑌰𑍁𑌣𑍀𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 " ॥

இதன் பொருள்:—கீழோரை நாடிச் சேர்தலாகாது. பெரியோரை நாடிச் சேர்தல்வேண்டும். கள் விற்பவளிடத்துப் பாலை வாங்கிப் பருகினும் கள்ளென்றே கருதப்படும்.

"நிந்தையிலாத் தூயவரு நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையது தம்மிடத்தே நிற்குமே—நிந்தைமிகு
தாலநிழற் கீழிருந்தான் றன்பா லருந்திடினும்
பாலதெனச் சொல்லுவரோ பார்."

நீதிவெண்பா 79.

(24) "வித்வாநேவ விஜாநாதி வித்வஜ்ஜநபரிச்ரமம் ।
நஹி வந்த்யா விஜாநாதி குர்வீம் ப்ரஸவவேதநாம்" ॥

இதன் பொருள்:—படித்தவரது பெருமையைப் படித்தவரே யறிவார். பிள்ளையைப் பெறும் பெருந்துயரம் மலடி யறியாளன்றோ?

"கற்றோர் கனமறிவர் கற்றோரே கற்றறியா
மற்றோ ரறியார் வருத்தமுறப்—பெற்றறியா
வந்தி பரிவாய் மகவைப் பெறுந்துயரம்
நொந்தறிகு வாளோ நுவல்."

நீதிவெண்பா 15.

(25) "வரமேகோ குணீ புத்ரோ நச மூர்க்கசதாந்யபி ।
ஏகச்சந்த்ரஸ்தமோ ஹந்தி நச தாராகணோऽபிச" ॥

இதன் பொருள்:—மூர்க்கர்களாயுள்ள பல புத்திரர்கள் இருப்பதினும், நற்குணமுள்ள ஒரு புத்திரன் இருப்பதே நலமாகும். ஒரு சந்திரன் இருளை யகற்றுகின்றான். எண்ணிறந்த நக்ஷத்திரங்களிருந்தும் ஆவதில்லை.

"கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினுமால்
வல்லா னொருவனையே மானுவரோ—வல்லாரு
மெண்ணிலா வான்மீ னிலகிடினும் வானகத்தோர்
வெண்ணிலா வாமோ விளம்பு."

நீதிவெண்பா 98.

(26) 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌗𑍍𑌰𑍇 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌰𑍍𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌗𑍍𑌰𑍇 𑌮𑌿𑌤𑍍𑌰𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌾𑌃 ।
𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌗𑍍𑌰𑍇 𑌬𑌨𑍍𑌧𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑍍𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌗𑍍𑌰𑍇 𑌮𑌰𑌣𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 "॥

இதன் பொருள்:—ஒருவனுக்கு வந்துறுஞ் செல்வம் அவனது நாவினுனியைச் சார்ந்திருக்கும். ஒருவனுக்குண்டாகும் நன்பரும் பந்துக்களும் அவனது நாவினுனியைப் பற்றியே யாவர். ஒருவன் சிறைச்சாலையில் அடைவதும் அவனது நாவினுனியைச் சார்ந்திருக்கும். ஒருவன் உயிரிழக்க நேருவதும் அவனது நாவினுனியைப் பற்றியதாகவிருக்கும்.

"நாவி னுனியி லயமிருக்கிற் பூமாது
நாவினிய நல்லோரு நண்ணுவார்—நாவினுனி
யாங்க டினமாகி லத்திருவுஞ் சேரான்முன்
ளுங்கே வருமரண மாம்."

நீதிவெண்பா 17.

(27) "𑌕𑌿𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌵𑌕𑍍𑌤𑌾𑌰𑍋 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾𑌰𑍋 𑌯𑌤𑍍𑌰 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌾𑌃 ॥
𑌨𑌗𑍍𑌨𑌕𑍍𑌷𑌪𑌣𑌕𑍇 𑌦𑍇𑌶𑍇 𑌰𑌜𑌕𑌃 𑌕𑌿𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 " ॥

இதன் பொருள்:—சொல்லினும் கேட்டுணராத துஷ்டர்களிடத்து, நற்குணம் வாய்ந்த பெரியோர் ஒன்றும் சொல்லப்புகார். நிர்வாணிகளாகிய சமணர்களினூரில் வண்ணானுக்கு வேலையுண்டோ?

"குணநன் குணராக் கொடியோ ரிடத்திற்
குணநன் குடையார் குறுகார்—குணமுடைமை
நண்ணாச் சமண நகரத்திற் றூசொலிக்கும்
வண்ணானுக் குண்டோ வழக்கு."

நீதிவெண்பா 26.

(28) "𑌧𑌰𑍍𑌮𑍋 𑌜𑌯𑌤𑌿 𑌨𑌾𑌧𑌰𑍍𑌮𑌃 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑌯𑌤𑌿 𑌨𑌾𑌨𑍃𑌤𑌮𑍍 ।
𑌕𑍍𑌷𑌮𑌾 𑌜𑌯𑌤𑌿 𑌨 𑌕𑍍𑌰𑍋𑌧𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌜𑌯𑌤𑌿 𑌨𑌾𑌸𑍁𑌰𑌾𑌃 " ॥

இதன் பொருள்:—தருமம் வெல்லும்; அதருமம் வெல்லாது. மெய் வெல்லும்; பொய் வெல்லாது. பொறுமை வெல்லும்; கோபம் வெல்லாது. விஷ்ணு வெல்லுவர்; அசுரர் வெல்லார்கள்.

“சத்தியத்தை வெல்லா தசத்தியந்தா னீள்பொறையை
மெத்திய கோபமது வெல்லாது—பத்திமிகு
புண்ணியத்தைப் பாவமது வெல்லாது போரரக்கர்
கண்ணனைத்தான் வெல்லுவரோ காண்”

நீதிவெண்பா 53.

(29) “ஶிவஶிவ ஶிவஶிவ ஶிவஶிவேதி வாதிநம் ।
வத்ஸம் கௌரிவ கௌரீஶோ தாவந்தமநுதாவதி ” ॥

இதன் பொருள்:—ஓடித்திரிகின்ற தன் னிளங்கன்றைப் பசுவானது பிரியாமற் பற்றிச்செல்லுவதுபோல, சிவனே சிவனே சிவனே யென்று சொல்லுவாரைச் சிவபெருமான் றொடர்ந்து திரிவார்.

“சிவனே சிவனே சிவனேயென் பார்பின்
சிவனுமையா ளோடுந் திரிவன்—சிவனருளாற்
பெற்றவிளங் கன்றைப் பிரியாமற் பின்னோடிச்
சுற்று பசுப்போற் றொடர்ந்து.”

நீதிவெண்பா 58.

(30) “ஸத்யம் ஜநவிரோதாய அஸத்யம் ஜநரஞ்ஜநம் ।
விக்ரீயதே ஸுரா ஸ்தாநே ததி க்ஷீரம் க்ருஹே க்ருஹே ” ॥

இதன் பொருள்:—ஜனங்கள் மெய்யைத்தள்ளிப் பொய்யை விரும்புவார்கள். கள் தானிருந்தவிடத்திலேயே விலைப்படும். தயிரும் பாலும் வீடுதோறும் சென்று விலைப்படும்.

“சத்தியமெய்க் காலுஞ் சனவிருத்த மாகுமே
யெத்தியபொய் யார்க்கு மிதமாகு—நத்தியபால்
வீடுதொறுஞ் சென்று விலையா மதுவிருந்த
வீடுதனி லேவிலையா மே.”

நீதிவெண்பா 85.

(31) “கங்கா பாபம் ஶஶீ தாபம் தைந்யம் கல்பதருஸ்ததா ।
பாபம் தாபஞ்ச தைந்யஞ்ச ஹந்தி ஸங்கோ மஹாத்மநாம்” ॥

இதன் பொருள்:—கங்கைநதி பாவத்தைப்போக்கும்; சந்திரன் வெப்பத்தை நீக்கும்; கற்பகவிருக்ஷம் வறுமையை மாற்றும். பெரியோர்களது சேர்க்கை பாவத்தையும் வெப்பத்தையும் வறுமையையும் போக்கும்.

"கங்கைநதி பாவஞ் சசிதாபங் கற்பகந்தான்
மங்க லுறும் வறுமை மாற்றுமே—துங்கமிகு
மிக்குணமோர் மூன்றும் பெரியோ ரிடஞ்சேரி
லக்கணமே போமென் றறி."

நீதிவெண்பா 100.

(32) "பண்டிதோபி வரம் ஶத்ருர்ந மூர்கோ ஹிதகாரக꞉ ।
வாநரேண ஹதோ ராஜா விப்ராஶ்சோரேண ரக்ஷிதா꞉" ॥

பஞ்சதந்த்ரம், I. தந்த்ரம்.

இதன் பொருள்:—மூடனாகவுள்ள நண்பனினும் பண்டிதனாகவுள்ள பகைவன் நல்லன். குரங்கு வேந்தைக் கொன்றது. திருடன் வேதியரைக் காப்பாற்றினன்.

"அறிவன் பகைபெறு மன்புசேர் நட்பாஞ்
சிறுவன் பகையாஞ் செறிந்த—வறிவுடைய
வென்றி வனசரன்முன் வேதியனைக் காத்தான்முன்
கொன்றதொரு வேந்தைக் குரங்கு."

நீதிவெண்பா 3.

(33) "அவிம்ருஶ்ய ந கர்தவ்யம் கர்தவ்யம் ஸுவிம்ருஷிதம் ।
பஶ்சாத்பவதி ஸந்தாபோ ப்ராஹ்மண்யா நகுலாதிவ" ॥

இதன் பொருள்:—எதனையும் நிரவிசாரித்துச் செய்யவேண்டும். நிரவிசாரியாது செய்பலாகாது. அன்றேல், பார்ப்பினிக்குக் கீரியினுல் மனத்துபரம் சேர்ந்ததுபோல, சேரும்.

"செய்பு மொருகருமந் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபஞ் சேருமே—செய்யவொரு

நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர்துயரம் போல்."

நீதி வெண்பா 16.

(34) "𑌕𑌾𑌕𑍈𑌃 𑌕𑍃𑌤𑌸𑍍𑌯 𑌦𑍋𑌷𑍇𑌣 𑌹𑌂𑌸𑍋𑌽𑌪𑌿𑌵𑌿𑌨𑌿𑌪𑌾𑌤𑌿𑌤𑌃।
𑌏𑌵𑌂 𑌦𑍁𑌰𑍍𑌜𑌨𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌾𑌤𑍍 𑌕𑍁𑌲𑌪𑍁𑌤𑍍𑌰𑍋 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿" ॥

இதன் பொருள்:—காகங்கள் புரிந்த செய்கையின் கெடுதியால், அன்னப்பறவை துயரமுற்றது, இவ்வாறே, தீயோர்களின் சேர்க்கையால் நற்குடியிற் பிறந்த பிள்ளையும் கெடுவான்.

"நன்றறியாத் தீயோர்க் கிடங்கொடுத்த நல்லோர்க்குந்
துன்று கிளைக்குந் துயர்சேரும்—குன்றிடத்திற்
பின்னிரவில் வந்தகரும் பிள்ளைக் கிடங்கொடுத்த
வன்னமுதற் பட்டதுபோ லாம்."

நீதி வெண்பா 74.

(35) "𑌶𑍍𑌰𑍁𑌤𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌪𑌿𑌤𑌰𑍋 𑌧𑌨𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌤𑌰𑌃।
𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌾𑌃 𑌕𑍁𑌲𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌰𑍂𑌪𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌕𑌨𑍍𑌯𑌕𑌾𑌃" ॥

இதன் பொருள்:—தந்தைமார் கல்வியை விரும்புவார். தாய்மார் செல்வத்தை விரும்புவார். உறவினர் நற்குடியை விரும்புவார். பெண்கள் அழகை விரும்புவார்.

"பெண் ணுதவுங் காலைப் பிதா விரும்பும் வித்தையே
யெண்ணி றனம்விரும்பு மீன்றதாய்—நண்ணிடையிற்
கூறியநற் சுற்றங் குலம்விரும்புங் காந்தனது
பேரழகு தான்விரும்பும் பெண்."

நீதி வெண்பா 81,

(36) "𑌗𑍁𑌰𑍁𑌪𑌤𑍍𑌨𑍀 𑌰𑌾𑌜𑌪𑌤𑍍𑌨𑍀 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌪𑌤𑍍𑌨𑍀 𑌤𑌥𑍈𑌵 𑌚।
𑌪𑌤𑍍𑌨𑍀𑌮𑌾𑌤𑌾 𑌸𑍍𑌵𑌮𑌾𑌤𑌾 𑌚 𑌪𑌞𑍍𑌚𑍈𑌤𑌾 𑌮𑌾𑌤𑌰𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃" ॥

இதன் பொருள்:—குருவின் மனைவியும், அரசன் மனைவியும், தமையன் மனைவியும், தன்மனைவியைப் பெற்றவளும் தன்னைப் பெற்றவளும் ஆகிய இவரைவரும் தாய்மாரெனப்படுவார்.

"தன்னை யளித்தா டமையன் மனைகுருவின்
பன்னி யரசன் பயிரேவி—தன்மனையைப்
பெற்று ளிவரைவர் பேசி லெவருக்கு
நற்றாய ரென்றே நவில்."

நீதி வெண்பா 42.

(37) "ஸ்தாநஸ்தா ஏவ ராஜந்தே த3ந்தா: கேஶா நகா2 நரா: ।
ஸ்தாநாஸ்தாநேஷு ராஜந்தே த3ந்தா: கேஶா நகா2 நரா: ॥

இதன் பொருள்:—பற்களும் தலைமயிரும் நகங்களும் மனிதர்களும் இருக்குமிடத்திலிருந்தால் மேன்மை யடைவார். யானைத்தந்தங்களும், கவரிமான் மயிரும், புலிநகங்களும், கற்றறிந்த மனிதர்களும் எவ்விடத்துச் செல்லினும் மேன்மை யடைவார்.

"தலைமயிருங் கூருகிரும் வெண்பல்லுந் தத்த
நிலையுடைய மானவரு நிற்கு—நிலைதவறுத்
தானத்திற் பூச்சியமே சாரு நிலைதவருந்
தானத்திற் பூச்சியமோ தான்."

நீதி வெண்பா 28.

"ஆனை மருப்பு மருங்கவரி மான்மயிருங்
கான வரியுகிருங் கற்றோரு—மானே
பிறந்தவிடத் தன்றிப் பிறிதொருதே சத்தே
செறிந்தவிடத் தன்றோ சிறப்பு."

நீதி வெண்பா 27.

(38) "முகம் பத்மத3ளாகாரம் வசஶ்சந்த3ந ஶீதலம் ।
ஹ்ருத்கர்த்தரீஸமம் சாதிவிநயோ தூ4ர்த்தலக்ஷணம் " ॥

இதன் பொருள்:—தாமரைமலர் போன்றழகிய முகமும், சந்தனம் போற் குளிர்ச்சி பொருந்திய வார்த்தையும், கத்தரியைப்போற் கொடிதாகிய மனமும், மட்டுக்கு மிஞ்சிய வணக்கமும் வஞ்சகர்களுக்குரிய அடையாளங்களாம்.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக்.] பரீதாபி ஹூ மார்கழிமீ [பகுதி-உ.

## வேள் - பேகன்.

இவன், வேளிர்தலைவருள் ஒருவனுன ஆவியின் குடியிலுதித்த பெருந்தகையாவன்; இவனை வையாவிக்கோப் பெரும்பேகன் எனவும் வழங்குவர். கடைச்சங்கநாளில் விளங்கிய கடையெழுவள்ளல்களில் இவனும் ஒருவன் என்பது "முரசுகடிப்பிகுப்பவும்" என்னும் புறப் பாட்டாலும் (கடுஅ) சிறுபாணாற்றுப் படையில் அச- முதல் கஉஉ- வரையுள்ள அடிகளாலும் விளங்கும். இவனது வரையா வள்ளன் மையைப் பரணர் என்னும் பழையபுலவர் புகழுமிடத்து—"குளத்தி லும் வயலினும் களர்நிலத்தும் ஒப்பப்பெய்யும் வரையறையில்லாத மாரிபோலப், பேகனும் கொடையிடத்துத் தான் அறியாமைப் படுவ தல்லது, பிறர் படைவந்து பொரும்போது அப்படையிடத்துத் தான் அறியாமைப்படான்"—என்ற கருத்துப்பட,

"அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கொடைமடம் படுத லல்லது
படைமடம் படாஅன்பிறர் படைமயக் குறினே"

என அவனது கொடைமடத்தைச் சிறப்பிப்பர். இவனது கொடை மடத்தைப்பற்றிய மற்றொரு செய்தியுமுண்டு; இவ்வள்ளல் ஒருகால் மலைவழியே செல்லும்போது. மயிலொன்று தன் சிறகை விரித்து ஆடு

*

வது கண்டு, 'அது குளிருக்காற்றாது வருந்தி நடுங்குகின்றதுபோ லும்' என்று கருதித் தான் மேற்போர்த்திருந்த உயர்ந்த படாத்தை அதன்மேற் சார்த்திச் சென்றான்—என்பதாம். இச்செய்தி—

"உடாஅ போரா ஆகுத லறிந்தும்
படாஅமஞ்ஞைக் கீத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேக!"

எனப் பரணரும் (புறம் - கசக)

"மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக!"

என வன்பரணரும் (ஷை - கசடு)

"வானம் வாய்த்த வளமலைக் கவாஅற்
கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய
அருந்திற லணங்கி னாவியர் பெருமகன்
பெருங்கன் னாடன் பேகன்" (சிறுபாண் - அடி. அச - எ)

என இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனாரும் கூறுதல் காண்க. "முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும் - எல்லை நீர் ஞாலத் திசைவிளங்கத் - தொல்லை--இரவாம லீந்த இறைவர்போ லீயுங் - கர வாம லீகை கடன்" என்புழி ஐயனாரிதனாரும் இச்செய்தியைக் குறித் தார். இவ்வழகிய வரலாற்றால், வேறு பயன் கருதாது உயிர்களி டத்துப் பேகனுக்கு இயல்பாகவேயிருந்த பெருங்கருணைத்திறம் விளங்கும். "எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென - மறுமைநோக் கின்றோ அன்றேபிறர், வறுமை நோக்கின் றவன்கை வண்மையே" என, இவ்வள்ளலை நோக்கிப் பரணர் என்ற புலவர்பெருமான் புகழ்ந் திருத்தலும் ஈண்டு நோக்கற்பாலது.

இங்ஙனம் பேகனென்னும் பெருந்தகை வள்ளலுக்கு உரிய மனைவியானவள், கண்ணகியென்ற கற்புடையாசியாவள். இம்மனை யாளுடன் இல்லறம் புரிந்துவந்த பேகனது நல்வாழ்க்கையில் திடீ

ரென்று மாறுதல் ஒன்று நிகழ்வதாயிற்று. அந்தோ! கண்ணகி என்னும் பெயர்வாய்ந்த மகளிர்க்கெல்லாம்—தங்கணவர் பரத்தையர்நலம் நுகர்ந்து மகிழ்ந்திருக்கத்—தாம் தனித்திருந்து அவர்பிரிவாற்றாது வருந்துதலே இயல்பாயிற்றுப் போலும். கோவலனுடைய கற்புடை மனைவியாகிய கண்ணகி என்பாள், இளமையில் தன்கணவன் பரத்தை வயத்தனாய் நின்ற துயரமிக்கு வருந்தியதுபோலவே, இக்கண்ணகிக்கும், தன் கணவனாகிய பேகன் பொதுமகளொருத்தி மோகத்தில் வீழ்ந்தமையால் ஆற்றாமை பெரிதாயிற்று. அருங்குணமும் பெருங் கொடையுமுடைய இப்பெருந்தகை, இங்ஙனம் பொதுமகள் வலைப்பட்டு, தன்னரிய மனைவியைப்பற்றிய சிந்தையேயில்லாது உறைந்தது, விதியின் வலிபோலும். பேகனுக்கும் கண்ணகிக்கும் நேர்ந்த இப்பிரிவுபற்றிய செய்தியானது அவர்களது இல்வாழ்க்கைக் காலத்தே பெரிதும் உபசரிக்கப் பெற்றுப் பெரும்பயனடைந்த புலவர் பெருமக்களாகிய கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் என்ற சான்றோர்கட்கு எட்டியதும், அப்புலவர்கள் முன் போலக் கண்ணகியும் பேகனும் சேர்ந்துவாழ முயல்வாராயினர். இவர்கள் பேகனையடைந்து, அவன் மனைவி கண்ணகியின் வாழ்க்கையில் இரக்கந்தோன்றக் கூறும் மாட்சி, பெரிதும் வியக்கற்பாலது. இப்புலவரிற் கபிலர் என்ற புலவர்பெருமான் பேகனிடஞ்சென்று அவனை நோக்கி—"சிறந்த மலைநாடனே! போர்வன்மையும் கொடைத் திறமுமுடைய பேக! நேற்று வழிநடந்து வருந்திய என் சுற்றம் பசித்ததால், உயர்ந்த மலையிடத்துள்ள சிறிய ஊரில் உன்வாயிற் கண்ணே வந்து நின்னையும் நின்மலையையும் வாழ்த்தி யான் பாடிநின்றேனாக, அப்போது துக்கத்துடன் சொரிந்த கண்ணீரையுடையவளாய் அக்கண்ணீர் முலையிடத்தை நனைக்கும்படி பொருமி, வேய்ங் குழல் இரங்கியொலிப்பதுபோல, ஒருத்தி அழுதாள்; இரங்கத்தக்க அன்னாள், யார் கொல்லோ, சொல்க" என்று, அவ்வள்ளலுங் கேட்டிரங்கும்படி கூறினர். இவ்வாறே பரணரும்,* அவ்வள்ளலைக்கண்டு,

---

* இவர் பாடியது "அருளாயாகலோ கொடிதே" (புறம்-௧௪௪) என்பது. "இது, கண்ணகி காரணமாக வையாவிக்கோப்பெரும்பேகனைப் பரணர் பாடிய கைக்கிளைவகைப் பாடாண்பாட்டு" என்பர் நச்சினார்க்கினியர் (தொல். பொருளதி. பக் - ௨௪௦.)

"நேற்றுமாலையில் நின்மழைமிகுந்த காட்டை யாங்கள்பாடிக்கொண்டு வந்தேமாக, நீலமலர்போன்ற கண்களினின்றும் கலங்கி விழ்ந்த நீர்த்துளிகள், பூணையுடைய தன்மார்பகத்தை நனைக்கும்படி வருந்தி நின்ற ஒருத்தி எம்முன் வந்து தோன்ற, அவளைநோக்கி யாங்கள், 'இளையோய்! எங்களுடைய நட்பைவிரும்பும் தலைவனாகிய பேகனுக்கு நீ உறவினையோ' என்று வணங்கிக் கேட்டபோது, அவள், காந்தண் மொட்டுப்போன்ற தன் விரலாலே தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு 'நாங்கள் அவனுடைய உறவினர் அல்லேம்; கேளுங்கள், விளங்கிய புகழையுடைய பேகன் எம்மை யொக்கும் ஒருத்தியுடைய அழகைக் காதலித்துத் தன்தேரில் இந்நல்லூரின்கண் அடிக்கடி வருவன் என்று சொல்லுவர்' என்று கூறினாள்; இஃது என்னே! தலைவ! நீ அவட்கு இரங்கி அருள்பண்ணாதிருத்தல் மிகக்கொடியது" "மயிலுக்கிரங்கிப் போர்வையளித்த பெருங்கருணையுடைய பேக! யாம் இப்போது பசித்து நின்பால் வரவில்லை; எம்மாற் றாங்கப்படவேண்டிய சுற்றமும் இப்போது இல்லை; பேரருளாள! நீ அறநெறியில் ஒழுக வேண்டும் என்பதே யாம் இரக்கும் பரிசில்: ஆதலால் நீ உன் தேரில் ஏறிச்சென்று, பார்ப்பதற்கரிய துக்கத்தைக் கொண்ட உன் கற்புடை மனைவியின் சிந்தாகுலத்தைத் தீர்ப்பாயாக" என்றனர். இவ்வாறே, தாம் பரிசில் வேண்டி வரவில்லை யென்றும், நீ அவளைச்சென்று சேர்தலே யாம் வேண்டுவதென்றும்— அரிசில் கிழாரும், பெருங்குன்றூர் கிழாரும் பேகனைக்கண்டு பாடினர்.* இங்ஙனம், அக்காலத்தே தமிழ் நாட்டுப் பெருமக்களாய் விளங்கிய புலவர் வேண்டுகோளுக்குப் பேகன் இன்னது செய்தான் என்பது தெரிந்திலதேனும், வேண்டியோர்க்கு வேண்டியாங்களிக்கும் பெருவள்ளலாகிய அவன், இத்தகைய பெருமக்கள் நெடுந்தூரத்திலிருந்து வந்து தன்பால்வேண்டிய விருப்பத்தை நிறைவேற்றுதிரான் என்றே நம்பலாம்.

இனி இவ்வேள் - பேகனைப்பாடிய அரிசில்கிழார், வேளாவிக் கோமான் பதுமனுக்கு ¹¹கள்வயிற்றுப் பெபரனாகிய, தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையைப் பதிற்றுப்பத்து எட்டாம்பத்தாற்

* இப்புலவர்கள் பாடல்களைப் புறநானூற்றில் ௧௪௩ - முதல் ௧௪௭ - வரையுள்ள பாடல்களால் உணர்க.

புகழ்ந்துள்ளார். எனவே, வேளாவிக்கோவின் வழியினனாகிய பேக னும், அவ்வாவிக்கோவின் மகள் மகனாகிய பெருஞ்சேரல்இரும் பொறையும் ஒருகாலத்தவராதல் பெறப்படும். ஒருகால், பேகன், வேளாவிக்கோமான் பதுமனுக்கு மகனாகவேனும் அன்றி மகன்மகனா கவேனும் இருத்தலும் கூடும். வையாவிக்கோப் பெரும்பேகன் என்று இவ்வள்ளல் வழங்கப்படுதலால், இவனூர் வையாவிபுரியாகிய ஆவி நன்குடி என்பது தெரிகிறது. இவ்வாவிநன்குடிக்குச் 'சித்தன் வாழ்வு' என்பதும் ஒரு பழம்பெயராம். இதனை, "நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன் வாழ் - வில்லந் தொறுமூன் றெரியுடைத்து - நல்லரவப் - பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியநின் - னாட் டுடைத்து நல்ல தமிழ்" என்னும் ஔவைவாக்கானும் அறிக*. இப் பாட்டாற் சித்தன் வாழ்வாகிய ஆவிநன்குடியில், சங்கநாளில் அந் தணர் மிகுந்திருந்தமை வெளியாம். சித்தன்வாழ்வு என்பது பழநி யாண்டவர், கோயில் கொண்டமைபற்றி வந்தபெயர்: "சித்தன் - பிள் ளையாருக்குத் திருநாமம்" என்பர் நச்சினார்க்கினியரும்.

மு. இராகவையங்கார்.

---

உ

# வினைப்பகுதி வேறுபடுகை.

## மடி, சீ, விடு.

இகரவீற்றுப் பகுதிகளுள்ளே சில பொருணோக்கியும், சில பிற வினை நோக்கியும் விகுதிகள் இரட்டலாலே தாமும் வேறுபாடு புலப் படுத்தி நிற்கும். பொருணோக்கி இரட்டுவன; பரி, அரி, படி, எறி, துணி,வழி முதலியன.இவற்றினின்று பரிதல், பரித்தல்,அரிதல், அரி த்தல்,படிதல், படித்தல், எறிதல், எறித்தல், துணிதல், துணித்தல், வழிதல், வழித்தல், முதலிய தொழிற்பெயர்களும், பரிந்து, பரித்து, பரிய, பரிக்க, பரிந்த, பரித்த முதலிய எச்சங்களும், பரிந்தான், பரித்

---

* திருமுருகாற்றுப்படையுரை; பக்-உஎ; ஆவிநன்குடிக்குப் போதினி என்பது ஒரு பழம்பெயராம். (அகம்-க) இஃது இக்காலத்துப் பழனி என மரு வியது. (செந்தமிழ். தொகுதி-உ. பகுதி-க.)

தான் முதலிய முற்றுக்களும் தோன்றும். இங்கே விகுதியின் வலி யிரட்டலாற் பகுதிப்பொருள் வேறுபிற்று. பரிதல் - அறுதல், வருந் தல். பரித்தல் - தாங்குதல். எறித்தல் - ஒளிவிடல். துணித்தல் - வெட்டல். வழித்தல் - மெழுகல். “ மங்கல வெள்ளை வழித்து ” (தணிகை.)

பிறவினை நோக்கி இரட்டுவன தெளி, பிரி, நெரி, கவி முதலி யன ; இவை தன் வினையிலே தெளிதல், பிரிதல், நெரிதல், கவிதல் தெளிந்து, தெளிய முதலியனவாயும், பிறவினையிலே தெளித்தல், பிரித்தல், நெரித்தல், கவித்தல், தெளித்து, தெளிக்க முதலிய வாயும் வரும்.

வடமொழியிலுள்ள த்ரு, (தா-தாங்குதல்) என்னும் பகுதி ஹ்ரு (ஹா-அழித்தல்) என்பதனை அரி என்பதும், பட-(படித்தல்) என்பதனைப் படி என்பதும் க்ருந்த் - (வெட்டு) என்பதனைத் துணி என்பதும், மதி - (கலங்குதல்) என்பதனை மடி என்பதும், பண - (துதித்தல்) என்பதனைப் பணி என்பதும், அர்த் - (நோப்படுத்தல்) என்பதனை அடி என்பதும், சல - (நடுங்கல்) என்பதனைச் சலி என் பதும் பெரும்பாலும் ஒத்திருத்தல் அறிதற்பாலது.

பரி, அழி முதலிய சில பகுதிகள் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சத்திலே பரீஇ. அழீஇ முதலியனவாயும் வரும். இவை பிறவினையாயுங் கொள்ளப்படும். “அறனழீஇ இயல்லவைசெய்தலின்” (வள்.)

இவ் விகுதிகளுள்ளே சில அல் என்னும் விகுதிபெற்றுப் பெய ராகும். அவை அரியல், நெரியல், ஒலியல், துணியல் முதலியன. அரியல் - மது. “ அரிபலார்ந்தவனந்தருளத்தினன் ” (தணிகை.) நெரியல் - மிளகு. “நெரியற் புணர்ப் பொறை தாங்கிய” (பெரும்பா.) ஒலியல் - யாறு. “அவ்வொலியற் கொப்பாகுவ தோவுவராழியதே” (கந்தபு.) துணியல் - துண்டம். “கொழுமீன் குறைஇய துடிக்கட் டுணியல்.” (மதுரை.)

சில பு என்னும் விகுதிபெற்றுப் பெயராகும். அவை பொழிப்பு, கவிப்பு, குறிப்பு, பொடிப்பு முதலியன. பொழிப்பு - பொலிவுடையது. லகரம் ழகரமாயிற்று. "பொழிந்தெழுகாதல்" என்னும் இராமாயணத்தையும் நோக்குக. பொழிந்து - பொலிந்து. கவிப்பு - குடை. குறிப்பு - கருத்து. பொடிப்பு - புளகம்.

சில சை என்னும் விகுதிபெற்றுப் பெயராகும். அவை வரிசை, பொலிசை, பரிசை முதலியன. வரிசை - பட்டம். "வரிசையானுயர நேகமண்டலமகிபர்." (பாரத.) பொலிசை - இலாபம். "பெண் பெற்ற பொலிசை பெற்றார்" (சிந்.) பரிசை - தாங்குவது.

ஈகாரவீற்றுப் பகுதிகளுள்ளே சீ என்பது வெறுத்தல், என்னும் பொருளிலே ரகரம் விரியப்பெற்றுச் சீர்த்தல், முதலியனவாய் வரும். "தூர்த்த தொரு காலைதனிற் சுந்தரி பொருளாய்ச், சீர்த்திடலும்" (கந்தபு.) சீத்தை, சீக்கு முதலியன சீ என்பதினின்று தோன்றிய பெயர்கள். சீத்தை—கீழ்மகன். சீக்கு—துரால்.

விடு, அடு, இடு, கொடு முதலிய பகுதிகள் சில இறந்தகாலத்திலே விட்டு, அட்டு, இட்டு முதலியன வாய் வலியிரட்டிவரும். உடு, எடு, தடு முதலிய சில இரட்டா. அடு என்பது சமீபித்தற்பொருளிலே இரட்டாது அடுத்து, அடுக்க, அடுத்த, அடுத்தான் முதலியனவாய் வரும்.

தகு, மிகு, அறு, உறு, இறு முதலிய பகுதிகள் தகவு, மிகவு, அறவு, உறவு, இறவு முதலியனவாய் நின்று பெயராகும். தகவு - நடுநிலைமை. மிகவு - மேம்பாடு. அறவு - அற்றம். உறவு - சுற்றம். இறவு - மரணம்.

தகு, நகு, படு, பகு முதலிய சில பகுதிகள் அல், ஐ முதலிய விகுதிகள் பெற்று தகல், தகை, நகல், நகை, படல், படை, பகல், பகை முதலியன வாய்ப் பெயராகும்.

வடமொழியிலுள்ள கூடி - கிட்டுதல், ஊடி - போதல், விப - பிரித்தல், தம - போதல், தவி - வருந்துதல். தப - அறைதல்.

என்னும் முதனிலைகளை அடு, இடு, விடு, தகு, தபு, தடு என்னும் முதனிலைகள் சிறுபான்மையில் ஒக்கின்றன.

உழு, எழு, முழு முதலிய சில பகுதிகள் உழால், எழால், முழால், தழால், முதலியனவாய் வந்து தொழிற் பெயராயும் பெயராயும் நிற்கும்.

தணிகைப்புராணம்.

உழாலிற்பொலிவண்டிவர்பூந்தொடைநான்றுளிர்பந்தர்
எழாலிற்பொலிமெல்லிசையுங்குரலுமெறிசெங்கை
முழாலிற்பொலிவண்முழவும்பாதமுறையோடுந்
தழாலிற்பொலிநாடகவெள்ளமிழ்துந்தழைவுற்ற.

உழால் - உழுதல். எழால் - எழுதல், யாழினிசை. முழால் - தழுவுதல். தழால் - தழுவுதல். இவை அளபெடையோடு வருதலுமுண்டு. மேலும் இரு, வழுவு, கெழு, தழுவு முதலிய இரீஇ, வழீஇ, கெழீஇ, தழீஇ முதலியனவாய் வந்து வினையெச்சமாதலும், இரீஇய, வழீஇய, கெழீஇய, தழீஇய முதலியனவாய் வந்து பெயரெச்சமாதலும், இரீஇயினர் முதலியனவாய் வந்து வினைமுற்றாதலுமுள. இரீஇ முதலியன சில விடத்திலே தன்வினையாயும், சிலவிடத்திலே பிறவினையாயுங் கொள்ளப்படும்.

சிறுபஞ்சமூலம்.

தொழீஇ யடவுண்ணார் தோழரிற் றுஞ்சார்
வழீஇய பிறர்பொருளை வெளவார்—கெழீஇக்
கலந்தபிற் கிழ்காணார் காணாய் மடவாய்
புலந்தபிற் போற்றார் புலை.

தொழீஇ - தொழுதுநிற்கும் ஏவன்மகடூஉ. வழீஇய - வழுவிய. கெழீஇ - கெழுமி. கெழுவல் - தழுவல்.

மருவு, தழுவு, ஒருவு, வெருவு முதலியன மரூஉ, தழூஉ, ஒரூஉ, வெரூஉ முதலியனவாய்வந்து பெயராதலும் உள. மரூஉ - மருவிய மொழி. தழூஉ - குரவைக் கூத்து. ஒரூஉ - ஒருவிவரும் எதுகை. வெரூஉ - அச்சம். பிற பின். இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

# ஔவையாரது நீதிநூல்கள்

(கஎ-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

(41) "𑌔𑌦𑍁𑌮𑍍𑌬𑌰𑌾𑌣𑌿 𑌪𑍁𑌷𑍍𑌪𑌾𑌣𑌿 𑌶𑍍𑌵𑍇𑌤𑌵𑌰𑍍𑌣𑌂 𑌚 𑌵𑌾𑌯𑌸𑌮𑍍।
𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑌪𑌾𑌦𑌂 𑌜𑌲𑍇 𑌪𑌶𑍍𑌯𑍇𑌨𑍍𑌨 𑌨𑌾𑌰𑍀𑌹𑍃𑌦𑌯𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍" ॥

இதன் பொருள்:—அத்திப்பூக்களையும், வெள்ளைக்காக்கையையும், தண்ணீரில் மீன்காலையும் காணினும் காணலாம்; பெண்களின் உள்ளக்கருத்தை அறிதல் ஆகாது.

"அத்திமலரு மருங் காக்கை வெண்ணிறமுங்
கத்துபுனன் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
கானுர் தெரியற் கடவுளருங் காண்பரோ
மானுர் விழியார் மனம்."

நீதிவெண்பா 55.

(42) "𑌨𑌯𑌤𑍍𑌨𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑌕𑍈𑌰𑌪𑌿 𑌦𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑌾𑌧𑍁𑌰𑍍𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌕𑌿𑌂 𑌮𑌰𑍍𑌦𑌿𑌤𑍋𑌪𑌿 𑌕𑌸𑍍𑌤𑍂𑌰𑍍𑌯𑌾 𑌲𑌶𑍁𑌨𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌸𑍌𑌰𑌭𑌮𑍍"॥

இதன் பொருள்:—அநேக கோடி முயற்சிகள் செய்யினும் துட்டனைச் சிட்டனாகச் செய்தல் முடியாது. கஸ்தூரியோடு கலந்தாலும் உள்ளி நறுமணங் கமழ்தலுண்டோ?

"அவ்விய நெஞ்சத் தறிவிலாத் துர்ச்சனரைச்
செவ்விய ராக்குஞ் செயலுண்டோ—திவ்யநற்
கந்தம் பலவுங் கலந்தாலு முள்ளியது
கந்தங் கெடுமோ கரை."

நீதி வெண்பா 21.

(43) "𑌶𑌤𑌂 𑌵𑌦𑌤𑍁 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌦𑌶 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌵𑌾𑌜𑌿𑌨𑌮𑍍 ।
𑌮𑌹𑌾 𑌸𑌹𑌸𑍍𑌰 𑌸𑌹𑌸𑍍𑌰𑍇𑌷𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌂 𑌦𑍁𑌰𑍍𑌜𑌨𑌵𑌜𑍍𑌜𑌯𑍇𑌤𑍍"॥

இதன் பொருள்:—வண்டியைக் காணின் அதற்கு ஐந்துமுழமும், குதிரையைக் காணின் அதற்குப் பத்துமுழமும், யானையைக் காணின் அதற்கு ஆயிரமுழமும் விலகிப்போதல் வேண்டும். துட்டரைக் கண்டாற் கண்ணிற்குத் தெரியாத தூரத்து விலகவேண்டும்.

"கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி."

நீதி வெண்பா 20.

(44) "துர்ஜந: பரிஹர்தவ்யோ வித்யயாலங்க்ருதோபி ஸந் ।
மணிநா பூஷித: ஸர்ப: கிமஸௌ ந பயங்கர: " ॥

இதன் பொருள்:—துஷ்டகுணமுடைய தீயோன் கல்வியிற் சிறந்தோனாகவிருப்பினும், அவனோடு சேராதொழிக. ஒளிமிகுந்த மாணிக்கத்தையுடைய பாம்பே யாயினும், அது கொடிய பாம்பேயன்றோ?

"தீயவர்பாற் கல்வி சிறந்தாலு மற்றவரைத்
தூயவரென் றெண்ணியே துன்னற்க—சேயிழையே
தண்ணொளிய மாணிக்கஞ் சர்ப்பந் தரித்தாலு
நண்ணுவரோ மற்றதனை நாடு."

நீதி வெண்பா 71.

(45) "வ்ருஸ்சிகஸ்ய விஷம் புச்சே மக்ஷிகஸ்ய ஶிரோ விஷம் ।
தக்ஷகஸ்ய விஷம் தந்தே ஸர்வாங்கம் துர்ஜநே விஷம்"॥

இதன் பொருள்:—தேளுக்கு விஷம் கொடுக்கிலும், ஈக்கு விஷம் தலையிலும், பாம்புக்கு விஷம் பல்லிலுமிருக்கும். துர்ச்சனருக்கு உடம்பு முழுவதும் விஷமேயாயிருக்கும்.

"ஈக்கு விடந்தலையி லெய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம்"

நீதி வெண்பா 18.

(46) "க்ருஷிதோ நாஸ்தி து³ர்பி⁴க்ஷம் ஜபதோ நாஸ்தி பாதகம்।
மௌநேந கலஹோ நாஸ்தி நாஸ்தி ஜாக³ரதோ ப⁴யம்॥"

இதன் பொருள்:—தக்கதொழில் (பயிர்த்தொழில்) செய்வார்க்குப் பஞ்சமில்லை; விடாது செபஞ் செயவார்க்குப் பாவமில்லை; வாய் வாளாதிருப்பார்க்குக் கலக மில்லை! நித்திரைசெய்யாது விழித்திருப்பாருக்குப் பயமில்லை.

"உற்றதொழில் செய்வோர்க் குறுபஞ்ச மில்லையாம்
பற்றுசெபத் தோர்க்கில்லை பாவங்கண்—முற்று
மவுனத் தோர்க்கில்லை வருகலகந் துஞ்சாப்
பவனத் தோர்க்கில்லை பயம்."

நீதி வெண்பா 44.

(47) "க²லாநாம் கண்டகாநாம் ச த்³விவிதை⁴வ ப்ரதிக்ரியா।
உபாநந்முக²ப⁴ங்கோ³ வா தூ³ரதோ வா விஸர்ஜநம்"॥

இதன் பொருள்:—இருமலும் துர்ச்சனரு மொப்பாவார்கள். எப்படியெனில், இருமல் தித்திப்பினால் அதிகப்படும்; கசப்பினால் அடங்கும். துர்ச்சனரும் இனிய மொழிகளால் மிஞ்சுவார்கள்; கடுஞ்சொற்களால் அடங்குவார்கள்.

"துன்னு மிருமலுந் துர்ச்சனரு மொக்குமே
மன்னு மினிமையான் மாறுகிப்—பன்னுங்
கடுவுங் கடுநேர் கடுமொழியுங் கண்டாற்
கடுக வசமா கையால்."

நீதி வெண்பா. 22.

(48) "அஸந்துஷ்டா த்³விஜா நஷ்டா: ஸந்துஷ்டாஶ்ச பார்தி²வா:।
ஸலஜ்ஜா க³ணிகா நஷ்டா நிர்லஜ்ஜாஶ்ச குலாங்க³நா"॥

இதன் பொருள்:—கிடைத்த பொருளிலே திருப்தியடையாத வந்தணரும், கிடைத்த பொருளிலே திருப்தியடைந்த புரவலரும், நாணமுடைய வேசியரும், நாணமில்லாக் குலமகளிரும் தாழ்வடைவார்கள்.

"பெற்றமையு மென்னும் பெரியோரும் பெற்றபொருண்
மற்றமையு மென்றே மகிழ்வேந்து—முற்றியநன்
மானமிலா வில்லாளு மானமுறு வேசியரு
மீன முறுவா ரிவர்."

நீதி வெண்பா. 14.

(49) "கோகிலாநாம் ஸ்வரோ ரூபம் ரூபம் பாதிவ்ரத்யம் யோஷிதாம்।
தயா ரூபம் விதுஷாம் க்ஷமா ரூபம் தபஸ்விநாம்"॥

இதன் பொருள்:—குயில்களுக்கு அழகு இன்னோசை; பெண்களுக்கு அழகு கற்பு; கற்றோர்க்கு அழகு இரக்கம்; அருந்தவமுடையார்க்கு அழகு பொறுமை.

"அன்னமனை யாய்குயிலுக் கானவழ கின்னிசையே
கன்னன்மொழி யார்க்கழகு கற்பாமே—மன்னுகலை
கற்றோர்க் கழகு கருணையே யாசைமயக்
கற்றோர்க் கழகுபொறை யாம்."

நீதி வெண்பா. 66.

(50) "காகஃ க்ருஷ்ணஃ பிகஃ க்ருஷ்ணஃ கோ பேதஃ பிககாகயோஃ।
வஸந்தகாலே ஸம்ப்ராப்தே காகஃ காகஃ பிகஃ பிகஃ"॥

இதன் பொருள்:—காக்கை கருநிறமுடையது; குயிலும் கருநிறமுடையது; காக்கைக்கும் குயிலுக்கும் பேதம் யாது? இளவேனிற் காலம் வந்துழுங்காற் காக்கை காக்கையே, குயில் குயிலேயாம்.

"வாக்குநயத் தாலன்றிக் கற்றவரை மற்றவரை
யாக்கைநயத் தாலறிய லாகாதே—காக்கையொடு
நீலச் சிறுகுயிலை நீடிசையா லன்றியே
கோலத் தறிவரோ கூறு."

நீதி வெண்பா. 87.

(51) குபத்யம் யதி ஸேவேத [illegible] பவதஃ காதஃ।
ஸாதவே [illegible] வ்ருத்திஃ ஸஞ்சிதாயோரபி நஶ்யதி"॥

இதன் பொருள்:— ஆபத்துவரின் அதனை நீக்கிக்கொள்ளும் பொருட்டுப் பொருளைக் காப்பாற்றல் வேண்டும். இலக்ஷ்மீகடாட்ச முடைய ஸ்ரீமான்களுக்கு ஆபத்தேன் வரும்? (என்றால்), இலக்ஷ்மீ கடாக்ஷம் குறைந்து அத்திருமகள் நீங்கினால் வருமன்றோ? (அவ்வா றாயின்) கூட்டிவைத்த பொருளும் அடியோ டழிந்துபோமன்றோ?

"ஆபத்து வந்தா லரும்பொருடான் வேண்டுமே
யாபத்தேன் பூமா தருகிருந்தா—லாபத்து
வந்தா லவளு மருவாம லெப்பொருளு
மந்தோ வுடன்போ மறி."

நீதி வெண்பா. 45.

(தொடரும்.)

டி. எஸ். குப்புஸ்வாமி சாஸ்திரி.

---

உ

# புட்பபந்தம்.

---

(உச-ஆம் பக்கத்தொடர்ச்சி)

சுக்கிரன், புதன், சந்திரன் இவர்களுக்குமுன் அங்காரகன் நடந்தால் அனாவிருஷ்டி யுண்டென்றும், புதன், சந்திரன், அங்காரகன் இவர்களுக்குமுன் சுக்கிரன் நடந்தால் மழையுண்டென்றும், சந்திரன், சுக்கிரன், அங்காரகன் இவர்களுக்குமுன் புதன் நடந்தால் மழையில்லையென்றும், அங்காரகன், புதன், சுக்கிரன் இவர்களுக்கு முன் சந்திரன் நடந்தால் மழையுண்டென்று மறிக.

குரு அதிசாரனையும் சனி வக்கிரனையுமிருக்குங் காலத்திற் பிரஜைகளுக்குத் துர்ப்பிக்ஷத்தினால் ஆஹாகாரமுண்டு.

குருவிற்கு ஏழிற் சுக்கிரனிருந்தாலும் அல்லது சூரியனுக்கு ஏழிற் குரு இருந்தாலும் அனாவிருஷ்டி யுண்டென்ப.

ஜலராசியிற் சந்திரனிருந்து அவற்கு 5, 7, 9-ற் சனியுங் குஜனும் சேர்ந்திருந்தாலும் தனித்திருந்தாலும் நல்லமழையுண்டு.

சுக்கிரன், குஜன், புதன், சந்திரன் இவர்கள் ஜலராசிகளிலிருந்தால் அதிவிருஷ்டி யுண்டென மநு சொல்வர்.

ஒரு வருஷத்திற் குரு மூன்று இராசிகளிற் சஞ்சரித்தால் ஏழு கோடி பிரேதங்கள் விழும்.

கார்த்திகை, மகம், அவிட்டம், அநுடம் இவைகளுக்குச் சமுத்திர நக்ஷத்திரங்களென்று பெயர்.

திருவாதிரை, புனர்பூசம், ஹஸ்தம், சித்திரை, பூராடம், உத்திராடம்,உத்திரட்டாதி, இரேவதி இவைகளைப் பர்வதநக்ஷத்திரமென்ப.

அஸ்வதி, மிருகசிரம், பூசம், உத்திரம், ஸ்வாதி, மூலம், திருவோணம், பூரட்டாதி இவைகளைக் குக்ஷி நக்ஷத்திரங்களென்ப.

உரோகணி, ஆயில்யம், பூரம், விசாகம், கேட்டை, அபிஜித்து, சதயம், பரணி இவைகளைத் தீரநக்ஷத்திரங்கள் அல்லது நதி நக்ஷத்திரங்கள் என்ப.

பருவத நக்ஷத்திரங்களில் அநாவிருஷ்டியும், குக்ஷி நக்ஷத்திரங்களில் அதிவிருஷ்டியும், தீரநக்ஷத்திரங்களிற் கண்ட விருஷ்டியும், சமுத்திர நக்ஷத்திரத்திற் சுவிருஷ்டியுமுண்டு.

சுக்கிரன், ஸ்வாதி, விசாகம், அநுஷம் இம்மூன்று நக்ஷத்திரங்களிற் கிழக்கிலும், மகமுதல் ஐந்து நக்ஷத்திரங்கள் வரை மேற்கிலும் பிரகாசித்துக்கொண்டிருந்தால் மழையில்லையென்றும், ஸ்வாதிமுதல் மூன்று நக்ஷத்திரங்கள் வரை மேற்கிலும் மகமுதல் ஐந்து நக்ஷத்திரங்கள் வரை கிழக்கிலும் பிரகாசித்துக்கொண்டிருந்தால் மழையுண்டென்று மறிக.

ஸ்வாதித்திரயத்தில் மேற்கிலும் மகபஞ்சகத்திற் கிழக்கிலும் சுக்கிரன் பிரகாசித்துக்கொண்டிருக்கும்போது அவற்கு வக்கிரமுண்டானல் மழையில்லை.

ஆயில்யம், விசாகம், பூரம், பூராடம், பூரட்டாதி இந்நாட்களிற் குஜசஞ்சார காலமாயின் நல்ல மழையுண்டு.

ஸ்வாதி, மகம், கேட்டை, திருவாதிரை, உரோகிணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி இந்த நாட்களிற் குஜசஞ்சாரமுண்டேல் சம்வர்த்தகாதி மேகங்கள் கெட்டு அனுவிருஷ்டியுண்டாகும்.

ஹஸ்தமுதல் ஆறுநாட்கள்வரை புதசஞ்சார காலமாயின், ஜனங்கட்குச் சுபிக்ஷமும் க்ஷேமமும் ஆரோக்கியமும் உண்டாய்ப் பசுக்களுக்குப் பீடையுண்டாகும்.

ஜேஷ்டமாத சுக்கிலபக்ஷத்தில் திருவாதிரை முதற் பத்துநக்ஷத்திரங்கள்வரை மழைபொழிந்தாற் பின் மழைபெய்யாது. மழை பொழியாவிடின், பின்பு நல்ல மழையுண்டு.

சூரியன் மிருகசிரத்திலிருக்கும்போது மழைபெய்தால் அது முதல் இரவி ஆயில்யத்திலிருக்கும்வரை நல்ல மழையுண்டு. மகத்திலிருக்கும்போது இடி இடித்தால் அதுமுதற் சித்திரையிலிருக்கும் வரை நல்ல மழையுண்டு. ஸ்வாதியிலிருக்கும்போது மின்னினுல் அதுமுதல் மூலத்திலிருக்கும் வரை நல்லமழையுண்டு.

கார்த்திகை மாதத்தின் அமாவாசியையிற் சுவாதியாவது விசாகமாவது இருந்து அதனேடு ஞாயிறு, திங்கள், செவ்வாய், வியாழன் இத்தினங்களி லொன்றிருந்தால், அப்போது காற்று மழையுண்டாகி மனுஷர் - பசுக்கள் - மிருகங்க ளிவர்களுக்கு நாசமுண்டாகும்.

கார்த்திகை மாதத்தின் அமாவாசியையில் ஸ்வாதி விசாகங்களிற் செவ்வாய்,புதன், வியாழன், ஞாயிறு, சனி இவ்வாரத்திலொன்று கூடினுற் பெருங்காற்றும் மழையுமுண்டாகி, விருக்ஷங்கள் சாய்ந்தும் மலைகள் சரிந்தும் கன்மழைத்தாரைகள் விழுந்தும் மனிதர் பசு பக்ஷி முதலானவர்கள் நாசமடைவார்கள்.

கார்த்திகை மாதத்தின் அமாவாசியை யன்று விசாக நக்ஷத்திரமும் ஞாயற்றுக்கிழமையும் அதிகண்ட யோகமும் கூடினுற் பெருங்காற்றும் பெருமழையுமுண்டு.

சிங்கமாதம் முதற்றேதி மழைபெய்தால் அந்த மாதத்தில் மழையில்லை. கடகமாத முதற்றேதியில் மழைபெய்யாவிட்டால் அந்த மாதத்தில் மழையில்லை. கன்னியாமாசம் முதற்றேதி மழைபெய்தால் அந்த மாதத்தில் அதிவிருஷ்டியுண்டு. துலா மாதம் முதற்றேதி மழைபெய்தால் அந்த மாதத்தில் நல்ல மழையுண்டு.

சூரியன் ஆதிரையிற் பிரவேசிக்கும்போது மழை பெய்தால் அதுமுதல் 60-நாளைக்கு மழையில்லை. ஆதிரையிற் பிரவேசிக்கும் போது பகற்காலமாயிருந்து மழைபெய்தால் தோஷமில்லை.

திருவாதிரையிற் சூரியன் பிரவேசிக்குங் காலத்தில் அவற்குக் கேந்திர திரிகோணத்திற் குரு சந்திரர் கூடியிருந்து சுக்கிரன், குரு சந்திரர்களைப் பார்த்தால் அந்த வருஷத்தில் மேகங்கள் உண்டாகி நல்ல மழை பெய்யும்.

மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி இம்மாதங்களில் என்று அதிகக் குளிர்ச்சியாயும், அதிக உஷ்ணமாயும், ஆகாயம் நிர்மலமாயும், மந்த வாயு அல்லது அதிகக் காற்றும் இருக்கிறதோ அன்று தவளை கத்தினாலும் சூரிய மண்டல சந்திர மண்டலங்களில் மயிலிறகுச்சாயலாயிருந்தாலும் அன்றுமுதல் மூன்று நாட்கள் வரைக்கும் நல்ல மழைபெய்யும்.

சூரியனுக்கும் சந்திரனுக்கும் முதல் யாமத்திற் பரிவேடமிருந்தால் லோகபீடை. இரண்டாம் யாமத்திற் சுவிருஷ்டி. மூன்றும் யாமத்திற் சுபிக்ஷம். நான்காம் யாமத்திற் சுவிருஷ்டி. குருவையும் சந்திரனையும் சேர்த்துப் பரிவேட மிட்டிருந்தாற் பிராமணோத்தமர்கட்குப் பீடை. சனி, குஜன் இவர்கள் பால் அவ்விதமிருப்பிற் கலகம். புதனையுஞ் சந்திரனையும் சேர்த்துப் பரிவேட மிட்டிருந்தால் ஸ்திரிகளுக்கு நாசம். சுக்கிரனையுஞ் சந்திரனையும் சேர்த்துப் பரிவேடம் சுற்றியிருந்தால் எல்லாவற்றிற்கும் நாசமுண்டாகும்.

சித்திரை வைகாசிகளில் இரவியையாவது மதியையாவது பரிவேடமிட்டிருந்தால், அரசர்களுக்குள் யுத்தம் இராஜ்ஜியத்திற்குக் கெடுதி. ஆனி, ஆடிகளில் அவ்விதங் காணப்பெறுமேல் மழைக் குறைவுண்டாகும். மார்கழி, தை மாதங்களில் இருந்தாற் பசு நாச

முண்டு. மாசி பங்குனிகளிலிருந்தால் திருடர் பயம், அக்கினி பய மிவையுண்டு.

சூரிய க்ஷேத்திரத்திற் கிரகங்கள் சேர்ந்தால் மழையில்லை. சந்திர க்ஷேத்திரத்திற் சேர்ந்தால் மழையுண்டு. செவ்வாய் க்ஷேத்திரத்திற் சேர்ந்தால் யுத்தமுண்டு. புதக்ஷேத்திரத்திற் சேர்ந்தாற் பெருங் காற்றினாற் சேதமுண்டாகும். குருக்ஷேத்திரத்திற் சேர்ந்தால் ஆரோக்கியமுண்டாகும். சுக்கிரக்ஷேத்திரத்திற் சேர்ந்தால் அதிக மழையுண்டு. சனிக்ஷேத்திரத்திற் சேர்ந்தால் வியாதியாற் பய முண்டு.

இரண்டு கிரகங்கள் சேர்ந்தால் ஜனங்களுக்குக் கஷ்டம்.

3-கிரகங்கள் சேர்ந்தால் அரசர்களுக்குப் பீடை.

4-கிரகங்கள் சேர்ந்தாற் தேசத்திற்குப் பீடை.

5-கிரகங்கள் சேர்ந்தாற் திரிலோகத்திற்கும் பீடை.

6-கிரகங்கள் சேர்ந்தால் ராச்சியத்துக்குப் பீடை.

7-கிரகங்கள் சேர்ந்தால் ராச்சியத்துக்குப் பீடை.

* 8-கிரகங்கள் சேர்ந்தால் ஜனசஞ்சாரமில்லாமல் நாசமுண்டாகும்.

## ஜன்மராசிகளிற் கிரகங்கள் சேர்வதின் பலன்.

ஜன்ம லக்கினத்திலாவது ஜன்ம ராசியிலாவது கிரகங்கள் கூடி யிருந்தால் அபமிருத்யு, 2-ல் தனநாசம், 3-ல் சம்பத்து, 4-ல் தன நாசம், 5-ல் அபமிருத்யு, 6-ல் சத்துருநாசம், 7-ல் பாக்கியஹானி, 8-ல் மிருத்தியு, 9-ல் தருமநாசம், 10-ல் கர்மநாசம், 11-ல் இலாபம், 12-ல் மிருத்து. கெட்ட பலம் ஆறு மாதங்களுக்கு முன்னே நடக்கும். (கெட்ட பலனென்பது இரண்டாமிடத்திற்குப் பின் சம்பவிக்கும்.) எந்த ராசியிற் கிரகஞ் சேர்கிறதோ அந்த ராசியில் அவ்விராசியதிப னும், அவ்விராசியினொன்பதாமதிபனும் சேர்ந்திருப்பின், தோஷ மில்லை.

---

* கற்பாந்த காலத்தில் மட்டுஞ் சம்பவிக்கு மன்றி மற்றைக்காலத்தி லிவ் விதஞ் சம்பவித்தல் அரிது.

ஜன்மராசியிலாவது ஜன்மலக்னத்திலாவது கூடக்கிரகங்களிருந் தாலும் கிரகணம் பிடித்தாலும், ஜபஹோமங்கள் விதிப்படி செய்து தானங்கொடுக்கவேண்டியது.

சித்திரை, விசாகம், மிருகசிரம் இந்த நக்ஷத்திரங்களில் அங்கார கனிருந்தாலும் உதயமானாலும் நல்ல மழை.

மழைக்காலத்திற் சுக்கிரனுக்கு 7-ற் சந்திரனிருந்து சுக்கிரற்குச் சுபர்களின் பார்வையிருந்தாலும் அல்லது அவற்கு 5, 7, 9-ற் சனி யிருந்தாலும் விசேஷ மழையுண்டு.

குரு அஸ்தமித்தாலும், சுக்கிரன் உதித்தாலும், அங்காரகன் அஸ்தமித்தாலும் மழைக்காலத்தில் மழையுண்டு. சந்திரற்கு 5, 7-ற் சனியாவது செவ்வாயாவது இருந்தாற் காற்று மழையுமுண்டாகும்.

சனி சந்திரன் சுக்கிரன் மூவரும் ஓரிராசியிலிருந்தாற் கௌதமி நதிக்குத் தெற்கேயுள்ள தேசத்திலும், காவிரிக்கு வடக்கேயுள்ள தேசத்திலும் நல்ல மழையுண்டு.

அஸ்வதி, பரணி யிவற்றிற் சூரியன் சஞ்சரிக்கையிற் சிறந்த மழைபெய்தால் தேசத்திற்குச் சுபிக்ஷம், க்ஷேமம் இவையுண்டு. கார்த்திகையில் இரவியிருக்கும்போது மழைபெய்தாற் பேதி யம்மை முதலிய ஈதிபாதைகள் உண்டாகும். உரோகிணி, மிருகசிரங்களி லிருக்கையில் மழை பெய்தாற் பயிர் விருத்தியுண்டு. திருவாதிரைப் பிரவேசகாலத்தில் மழைபெய்தா லதுமுதல் 11-மாதங்கள்வரை மழையில்லை.

தூமகேது - குடை, கொடி, பாணம், வீணை, சாமரம், தோமரம் பாம்பு இவைபோல ஆகாசத்திற் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு இந்நான்கிடங்களிலுந் தோன்றினுற் றேசத்தில் க்ஷாமம் உண்டா கும். (சிவப்பு, புகை, கறுப்பு, வெண்மை, உதிரம், மஞ்சள் வர்ண முடையவைகளாகவுந் தூமகேதுக்கள் தோன்றும்.)

இவற்றுள் வெண்மை நிறத்தோடு உதிரவர்ணங்கலந்துள்ள தூம கேதுத்தோன்றில் சுபிக்ஷமுண்டு. புகைவர்ணத்தோடு ரக்தவர்ண முள்ள தூமகேது தோன்றினல் துர்ப்பிக்ஷமுண்டு. கறுப்பாய்த் தோன்றினல் யுத்தமுண்டு.

சுவேதகேது கிழக்கிலும் மேற்கிலுந் தோன்றினாற் சுபிக்ஷம், சுவிருஷ்டி யிவையுண்டு. தெற்கிலும் வடக்கிலுந் தோன்றினாற் பசு நாசமுண்டு. வாயு திக்கிலும் ஆக்நேயத்திலுந் தோன்றினால் ஜனங்களுக்கு ரோக பீடையுண்டு. தென்மேற்கிலும் வடகிழக்கிலும் தோன்றினால் யுத்தமுண்டாகும். வால்நக்ஷத்திரம் தோன்றினால் யானை முதலிய பெரிய ஜெந்துக்களுக்கு நாசமுண்டு. இது தலைகீழாகத் தோன்றினால் அரசர்களுக்குக் கெடுதியுண்டு. குறுக்காகத் தோன்றினாற் பசு நாசமுண்டு.

அஸ்வதி, பரணி, விசாகம், கேட்டை இவை அங்காரக நக்ஷத்திரங்கள்.

திருவாதிரை, புனர்பூசம், ஹஸ்தம், சித்திரை, உத்தரம் இவை புதநக்ஷத்திரங்கள்.

மூலம், பூராடம், உத்திரட்டாதி, இரேவதி இவை குரு நக்ஷத்திரங்கள்.

மிருகசிரிடம், உரோகிணி, கார்த்திகை, ஸ்வாதி, விசாகம் இவை சுக்கிர நக்ஷத்திரங்கள்.

மகம், பூரம் இவை சூரிய நக்ஷத்திரங்கள்.

பூசம், ஆயில்யம் இவை சந்திர நக்ஷத்திரங்கள்.

உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி இவை சனி நக்ஷத்திரங்கள்.

முற்றும்.

——⊱(:o:)⊰——

## புட்பபந்தப் பிழைதிருத்தம்.

"செந்தமிழ்"ப் பத்தாந் தொகுதி ௪௯௪-ஆம் பக்கம் ஏழாவது பத்தி இரண்டாவது வரியிற் சேத்து என்றிருப்பதைச் சேவ்வையாய் என்று திருத்திக்கொள்க.

ப. அ கிருஷ்ணஸ்வாமிப் பிள்ளை,

தரங்கம்பாடி.



ஸ்ரீ:

# VIII.

# பாண்டிய சாசநம்

———:o:———

## கோநேரின்மைகொண்டான் சக்ரவர்த்தி காலம்.

ஸ்ரீ-ஊ-வநசககவாததி கோனேரி(ன்)மைகொணடான திருககுரு கூா பொலிஞசு (29) நினறருளின பரமஸவாமிகள கோயில திருப பதி ஸ்ரீவைஷவாகளுககு இப பொலிஞசு (30)....................ச செமபினுடடு கிழைககோடுமேலூரான மதுரோதயநலலூா அரையன திருநாடுடையானன நிலகஙகரையாபோ (31) நல அரையன பூவணன வேணவுடையாா கணட திருநாடுடையான கணட சந (32) ககும இவவேணவுடையான பிறநத உததரடடாதி நாள தீஊடூ்ம வு ஸா நிபபதாகக கணட சி (33) ததிரைத திருநாள பதினைஞசுககும திருப படி மாறறுளளிடடு வேணடு நிமநதஙகளு (34) ககும திருநாள படிககும திருவழுதிவளநாடடு சிவைகுநதமான ராஜேநதிர ஸூதுா வேதி மஙகலததது கிழபிடாகை....................(35) கச.................. தமாயபபோநத காவாலிககுக கிழெலலை இவிராஜேநதிர ஸூதுவேதி மஙகலததது ஸபெஹையாா பறறுன கிழைககாவாலிககும சிஙகனகுறிச சிப பறறுககும பெருஙகுளமான உததமபாணடிய நலலூாககு நீா பாயகிற பெருஙகா (37) லுககும மேறகும தெனனெலலை திருத துலலிலிமஙகலததது அரவிநதலோசனன தேவதானததுககும இவி ராஜேநதி ஸூது (28) வெதிமஙகலததது ஸபெஹையாா பறறுன புளி யறைபபறறுககும பூனைககுடியான பறறுககும வடககும மேலெலலை திருககுரு (39) கூா ஐய-ஹுவிதானகள மடபபுறமான புதலூாக கனாககும இவிராஜேநதிர ஸூது-ஊ-வெதிமஙகலததது ஸபெஹையாா பற றுககும (40) கிழககும வடவெலலை இவிராஜேநதிர ஸூதுவெதிமஙக லததது நினறும பெருஙகுளமான உததமபாண்டியநலலூாககுப போ (41) கிற பெருவழிககுத தெறகும ஆக நானகெலலைக குடபபட்ட

நிலம முனனுடையாரும ஜீவிதமும முதலும தவிாதது காராண (42) மை மியாடசியும கடமையும அநதராயமும விநியோகமும தருவதான அசசும காரிய வாராடசியும வெடடி பாடடமும பஞசுபீ(43) லிசாநது விககிரகபபெறும பொனவரியும மறறும எபபெறபடடினவும உடபட பதிஞெனருவதின எ திராம ஆணடுமுதல தேவதா (44) ன இறையிலி யாக இடபபெறவேணுமெனறு ஐயன மழவராயன நமககுச சொனன மையில இப பொலிஞசுநினறருளினபரம (45) சுவாமிகளுககு இந நிலககரையாபோல இவ வேணுவுடையாா கணட திருநாடுடையான சநதிககும இவ வேணுவுடையாா பிறந (46) த உததரடடாதி நாள தீாததம பிரசாதிபபதாககக கணட சிததிரைததிருநாள பதினெஞசுக கும திருபபடி மாறறுளளிடடு வேணடு நிபநதங்க

தெற்குக் கடைசிப்பத்தி.

(1) ஞுககும திருநாள படிககும இவிராஜேநதிர ஶூதுவெ-ஷ்தி மஙகலததுக கீழபிடாகையில எமூா கைகொள(ர்)(2)ஜீவிதமாயபபோ நத காவாலிககுக கிழெலலை இவிராஜேநதிரச ச்தாவே திமஙகலதது ஸபெஹையாாப (3) றுன கீழைககாவாலிககும சஙகனகுறிசசி பற றுககும பெருஙகுளமான உததமபாணடிய நலலூரு (4) ககு பாயகிற பெருஙகாலுககுமேறகும தெனனெலலை திருததலை விலலிமஙகலதது அரவிநத(5)லோசனனதேவதான ததுககுமஇவிராஜேநதிர ஶூதுவெ-ஷ் திமஙகலதது ஸபெஹையாா பறறுன (6) புளியறைபறறுககும பூனைக குடியான பறறுககும வடககும மேலெலலை திருககுருகூா ஸ்ரூஹ விஹா (7) னகள மடபபுறமான புதுவூாக கரைககும இவிராஜேந திர சதுவெ-ஷ்திமஙகலதது ஸபெஹையாா பறறுககு கி (8) ழககும வட வெலலை இவிராஜேநதிர ஶூஷ-வெஷ்மஙகலதது நினறும பெருஙகுள மான உததமபாண (9) டிய நலலூருககுபபோகிற பெருவழிககுத தெறகும ஆக நானகெலலைககுடபடட நிலம முனனுடையாரும (10) ஜீவிதமும முதலுமதவிா (த்) து காராணமைமியாடசியும கடமையும அநதாயமும விநியோகமும தருவ (11) தான அசசும காரிய வாராடசியும வெடடி பாடடமும பஞசுபீலிசநது விககிரகபபெறும பொனவரியு (12) மறறும எப பெறபடடினவும (?) இவாணடுமுதல

தேவதான இறையிலியாக இடடு வரியிலகக எழுதிடட (13) உளவரியும நம-ககெழுவிபபதாக சொனனேம கைககொணடு இபபடி சநதிராதிததவற செலவதாக கலலிலும செ (14) மபிலும வெடடிவிததுக கொளக இவை அருமபொற கூறறததுப புதுபபேரகளுத தாழவான ஆணடபி (15) ரான அழகனன அழகிய பாணடியவிழுபபரையன எழுதது. யாணடு பதினெனருவது நாள சாகமச-ளுல (16) இவை அணடநாடடுப பெருமணலூா அரையன முடிவழஙகும பெருமாளான விககிரமபாணடிய உததரமந (17) திரி எழுதது இவை செவிருககைநாடடு சககரபாணிநலலூா அரையன விரத முடிததானன பலலவராயன எழுதது.

ஆழ்வார் திருநகரியில் ஜோநப்பிரான் என்னும் ஆதிவராகப்பிரான் சந்நிதியின் கிழைச்சுவர், வடசுவர், மேலைச்சுவர்களிலுள்ள சாசனங்கள் முற்றிற்று.

A. M. சடகோபராமாநுஜாசார்யன்,

திருச்சிராப்பள்ளி நாஷநல் ஹைஸ்கூல்.

---

உ

## வானசாஸ்திரம்.

(பத்தாந்தொகுதி ருசுஅ-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

சந்திரனிலுள்ள எரிமலைகள் பூமியிற் காணப்படும் எரிமலைகட்குக் கொஞ்சமும் இணைத்தனவாகக் காணப்படவில்லை. அவைகளுடைய உற்பாதத்தால் அனேகவிடங்கள் உட்குழிவுடையனவாய்ச் சூரியகிரணமே படாதனவாயிருக்கின்றன. மலைகளும் பரந்து நீண்டிருப்பதோடு அநேக கொடுமுடிகளை யுடையனவாயுமிருக்கின்றன. அவைகளுள் உயர்ந்தவை தக்ஷிண துருவத்தை யடுத்திருக்கின்றன. மொத்தத்தில் பிர், மாட்ளர் என்பவர்களா லளக்கப்பட்டவைகள் 1095

சிகரங்களென்றும், அவற்றில் 39 ஐரோப்பாதேசத்திற் பெரிய பர்வதமான ஆல்ப்ஸ்மலையி னுச்சியிலிருக்கும் பிளான் சிகரத்தைக் காட்டிலும் பெரியனவாயிருக்கின்றனவென்றும் 6500 கெஜ உயரமுடையனவென்றும் சொல்லப்படுகின்றன. இம்மலைகளைச் சுற்று மதில்களாகவுடைய அநேக சமதரைகள் புலப்படுகின்றன. அவைகளின் குறுக்களவு 100 முதல் 120 மைல்கட்குக் குறையாதிருப்பதாகத் தெரிகின்றது. ஷிக்கார்டென்ற இடமானது 133 மைல் குறுக்களவுடையதாயும் 3500 கெஜ வுயரமுடைய சுற்றுமதிலையுடையதாயுமிருக்கின்றது. அம்மதில்களுக்கு மத்தியிலுள்ள தரையில் ஒருவன் நின்றுகொண்டு நாற்புறங்களையுஞ் சுற்றிப் பார்ப்பானாயின் அவன் அதனுச்சியைக் காண்பதரிதாகும். இவைகளெல்லாவற்றையும் விடக் கண்டோர்கள் அதிசயிக்கத்தக்கனவாக இரண்டு வஸ்துக்கள் புலப்படுகின்றன. அவை ஒளிப்பட்டைகளும், கீற்றுக்களுமாம். அவை பூர்ணிமையிற் செவ்வனே காணப்பட்டு, பின்பு அவ்வளவு திருப்திகரமாகத் தோன்றுவதில்லையாம். கீற்றுக்களை முதலிற் சந்திரனுளோடும் நதிகளென்றெண்ணியதுண்டு. பிறகு அவை மேடு பள்ளம் எங்கும் முறையின்றிச் செல்வதைக்கொண்டு இன்னதென நிச்சயிக்க முடியாதிருப்பதுடன் அவை தலையிலும் கடையிலும் குறுகியும், மத்தியில் அதிக அகலமுடையனவாயுமிருக்கின்றனவாம்.

இவ்வுலகிற் காணப்படுவதுபோலக் காற்றும் நீரும் சந்திரனிடத்து இருப்பனவாகத் தோற்றவில்லை. காற்றும் நீரு மிருக்குமாயின், சூரியவெப்பம் படுவதற்கேற்ற புகைப்படலங்கள் உண்டாக வேண்டும். சந்திரன் பூமிக்குச் சமீபமாகவிருப்பதால் இருநூறு கெஜ அகலமுள்ள புகைப்படலமுண்டாயினும் நமக்குத் தோற்றுவது நிச்சயம். மேலும், சூரியகிரணம் சந்திரனது மாதமான $29\frac{53}{100}$ நாட்களுட் பாதிக்காலமாகிய $354\frac{1}{2}$ மணிநேரத்திற்கு இடைவிடாது படுவதால் எவ்விதமான புல் பூடு நீர் நிலைகளும் வறண்டுவிடும். நீர் வறண்டாற் புகைப்படலமாவதைத்தவிர்த்து வேறுவிதமாகச் செல்ல ஏதுவில்லை. ஆதலாற் சந்திரனில் நீர் இல்லையெனத் தீர்மானிக்கலாம். எப்போது ஜலமில்லையோ அப்போது காற்றுமில்லையென்பது நிதர்சனம். ஏற்கனவே சொல்லப்பட்ட சமுத்திரங்களென்பவை ஒரே சம பரப்பினை யுடையனவாயிருப்பதால், அவைகள் ஒருக்காற் சமுத்

திரமாயிருந்து பூமி காலபேதவியல்புக்குட்பட்டு மாறுவதுபோல் அவைகளும் பேதத்தையடைந்திருக்கலாமென ஊகிக்கப்படுகின்றன.

---

## செவ்வாய்.

நமது பூமிக்கு அடுத்தபடியாகச் சூரியனை வலம்வருவது அங்காரகனேயாம். இக்கிரகமானது சிவந்த வர்ணமாகக் காணப்படுமாயினும் தூரதிருஷ்டிகொண்டு பார்க்கும்போது அதன் விளிம்பு சற்று மஞ்சள்கலந்த நிலநிறமுடையதாகத் தோற்றும். இக்கிரகம் பார்ப்பவர் கண்கள் கூசுந் தன்மையுடையதன்று. நக்ஷத்திரமண்டலத்திலுள்ள நக்ஷத்திரங்களைப் பார்க்கும்பொழுது இச் செவ்வாயின் சிவந்த நிறத்தால் இதனைக் கண்டுபிடித்தல் சுலபமேயாம். இதற்குண்டாயிருக்கு மொளியும் மற்றைய கிரகங்கட் கிருப்பதுபோற் சூரியனிடத்திருந் துண்டாகியதேயாம். சந்திரனைக்காட்டிலும் இக்கிரகம் பூமிக்குச் சற்றுத்தூரத்திலிருப்பினும் இதனைச் சோதிப்பதே ஒரு சந்தோஷமான காரியமென மேல்நாட்டு வானசாஸ்திரிகள் என்னுகின்றனர்.

இதன் சீதோஷ்ணஸ்திதி பூமியைவிடச் சௌக்கியமானதாகவிருப்பதால் அங்கு ஜீவராசிகள் வசிக்கக்கூடுமென இப்பொழுது அதனுண்மை பரிசோதிக்கப்பட்டு வருகிறது. அங்காரக மண்டலத்தின் குறுக்களவு 4363-மைலென்றும் சிலர் ஏறக்குறைய 5000-மைலென்றும் கணக்கிட்டிருக்கின்றனர்.* அதாவது சற்றேறத்தாழப் பூமியைவிட இரண்டரை மடங்கு சிறியதென்பதாம். அதன் கனம் நமது பூமியின் கனத்தைவிட முக்காற்பங்கு இலேசானதாயும், நீரைவிட நான்கு பங்கு கனத்ததாயுமிருக்கிறது.

இக்கிரகம் சகண்டொன்றுக்கு 16 மைல்வீதஞ்செல்லுகின்றது. சூரியனைச் சராசரி இரண்டுவருடம் ஒருமாதம் 19 நாட்களிற் சுற்றுகிறது. இது, சூரியனிடத்து அதிகமாக நெருங்கும்போது

---

* லெப்மான் என்னும் பிராஞ்சிய பண்டிதர் 4363 என்றும், புரோக்டர் என்னும் ஆங்கிலபண்டிதர் ஏறக்குறைய 5000 மென்றுங் கூறுவர்.

"செங்கமலப் போதலர்ந்த செவ்விபோ லும்வதனந்
தங்கு மொழிசந் தனம்போலும்—பங்கியெழி
கத்தரிகைப் போலுமிளங் காரிகையே வஞ்சமனங்
குத்திரர்பால் மூன்று குணம்."

நீதிவெண்பா 23.

(39) "𑌅𑌵𑌶𑍍𑌯𑌮𑌨𑍁𑌭𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍 ।
𑌨𑌾𑌭𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌲𑍍𑌪𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑍈𑌰𑌪𑌿 " ॥

இதன் பொருள்:—நல்வினை தீவினையாகிய இருவினைகளாலாய பயன்களையும் அநுபவித்தே தீரவேண்டும்; நூறுகோடி கற்பகாலங் கழிந்தாலும் அநுபவியாமல் தீரா.

"தானே புரிவினையாற் சாரு மிருபயனுந்
தானே யனுபவித்த றப்பாது—தானூறு
கோடிகற்பஞ் சென்றாலுங் கோதையே செய்தவினை
நாடிநிற்கு மென்றார் நயந்து."

நீதிவெண்பா 47.

(40) "𑌮𑌕𑍍𑌷𑌿𑌕𑌾 𑌵𑍍𑌰𑌣𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌧𑌨𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑌾𑌃 ।
𑌨𑍀𑌚𑌾𑌃 𑌕𑌲𑌹𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌸𑌨𑍍𑌧𑌿𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌸𑌾𑌧𑌵𑌃 " ॥

இதன் பொருள்:—ஈக்கள் புண்ணை விரும்பும். அரசர்கள் பொருளை விரும்புவார்கள். கீழோர் கலகத்தை விரும்புவார்கள். மேலோர்கள் சிநேகத்தை விரும்புவார்கள்.

"காந்துநறும் புண்ணைக் கலந்தீ விரும்புமே
வேந்தர் தனமே விரும்புவார்—சாந்தநூல்
கல்லார் பகைசேர் கலகம் விரும்புவார்
நல்லார் விரும்புவார் நட்பு."

நீதிவெண்பா 82.

(தொடரும்.)

டி. எஸ். குப்புஸ்வாமி சாஸ்திரி.

---

உ

# புட்பபந்தம்.

——————:o:——————

(பந்தாந்தோதுதியின் ௫௦௦-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

ஒருநாடியிற் சந்திரனும் அங்காரகனுமாவது அல்லது குருவுஞ் சந்திரனுமாவது கூடியிருந்தால் நல்ல மழை பொழியும்.

புதனுஞ் சுக்கிரனுங் குருவுஞ் சந்திரனுஞ் சேர்ந்தால் விசேட மழையுண்டு.

அசுவதியில் இரவியிருக்கும்போது மழைபெய்தால் முற் பயிர்கள் பலிக்கும். பரணி கார்த்திகைகளி லிருந்தால் எல்லாப் பயிருஞ் செழித்துப் பலிக்கும். இரேவதியில் இருக்கும்போது பின்பயிர் யாவும் பலிக்கும்.

குருவுஞ் செவ்வாயு மேகநாடியி லிருக்கும்போது சந்திரன் *ஜல ராசியிலிருந்தாற் பூமியில் விசேஷமாய் மழை பொழியும்.

சூரியனுக்குஞ் சுக்கிரனுக்கும் முன்னே அங்காரகன் நடந்தாற் பனிபோல் தூறலும் சுழிமழையும் உண்டு.

குருவுஞ் சூரியனும் அல்லது குருவுஞ் சுக்கிரனும் சமசத்த மத்திலிருந்தால் மழையில்லை.

சுபக்கிரக நாடியிற் சுபக்கிரகங்களிருந்து சந்திரனும் அந்தச் சுபக் கிரகங்களோடு கூடினல் விசேட மழையுண்டு.

---

* மகர கடக கும்ப மீனம்.

இவைபற்றி இடபம், கடகம், துலாம், விருச்சிகம், மகரம், கும்பம், மீனம் இவ் வேழுஞ் சலராசிகளாமெனவும், இவைகளுள் பூர்ண ஜலராசியாவன கடக மீன மிவையெனவும், முக்காற்சலராசியாவன மகரகும்ப மிவையெனவும், அரை ஜலராசியாவது துலாமெனவும், காற் சலராசியாவன ரிஷப விருச்சிக மிவை யெனவும் ஞானப்பிரதீபிகையின் கூபகாண்டத்துப் பதினென்ருவது சுலோகத் தானும், சரிதாகமன காண்டத்து மூன்று நான்காவது சுலோகங்களானும் அறியக்கிடக்கின்றன.

சௌமிய நாடியிலாவது ஜலநாடியிலாவது சௌமிய கிரகங்களோடு சந்திரன் கூடினல் மழையோக மென்ப.

ஓரிராசியில் புத சுக்கிர சந்திரர் கூடினும், சௌமிய நாடியிற் கூடியிருந்தாலும் விசேட மழையுண்டு.

சூரியன் சந்திரன் சநி இவர்கள் வெவ்வேறு நாடிகளிலிருந்தால் உற்பாதங்கள் உண்டாகும். அரசர்களுக்குள் யுத்தமுண்டு.

மழைக்காலத்திற் சுக்கிரன் சுக்கிர நாடியிலிருந்து அஸ்தமன மாகாமலிருந்தால் நல்ல மழைபெய்யும்; நாடு செழிக்கும்.

ஆண்கிரகமும் ஆண்கிரகமும் இராசியிற் சேர்ந்தால் தாபம் என்ப. அலிக்கிரகமும் அலிக்கிரகமுஞ் சேர்ந்தாற் குளிர்ச்சியென்ப. பெண்கிரகமும் பெண்கிரகமுஞ் சேர்ந்தால் துர்த்தினமென்ப. ஆண் கிரகமும் பெண்கிரகமுஞ்சேர்ந்தால் மழையென்ப. பெண்கிரகமும் அலிக்கிரகமுஞ் சேர்ந்தாற் காற்றென்ப. ஆண்கிரகமும் அலிக்கிரகமும் சேர்ந்தால் மழையென்ப.

இரேவதி உரோகணி சுவாதி அநுடம் இந்த நக்ஷத்திரங்களில் அங்காரகன் இருந்தால் மிக்க வெய்யிலும் அனுவிருஷ்டியும் உண்டு.

புத சுக்கிரர்க்கு முன்னே சூரியனிருந்தால் சம்வர்த்த ஜலயோக மென்ப. அஞ்ஞான்று விசேட மழையுண்டு.

புதன் சுக்கிரர்க்கு மத்தியில் அங்காரகனிருந்தாற் காற்றடிக்கும்.

புதன் சுக்கிரர்க்கு மத்தியில் இரவியிருந்தாற் கடல் வற்றும்.

இவர்களுக்கு மத்தியிற் சந்திரனிருந்தாற் காற்று, மழை, கன்மழை இவையுண்டாகும்.

ஜலராசியிற் சந்திரனிருக்குங்காலை அவற்கு நான்கிலாவது ஐந்திலாவது ஒன்பதிலாவது சூரியனுஞ் சனியுஞ் சுக்கிரனு மிருந்தால் நன்மழை பொழியும்.

கிரகங்கள் உதயாஸ்தமனமானுலும் வக்கிரமானுலும் நன்மழையுண்டு.

புத சுக்கிரோதய காலங்களிற் குருவோடு சந்திரன் கூடியிருந் தாற் சந்திரயோகமென்ப. அந் ஞான்று நன்மழை பொழியுமென்க

ஜலராசியி னதிபதிகளோடாவது ஜலராசிகளிலாவது * ஜல நக்ஷத்திரங்களிலாவது சந்திரனிருக்குங் காலங்களில் மழைபெய்யும்.

குரூர கிரகங்களோடாவது அல்லது சுபக்கிரகங்களோடாவது சந்திரன் சேர்ந்து ஜலநக்ஷத்திரங்களிலிருந்தாற் பூரண விருஷ்டி யுண்டு.

உதயாஸ்தமனமாயிருக்குங் கிரகங்கள் வக்கிரித்தாலும் சங்கிர மண காலத்திற் சலராசியிலிருந்தாலும் மழை தூறலாயிருக்கும்.

இரவி, குரு, புதன் இக்கிரகங்களோடு சந்திரன் சேர்ந்தால் விசேஷ மழை பெய்புமென்று பிரமயாமளங் கூறுகின்றது.

குஜனேடு சந்திரன் சேர்ந்து இவர்களுக்கு ஐந்தில் புத சுக்கி ரர்களிருந்தால் அதிவிருஷ்டி யுண்டாகுமென்று லம்பாகங் கூறுகின் றது.

குஜன் சுக்கிரன் புதன் இவர்கள் ஓரிராசியில் அவரவரின் சொந்த திரிம்சாம்சத்திலிருந்தால் அதிக மழையுண்டென்றும் அந்நியர்களின் திரிம்சாம்சத்திலிருந்தாற் சொற்ப மழையுண்டென்றும் அறியக்கிடக் கின்றது.

சுக்கிரன் புதன் சந்திரன் ஓரிராசியிலிருந்தால் அதற்குச் சென்ம ராசியென்ப. அஞ்ஞான்று அதிவிருஷ்டி யுண்டாமென்று மநு சொல்லுகின்ருர்.

சிங்கத்திற் சந்திரனும் ரிஷபத்திற் சுக்கிரனும் மிதுனத்திலாவது கடகத்திலாவது புதனும் இருந்தாற் காற்பாகம் மழைபெய்யும்.

இலக்கினத்திற்கு 5, 2, 3, 8ல் சுக்கிரனுஞ் சனியும் வக்கிரித் திருந்தாலும், சத்தமத்திற் சந்திரனிருந்தாலும் விசேட மழைபெய்பு மென்று ஆருடஞ் சொல்லவேண்டும்.

---

* ஜல நக்ஷத்திரங்கள்:—உரோகணி, மிருகசீரிடம், புனர்பூசம், பூசம் ஆயில்யம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, சேட்டை, பூராடம், திருவோணம் ஆம் இவையெனச் சோதிடகிரகசிந்தாமணி கூறுகின்றது.

ஆரூட லக்கினத்திற்கு ஐந்திலாவது ஆறிலாவது குருவுஞ் சந்திரனு மிருந்து புத சுக்கிரர்களாற் பார்க்கப்பெற்றால் இடியோடு கூட அதிவிருஷ்டி யுண்டாகும்.

ஆரூட லக்கினம் ஜலராசிபானாலும் சந்திரன் ஜலராசியிலிருந்தாலும் ஆரூட லக்னாதிபன் மித்ரு ஸ்தானத்திலிருந்தாலும் மழை யுண்டு.

வருஷப்ரசனை சுக்கில பக்ஷமாயிருந்து லக்ன கேந்திரங்களிற் சுபர் இருந்தால் மழையுண்டு.

மேருவுக்கு வடக்கிற் பரணிமுதல் ஒன்பது நக்ஷத்திரங்களும் மத்தியத்திற் பூரமுதல் ஒன்பது நக்ஷத்திரங்களும் தெற்கிற் பூராட முதல் ஒன்பது நட்சத்திரங்களு மிருக்கின்றன.

மழைக்காலத்திற் புதன் உதயத்திற்குமுன் சுக்கிரோதயமானால் தாபமும், வெய்யிலும் சுக்கிரோதயத்திற்கு முன்னர்ப் புதோதயமானால் மழையும், சுக்கிரோதய காலத்தில் தெற்கிலும் வடமேற்கிலும் மின்னினாற் பயிர் விருத்தியு முண்டு.

சுவாதி ஆயில்யம் சித்திரை இந்த நக்ஷத்திரங்களிற் சுக்கிரோதயமானால் அரசர்களுக்கு அபகீர்த்தியும், அனாவிருஷ்டியு முண்டாகும்.

சூரியனுக்கு வடக்கிற் சுக்கிரனிருந்தாற் சகலபயிருஞ் செழித்து அவ்வருஷம் நன்றாய்ப் பலிக்கும்.

பரணிமுதல் நான்குநாள்வரை சுக்கிரனுக்கு உதயாஸ்தமன முண்டானால் ஜனங்களுக்குத் தேஜோஹானியும், விசேட தானிய விளைவு முண்டு.

திருவாதிரை முதல் நான்குநாள்வரை உதயாஸ்தமனமானாற் பிராமணோத்தமர்கட்குப் பீடையும், பயிர் விருத்தியு முண்டு.

மகமுதல் ஐந்துநாள்வரை சுக்கிரோதயாஸ்தமனமானால் அரசர் மனிதர் பசுக்கள் இவர்கள் மரணமாவர்.

கேட்டை முதல் ஐந்துநாட்கள்வரை சுக்கிரன் உதயாஸ்தமன மானால் துர்ப்பிக்ஷ மெங்கு முண்டாகும். சுவாதிமுதல் மூன்று நாட்கள் வரை உதயாஸ்தமனமானால் மழை பெய்யும்.

அவிட்டமுதல் ஐந்துநாட்கள்வரை உதயாஸ்தமனமானால் அரசர் களுள் பரஸ்பரம் யுத்தமும், பயிர் விருத்தியுமுண்டு.

அஸ்வதியிற் சுக்கிரன் உதயாஸ்தமனமானாற் பிரஜைகளுக்குச் சுகமும், பயிர்விருத்தியும் உண்டு.

கிருஷ்ணாஷ்டமி சதுர்த்தசி அமாவாசியை இந்தத் திதிகளிற் கிழக்கிலும் ஈசானியதிக்கிலும் சுக்கிரோதயமானாற் பயிர் விருத்தி யுண்டு.

ஜேஷ்டம், மாகம், மார்க்கசிரம், சிராவணம், கார்த்திகை இந்த மாதங்களிற் சுக்கிரோதயாஸ்தமனமானாலுஞ் சூரிய சந்திர கிரகணங்க ளுண்டானாலும் மழையில்லை.

பரணி கார்த்திகை பூரம் இந் நாட்களிற் சுக்கிரனிருந்து சூரிய னுக்குத் தெற்கே நடந்தாலும் திருவாதிரை, மகம், விசாகம், சுவாதி, பூசம் இந் நாட்களிற் சுக்கிரனிருந்து சூரியனுக்கு வடக்கே நடந் தாலும் மழை யுண்டு.

மகம் உத்திராட மிவற்றிற் சுக்கிரன் அஸ்தமித்தாலும் வக் கிரித்தாலும் மழையில்லை. அரசர்களுட் பரஸ்பரங் கலகமுண்டு.

உத்திரத்திரயம் பூசம் இந்நாளிற் புதோதயமானால் நல்ல மழை யுண்டு. இதர நக்ஷத்திரங்களில் உதயமானால் * ஈதி பாதையுண்டு.

சுவாதி, விசாகம், அநுடம் இவற்றுளொன்றிற் குருசஞ்சரிக் குங் காலத்திலும், மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை இவற்று ளொன்றிற் சுக்கிரன் சஞ்சரிக்குங் காலத்திலும், குருவோடாவது சுக்கிரனோடாவது சந்திரன் சம்பந்தப்படுங் காலத்திலும் விசேஷ மழையுண்டு. புதன் கூடினாற் சொற்ப மழையுண்டு. சனியாவது

---

* ஈதி பாதையென்பது, பேதி அம்மை யிவற்றாற் சனங்கள்சேதமாவதும், பக்ஷி இலி பன்றி யிவற்றாற் பயிர் நாசமாவதுமாம்.

குஜனுவது வக்கிரமாயிருந்து சுக்கிரனோடாவது குருவோடாவது சேர்ந்தாற் புல்கிடைப்பதரிதாகிப் பசுக்கள் நாசமடையும்.

குஜன் சனி சுக்கிரன் இவர்கள் ஓரிராசியிலிருந்தால் மழையில்லை. இவர்களோடு குருசேர்ந்தால் மத்திம விருஷ்டியுண்டு.

குரு வக்கிரித்து உரோகணி மத்திப பாகத்திலிருந்தால் மழையில்லை. சுவாதி விசாகம் அநுஷம் இம்மூன்று நாளிற் குருவக்கிரித்திருந்தால் நல்ல மழையுண்டு.

அங்காரகன் வக்கிரமில்லாமலிருக்கும் பொழுது சனி வக்கிரமாயிருந்தால் ஒரு மாதம் மழையில்லை.

மார்க்கசிரமாத கிருஷ்ணாஷ்டமியிற் சித்திரை நக்ஷத்திரமிருந்து நவமியிற் சுவாதியிருந்து அவ்விருதினங்களில் ஒருநாள் மேகம்பரவி மின்னினல் மறுவருஷம் ஆஷாட மாதச்சித்திரை சுவாதி நக்ஷத்திரங்களில் அதிவிருஷ்டியுண்டு.

புஷ்பமாச சுத்த சதுர்த்தியில் தசதாதுக்கள் தோன்றினல் வருஷாகாலங்களில் நன்மழைபெய்து பயிர்பலிக்கும். தசதாதுக்களின் குறிகளுட் சில குறையின், பயிர் பலிதமுஞ் சிறிது குறைவாகும்.

புஷ்பமாதப் பௌர்ணமியிலும் அதனடுத்த துதியையிலும் மேகமில்லாது பனிமாத்திர மிருந்தால் ஆஷாடமாத அமாவாசியையில் நன்மழையுண்டு.

மாக சுத்த சப்தமியில் இரவும் பகலும் மேகம் பரவிக்கொண்டிருந்தாலும் அல்லது மேற்கே மின்னினலும் அல்லது விசேஷக் காற்றடித்தாலும் வருஷாகாலத்தில் நல்ல மழையுண்டு.

மாகமாச பௌர்ணமியை நான்கு பாகமாக்கி முதற் பாகத்தில் வருஷதாதுக்கள் தோன்றுவிட்டால் ஆஷாட மாதத்தில் மழையில்லையென்றும், இரண்டாம் பாகத்திற் றோன்றுவிட்டால் சிராவண மாதத்திற் சுபிக்ஷமுண்டென்றும், மூன்றும் பாகத்திற் றோன்றுவிட்டால் பாத்ரபத மாதத்திற் பயிர்கள் வெட்டுக்கிளிகளாற் சேதமடையுமெனவும், நாலாம் பாகத்திற் றோன்றுவிட்டாற் கிளிகளாற் பயிர்கள் நாசமடையுமெனவுமறிக.

சுக்கிரன் குரு குஜன் இம்மூவரும் ஓரிராசியிலிருந்தால் துர்ப்பிக்ஷயோகமென்ப. அப்போது மழையின்றிக் கடலும் வற்றும்.

விருச்சிகம் இடபம் சிம்மம் மீனம் தநுசு இந்த இராசிகளிற் குஜனாவது சனியாவது வக்கிரகர்களாயிருப்பின், துர்ப்பிக்ஷ முண்டு.

இடபம் கும்பம் தநுசு இவற்றின் மத்திய திரேகாணத்திற் சனி சஞ்சரிக்கும் காலத்தில் துர்ப்பிக்ஷமுண்டாகி மனிதர் முதலாயினோர் மரணமடைவர்.

சுக்கிரனுஞ் சந்திரனும் ஒருராசியிலாவது ஒருஅம்சத்திலாவது இருந்தால் அரசர்களுக்குட் கலகமாவது விசேஷமழையாவது உண்டு.

சுக்கிரனுக்குப்பின் குஜனும் சனியுஞ்சென்றாற் பூமிநடுங்க மழை பொழியும்.

சுக்கிரனுக்கு ஏழிற்சந்திரனிருந்தாலும் அல்லது சுக்கிரனுக்கு 4, 7, 11-ற் சனியிருந்தாலும் மழையுண்டு.

சுக்கிரனுக்கு முன் புதன் நடந்தால் மேகம் கெடும்; மழைபெய்யாது.

சுக்கிரன் வக்கிரமாயிருந்து புதன் நேராக நடந்தால் நல்லமழை பெய்து வயல்களிற் சமுத்திரம் போல் நீர்வளம் பெருகும்.

சுக்கிரன் புதன் இவர்களிலொருவர் வக்கிரமாயும் மற்றொருவர் வக்கிரமில்லாமலு மிருந்தால் நன்மழை பொழிந்து தடாகங்களிலும் வயல்களிலும் ஜலம் நிரம்பியிருக்கும்.

புதனுஞ் சுக்கிரனுஞ் சமீபமாயிருந்தாலும் தீயவர் இருக்குமிடத்தில் மழையில்லை. (நல்லோரிருக்குமிடத்தில் மழை பெய்யும்.)

(தொடரும்)

ப. அ. கிருஷ்ணஸ்வாமிப்பிள்ளை,

தரங்கம்பாடி.

———

சிவமயம்.

# பாட்டியல்



இயற்றமி ழிலக்கண மைந்தனுள் ஒன்ருகிய யாப்பிலக்கணத் துக்கு அங்கம்போன்றதும் பஞ்ச விலக்கணங்களைப் பூர்த்திசெய்யத் தோன்றிய ஒழிபியல்போன்றதும் ஆயது பாட்டியலென்பது. இதனை முற்காலத்துப் புலவர்களும் பிற்காலத்துப் புலவர்களும் பொன் போற் போற்றிவளர்த்தார்கள்; இக்காலத்தார் பலர் போற்ருது கைவிட்டிருக்கின்றனர். முற்காலத்துப் புலவர்களும் பிற்காலத்துப் புலவர்களும் பாட்டியலைப் பொன்போற் போற்றினுரென்றமைக்கு அவர்களியற்றிய பன்னிரு பாட்டியல் இலக்கணவிளக்கப் பாட்டியல் முதலியவை சான்றுகளாம். இக்காலத்தார்பலர் பாட்டியலைப் போற் ருது கைவிட்டிருக்கின்றனரென்றற்கு இவர்களியற்றும் சிறப்புப் பாயிரம் முதலியவை சான்றுகளாம். பாட்டியலைப் போற்ருது கை விடுதல் ஆராய்ச்சியின்மையானே அன்றிப் "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவலகால வகையினுனே" எனுஞ் சூத்திரங் கருதியோ யாதோ அறியேன். ஆராய்ச்சியின்மையாலெனின், அறி வின்மை வெளிப்படும்; "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழு வலகாலவகையினுனே" எனுஞ் சூத்திரங் கருதியெனின் அது நியாய மின்று. அச்சூத்திரம், எண்ணியபடி இலக்கணங்கள் தள்ளலும் கொள்ளலும் குறிக்க எழுந்ததன்று. கால மாறுபாட்டிற் பழையவும் புதியவுமாகிய இலக்கணங்கள் சில முறையே கழிதலும் புகுதலும் தெரிக்க எழுந்தது. பழையன கழிதலுக்குப் பழைய இலக்கணங் களிற் சிறிதும் பயன்படாச் சிலவும் புதியனபுகுதலுக்குப் புதிய இலக்கணங்களிற் பெரிதும் பயன்படும் சிலவும் உரியனவெனப் பொருள் கொள்க. ஆகவே இக்காலத்துக்குச் சிறிதும் பயன்படாப் பழைய விலக்கணங்களிற் சில விடலும் இன்றியமையாதனவாய்ப் பயன்படும் புதிய இலக்கணங்களிற் சில தழுவலும் சிறப்புடையனவென்க.

இவற்றானன்றே ஆசிரியர் பவணந்தியார் தொல்காப்பியத்துக்கு மூறறாயிருக்கவும் "அ ஆ உ ஊ ஓ ஔ யம் முதல்" முதலிய சூத்திரம் செய்தருளினர். இவை இங்ஙனமிருக்க, பாட்டியல் கூறும் விஷயங்கள் மங்கலப்பொருத்தம் சொற்பொருத்தம் பாற்பொருத்தம் வருணப்பொருத்தம் உண்டிப்பொருத்தம் தானப்பொருத்தம் அக்கரப்பொருத்தம் நாட்பொருத்தம் கதிப்பொருத்தம் கணப்பொருத்தம் ஆகிய பத்தின் இலக்கணமும், அவை பொருந்தும் அகலக்கவியினிலக்கணமும் பிற இலக்கணங்களுமாம். பொருத்தங்கள் ஒவ்வொன்றும் உட்பிரிவுகளுடையன. அவற்றுள், சில நன்மைபயப்பன; சில தீமை பயப்பன. பொருத்த விலக்கணங்களே முக்கியமானவை. மற்றை இலக்கணங்கள் அவைபற்றிவந்தவை. இவ்விஷயம் பாட்டியல் ஆராய்ந்தார்க்கு வெளிப்படையாம். ஈண்டுப் பொருத்தமாவது அகலக்கவிக்கும் அகலக்கவிநாயகனுக்கும் பொருந்தும் பொருத்தமாம். இதனை.

"விரித்தபாமகட்கும்வேட்குமிறைக்கும்
பொருத்தமீரைந்துபோற்றல்வேண்டும்"

எனவருஞ் சூத்திரத்தானறிக. பொருத்தங்கள் பத்தும் அகலக்கவியின் முதற்சீரில் அமைவனவாம். இதனை,

"மங்கலஞ்சொற்பால்வருணமுண்டி-
தானமக்கரநாட்பாக்கதிகண
மானவிரைந்துமம்முதற்சீர்க்குப்
பொருத்தமென்னத்தெரித்தனர்புலவர்"

என்பதாலறியலாம். நற்பொருத்தமும் தீயபொருத்தமும் முறையே நன்மை தீமைகளை விளைவிக்கத்தக்கனவென்பது இலக்கணவிளக்கப் பாட்டியலிற் கணப்பொருத்தங்கூறும் சூத்திரவுரையின்கீழ்,

"நிரதுகணமேசிர்சிறப்பெய்தும்
தீயதுகணமேநோயதுசேரும்
அந்தரகணமேவாணாளகற்று
மிந்திரகணமேபெருக்கஞ்செய்யுஞ்

சந்திரகணமேவாழ்நாள்தரூஉஞ்
சூரியகணமேவீரியம்போக்கு
மாருதகணமேசிர்சிறப்பகற்று
நீலக்கணந்தானேமலர்த்திருவிளங்கும்"

என்றார் மாமூல ரென்றதனானும்

"ஓதிய என்ற மிகையானே கணநாட் பொருத்தமுங் கொள்க." அவையாமாறு;

"வருணகணமேசதயமென்ப
சந்திரகணமேமிருகசிரிடம்
அந்தரகணமேபுனர்பூசமாகும்
வாயுகணமேசோதியாகும்
சூரியகணமேபூசமென்ப
தீக்கணந்தானேகார்த்திகையென்ப
யமானகணமேபரணியென்ப
பூமிகணமேகேட்டையாகும்" எனக் கணநாட்கூறி
"நிலையேசெல்வஞ்சூலைநலநீக்கல்
கொலைபிணிநன்மையின்பங்கூறே"

என இந்திரகாளியார் பலமுங் கூறியவாறு அறிந்துகொள்க என்றத னானும் மற்றை நற்பொருத்தம் தீயபொருத்தங்கட்கு ஆராய்ச்சியானு மறிக. மற்றை யிலக்கணங்களும் கொள்ளத்தக்கனவெனவும் அறியத் தக்கனவெனவும் ஆராயின், விளங்கும். பத்து நற்பொருத்தங்களும் அகலக்கவிக்கு வேண்டுவன. இதனை,

"கூறியஇலக்கணங்குறைபாடின்றித்
தேறியமூவகைச்சீர்முதலாக
அகலக்கவிதானமையுமென்ப."

எனுஞ் சூத்திரத்தான் உணர்க. இங்ஙனம் பாட்டியல் கூறுவதானே அகலக்கவி பாடுவோர் பாட்டியல் கற்றல் கடமையாகின்றது. அகலக்

கவிபாடுவோர் அகலக்கவி பாடுவதெதற்கு? அகலக்கவி நாயகனுக்கு நன்மைக்கா? தீமைக்கா? நன்மைக்காயின், இக்காலத்துக்கு மேலே கூறியபடி பயன் பயனில் இலக்கணங்களுட் பாட்டியல் பயனுள இலக்கணமாதல் தெரிக. இதனுற் பாட்டியல் தழுவத்தக்கதென்று சித்தித்தது. இதுநிற்க,

இடைச்சங்க காலந்தொட்டு நிலைபெற்றுத் தன்னொளி குன்ருதிருக்கின்ற அரிய பெரிய தொல்காப்பியத்தின்கண் பாட்டியலில்லையே பாட்டியல் யாங்ஙனம் சிறக்குமென்பாருமுளர். அவருரை வெற்றுரையேயா மென்க.

எங்ஙனமெனில் விளம்புவல். தொல்காப்பியம் அகத்தியத்தின் வழிநூலாம். அகத்தியமோ சிதைந்துகிடந்த பழைய விலக்கணங்களை ஒருவழிப்படுத்திக் கூறியதோர் நூல். இவையிரண்டும் தமிழ் தோன்றியஞான்று உடன்தோன்றியவை அல்ல. ஆகவே தொல்காப்பியத்தின்கண் பாட்டியல் இல்லாமைபற்றிப் பாட்டியலுக்குச் சிறுமை வந்திடாது. பஞ்ச விலக்கணங்களும் தமிழ் தோன்றிய காலத்து உடன் தோன்றியனவென்பது ஒருதலை. அக்காலத்தே மேலுரைத்தபடி பஞ்ச விலக்கணங்களையும் பூர்த்திசெய்யவந்த ஒழிபியல்போலப் பாட்டியலும் தோன்றிற்று. இஃது துண்மையெனல் ஆசிரியர் அகத்தியனுர் பாட்டியல் செய்தமையானே இனிது விளங்கும். ஆசிரியர் அகத்தியனுர் பாட்டியல் செய்தது பன்னிரு பாட்டியவில் தானப்பொருத்தங் கூறும் அகத்தியர் பாட்டியற் சூத்திரங்களான் அறிக. அச் சூத்திரங்கள் அடியில் வருவன கண்டுகொள்க.

1. "குறிலைந்துடனெடில்கூட்டிநின்ற
ஐஔவிரண்டும்இஉவடக்கிப்
பாலகுமாரவரசுமூப்பு
மரணமென்றைவகைத்தானம்வகுத்தனர்."

2. "முன்பிற்செய்யுண்முதலெழுத்தராற்குப்
பொருத்தமும்விருத்தமும்பகையுங்கொளலே."

கடைச்சங்கப் புலவர்களும் ஆசிரியர் அகத்தியனார்போலவே தங்கள்காலத்து வழங்கிய பாட்டியலைக்கொண்டு பாட்டியல்பலசெய்து நிலவவைத்தார்கள். இது பன்னிருபாட்டியல் நவநீதப்பாட்டியல் இலக்கணவிளக்கப்பாட்டியல் முதலியவை ஆராய்ந்தார்க்கு உண்மையாம். மேற்கண்ட பாட்டியல் பல வேற்றரசர்களால் அக்கினிக்கு இரையாக்கப்பட்டன. இரையாக்கப்பட்டாலென்? தப்பியவை சில. அவற்றைக்கொண்டு பிற்காலத்துப் புலவர்கள் பலர் பாட்டியல் பல வியற்றியுள்ளார். அவை இக்காலத்து வழங்கிவருகின்றன. நவமாய்ப் பாட்டியல் தோன்றியதன்று. ஈண்டு அவருரை வெற்றுரையாய் முடிந்தது காண்க.

இங்ஙனம்,

அ. முத்தையமுதலி,

உபாத்தியாயன்,

கவர்ன்மெண்டு பாடசாலை,

பரங்கிப்பேட்டை.

---

உ

# ஐயவினாத்தொடர்.



["தெரியுங்கா, லின்மை யரிதே வெளிறு" என்ற தேவர்வாக்கு எவர்க்கும் உடன் பாடாதலின், அது பற்றி யிச்சின்மொழி வரையலாயினன்.]

யாப்பருங்கலக்காரிகை.

1. உறுப்பியலில் "எழுவா யெழுத் தொன்றின் மோனை யிறுதி யியைபு," "இருசீர்மிசை யிணையாகும்" என்ற இரண்டு காரிகைகளினால் முறையே தொடையுந் தொடைவிகற்பமுங் கூறினர் ஆசிரியர். அமுதசாகரனார்.

இவற்றில் தொடைவிகற்பத்திற் கிலக்கியமாகவருவது "மோனை விகற்பம்" என்ற முதனிலைப்புக் காரிகையாம்; இதன்படி இயைபுத் தொடை விகற்பத்திற்கு இலக்கியம் "மொய்த்துடன் றவழும்" என்றது முதற் சிலவடிகளையுடைய ஒரு நேரிசையாசிரியப்பா வாகும்; அதன்படி "மொய்த்துடன் றவழு முகிலே பொழிலே" என்ற அடியின் 3 4 சீர்களினீற்றிற் கண்ட "லே" என்ற எழுத்துக்கள் இணையியைபு" க் கிலக்கியம்;

நிற்க; ஒழிபியலுள் "அருகிக்கலி" என்ற காரிகையின் உரையில் உரையாசிரியர் "இரணத்தொடைக்கும்" என்ற உம்மையால் ஒழிந்த மோனை, இயைபு, எதுகை, அளபெடை என்னுந் தொடை நான்கிற்கும் இவ்வாறே யொட்டிக்கொள்க; அவை கூடி வழங்கு மாறு:— என்று, "கடையே கடையிணை, பின்கடைக், கூழை யிடைப்புணர்வு" என்றவற்றை முறையே முற்கூறிய நான்கின் பாலுஞ் சார்த்தி "இவற்றிற் கிலக்கியம் "யாப்பருங்கலவிருத்தியுட் கண்டு கொள்க" என்றனர்.

[அவ்விருத்தி பச்சுவாகனம், ஏறி வராதகுறையால், எம்மனோர் பலருங் கண்டுகளிக்க, இடமின்றியும்; ஏனையகொண்டும் ஐயம் வாளா வளர்வ தாயிற்று.]

அவ் விருத்தியில், கடையிணையியைபு; பின்னியைபு முதலிய வற்றிற் குதாரணம் வருமாறெங்ஙனம்? அவை யெவை?

"இறுதியியைபு" என்றமையான் விகற்ப இலக்கியம் காட்டுகை யில், மோனை, யெதுகைகளுக்குக் குறிப்பிட்டிருக்கிறபடி, முதற்சீரி லன்றோ, இறுதியில் வரவேண்டும்? அங்ஙனமாயின் "கடையிணை யியைபு"க்கு ஈற்றிலிருந்து இலக்கியம் காட்டிவரவியலும்; ஆனதால், மொய்த்துடன் றவழும் முகிலே, பொழிலே என்பது "இணை யியைபு"க்குப் பொருந்துமா? "கடையிணையியைபு"என்றலாகாதோ? வில்லே நுதலே வேற்கண்கயலாம் என்பது "இணையியைபு" க்கு இலக்கிய மன்றோ? மறுக்கின் ஏன்? காரணம் விளக்கவேண்டுவல். இவ்வொன்றைக் கொண்டுதான் "இயைபுத்தொடைவிகற்பம்" முற்றி லும் இலக்கியம் காணவேண்டியதிருக்கிறது.

## குறள் 54-ம் அதிகாரம்

### பொச்சாவாமை.

2. "பொச்சாப்புக்கொல்லும்" என்றபாட்டிற்கு "புகழைப் பொச்சாப்புக் கொல்லும்-ஒருவன் புகழினை அவன் மறவி கெடுக்கும்" என்று உரையாசிரியர் பரிமேலழகியார் கூறினர். இதில் "பொச்சாப்பு" என்றதற்கு "மறவி" என்பதே பொருளாகக்கொண்டனர்; இங்ஙனமே 'பொச்சாப்பு' என்று வருமிடங்களில் (குறள் 199, 246, 534) "மறவி" யென்றே உரை யெழுதிச் செல்கின்றனர்; இதனால் "பொச்சாப்பும், மறவியும், ஒன்றென்றே உரை ஆசிரியர் நினைத்தனர்போ போலும்; அற்றாயின், நன்னூல், உரிபியல் "அறிவருளாசை" என்னுஞ் சூத்திரத்தில் "போச்சாப் பூக்க மற மத மறவியினைய" என்று உயிர்க்குணத்தில் பொச்சாப்பும், மறவி யும் வேறாய் வகுத் துணர்த்துவர் ஆசிரியர் பவணந்தியார்; இரண்டும் வேறென்று கூறியவர் கருத்துடன், ஒன்றென்றே பொருள்கொண்டவர் கருத்துப் பொருந்துமா? வழக்கத்தில் முன்னவரே சான்றாகின்றனர்; இவற்றின் காரணம் வேண்டுவன்.

தொடரும்

நச்சுவார்க்கினியன்.

தச்சநல்லூர்.

---

ஸ்ரீ:

# பாண்டிய சாசநம்

———:o:——— ———

## VII.

கோமார-பனமரான ஸ்ரீ சுந்தரபாண்டியதேவர் காலம்.

சிர்மெய்க்கிர்த்தி (அகவல்.)

(29) பூமலாததிருவுமபொருசெயமடநதையுந
தாமரைககுவிமுலைசசெயபபுயததிருபப
வேதநாவிலவெளளிதடடாமரை
(30) காதனமாதுகவினபெறதிளைபப
வெணடிரையுடுததமணடிணிகிடககைத
திருநிலமடநதையுரிமையிறகளிபபச
சமையமுநதியுமத (31) ருமமுமதழைபப
விமையவாவிளமகொடிஇடநதொறுமெடுபபக
கருஙகலிகனலகெடககடவே (ள) வேதிய
ருநதொழிலவேழவிச (32) செஙகனலவளாபபச
சுருதியுநதமிழுந தொலவளஙகுலவப
பொருதிறலாழிபூகலஞசூழவர
ஒருகைஇருசெ (வி) முமதநாறகோட
டயிராப (த) மு (33) தலசெயிரதீரகொறறத
தெணடிசையானைஎருததமேறிக
கணடநாடெமதெனகயலகளிககுர
கோசலநதுளுவஙகுகிரஙகுசசரம
போசல (34) மகதமபொபபளமபுணடரம
கலிஙகமஈழஙகடாரஙகெவுடந

தெலிஙகளுசோனகளுசீனமுதலா

விதிமுறைதிகழ (வெவ) வேறுவகுதத

மு (35) துநிலககிழமையினமுடிபுனைவேநதற

கொருதனிநாயகனெனறுலகேதத

திருமுடிசூடிசெஙகோலோசசிக

கொறறததரளககுளிககு (36) டைநீழற

கறறைககவரிகாவலாவீச

விடைகதிாநவமணிவீரஸிஙஹாஸநத

துன(?)முடிசூடியு(?)யாகுலததிருவென

மஙகயாமலாகரங (37) குவிததுபபாததிபா

மஙகையாதிரணடுவணஙகுஞசெனனிச

சுடரொளிமவுலிசசுமாமணிமிசை...ட

சிவநதவிணைமலறசிறடிக

மதுகரஙகமலமெனறணுகு (?) (38)

(உரை)

முலகமுழுதுடையாரொடுவீறறிருநதருளிய

மாமுதலமதிககுலமவிளககியகோமுதல.

கோமாற-பனமான திரிபுவன சகரவததிகள சீசுனத (39)ரபாணடிய தேவறகுபதி நாள நானூ றறுபபதினைஞசினுல மாடககுளககீழமதுரைக கோயிற பளளியறைககுடதது பளளிபபீ (40) டமழவாாயனில எழுநதருளி இருநதுதிருவழுதி வளநாடடுததிருககுரு கூா பொலி ஞசு நினறருளின பரமஸவாமிகள கோயிற திருபபதி சீவைஷணவா செயயதிருவாய மொ (41) ழிநதருளினபடி இபபரமஸவாமிகளுககு வடதலைசசெமபிநாடடு கீழைககோடுமளூரான மதுரோதயநலலூா அரையன திருநா (42) டுடையானுன நீலகஙகரையா பேராால அரை யன பூவனுன வேணுவுடையாாகணட திருநாடுடையான சாநதிககும இவவேணுவுடை (43) யார்பிறநத உததரடடாதி நாள தீவுசூ

ஸாதிபபதாகக கணட சிததிரைததிருநாள பதினஞசுககும திருப படி மாறறுளளிடடு வேணடு (44) நிமநதஙகளுககும திருநாடபடிக கும இராடடுச சிவைகுநதமான இராஜேநதிரசசதுாவேதிமஙக லததுக கிழபடாகையில (ஏழுக) கை (45) க கோளாஜீவிதமாயபபோ நத காவாலிககு கிழெலலை இவிராஜேநதிர ஸ்ரீசதுர்வேதி மஙகலதது ஸபையாா பறறுன கிழைககாவாலிககும சிஙக (46) ன குறிசசி பறறுககும பெருங்குளமான உததமபாணடிய நலலூாககு நீாபாயகிற பெருஙகாலுககு மேறகும தெனனெலலை திருததுலை விலலிமஙகலதது அரவிநதலோசனன தேவதானததுககும இவிராஜேநதிர ஸ்ரீசதுர்வேதி மஙகலதது ஸபையாா பறறுன புளியஙறை பறறுககும பூஙகுடிய (48) னபறறுககு வடககும மேலெலலை திருககுருகூா ஸ்ரீஹூ விஞானகள மடபுறமான புதலூாககரைககும இவிராஜேநதிர ஸ்ரீசது வேதிமங (49) கலதது ஸபையாா பறறுககு கிழககும வட வெலலை இவிராஜேநதிர ஸ்ரீசதுர்வேதி மஙகலதது நினறும பெருங குளமான உததமபாண,

நடுப்பத்தி.

(1) டியநலலூருககுப போகிற பெருவழிககுத தெறகும ஆக நானகெலலைககுடபடட (2) நிலம முனனுடையாரும ஜீவிதமும முதலுந தவிறது காராணமை மியாடசியும கடமையும அ (3) நத ராயமும விநியோகமும தருவதான அசசும காரிய வாராடசியும வெடடிபாடடமும பஞசுபீலிசநது (4) விககிரகபபேறும பொனவரியு மறறு மெபபொபபடடினவும உடபட பதினெனறுவதி னெதிரா (5) மாணடுமுதல தேவதான இறையிலியாக இடபபெறவேணுமெனறு ஐயனமழவரரயன நமககுச சொனனமையில இபபொலிஞசு (6) நின றருளின பரமஸவாமிகளுககு இநநிலககரையாபேரால இவவேண வுடை (7) யாாகணட திருநாடுடையான சநதிககும இவவேணுவுடை யாா பிறநத உததரடடாதிநாள தீாததம பிர (8) ஸாதிபபதாககணட சிததிரைததிருநாள பதினைஞசுககும திருபபடிமாறறுளளிடடு வே ணடு நிப(9) நதஙகளுககும திருநாளபடிககும இவவிராஜேநதிர ஸ்ரீசது

வெட்டு மங்கலத்து கிழப்பிடாகையில ஏழூா கைக (10) கோளா ஜீவித மாயப போநத காவாலிககு க கீழேலலே இவிராஜேநதிர ஸூஷ்வெட்டு மஙகலததூ ஸபெஹ யா (11) ாபறறுன கீழைககாவாலிககும சஙகன குறிசசிபபறறுககும பெருஙகுள்மான உததமபாணடிய நல (12) லூரு ககு நீரபாயகிற பெருஙகாலுககு மேறகும தெனனெலலே திருததுலே விலலிமஙகலதது அரவிநதலோ (13) சனன தேவதானததுககும இவிராஜேநதிர ஸூஷ்வெட்டு மஙகலதது ஸபெஹ யாப்பறறுன புளி யறை (14) பறறுககும பூனைககுடியான பறறுககும வடககும மேலெலலே (15) திருககுருகூா ஸ்ரீஷ்வியானகள மடபபுறமான புதுவூாககரைககும் (16) இவிராஜேநதிர ஸூஷ்வெட்டி மஙகலதது ஸபெஹயாா பறறுககும கிழககும (17) வடவெலலே இவிராஜேநதிர ஸூஷ்வெட்டி மஙகலததூ நினறும பெருங (18) குளமான உததம பாணடிய நலலூாககுபபோகிற பெருவழிககுத தெறகும ஆக (19) நானகெலலேககுடபடட நிலம முனனுடையாரும ஜீவிதமும முத (20) லூநதவிததது காராழமைமிபாடசியும கடமை அநதாயமும வினியோகமுங (21) தருவதான அசசும காரியவாராடசியும வெட்டி பாட்டமும பஞசுபீலி சநது(22) விககிரகபபேறும பொனவரியுமறறு மெபபோபபடடினவும இவவாண்டுமுதல தேவதான இறையிலியாக இடவேரியிலகக எழுததிடட வுளவரி (24) யும நம ஓலேயும தரசசோன ஞேம கைககோணடு இபபடி சநதிராதிததவரை செல (25) வதாகக கலலிலும செமபிலும வெட்டி விததுககொளகவெனறு திருவாய மொழிநதருளினா. இவைதிருமலலி நாடடுததடஙகணணி சிறறா உடையாா......நினறுவொன வீரசோழதேவனுன குருகுலததரை யன எழுதது.

A M சடகோப ராமாநுஜாசார்யன்,

திருச்சிராப்பள்ளி நாஷநல் ஹைஸ்கூல்.

# புத்தக வரவு.

—(:o:)—

(1) இல்வாழ்க்கை முறைமை என்னும் கிருகபரிபாலனம்:— இது ரசாயனநூலாசிரியராகிய ஸ்ரீமத்-தா. பொ. மாசிலாமணிப்பிள்ளை அவர்களா லெழுதப்பட்டது. இதில் இல்வாழ்க்கை இனிது நடைபெறுவதற்கு முக்கியமாகத் தெரிந்துகொள்ளவேண்டியவைகளும், ஆரோக்கிய சாதனங்களும் சுருக்கமாகவும் தெளிவாகவும் ஆண்மக்கள் பெண்மக்கள் எல்லாரும் எளிதினுணரும்படி செவ்விதாயெழுதப்பட்டிருக்கின்றன. இவ்வா றெழுதப்படும் சிறிய புத்தகங்கள் தற்காலத்திற் பெரிதும் பயன்படத்தக்கன. இதன்விலை அணா 12.

---

(2) திருமணவாழ்த்தும், நீதிநெறித் தாலாட்டும்:—இவை பண்டிதர் ஸ்ரீமத்-மு. பொ. ஈசுவரமூர்த்தியாபிள்ளை அவர்களாலியற்றப்பெற்றன. இவற்றுள், நீதிநெறித் தாலாட்டு, திருக்குறளின் அதிகாரந்தோறும் ஒவ்வொருகுறளின் கருத்தைத்தழுவி 133-தாலாட்டுக் கண்ணிகளாகப் பாடப்பட்டிருக்கிறது. மற்றது மணமனையிற் பாடுதற்குரிய பாடல்களுள்ளது. இவ்விரண்டும் சேர்ந்தடங்கிய புத்தகத்தின்விலை அணா 1½.

---

☞ மேற்கண்டபுத்தகங்கள் 2-ம் பாண்டியன் புத்தகசாலையில் வழக்கப்படி சேர்க்கப்பட்டன.

---

ப—ர்.

விண்டுவென் றுரைப்பதால்விண்ணினோங்கியே
பண்டுலகளந்தமெய்ப்படிவங்கூர்ந்தடிக்
கொண்டநீர்பகிரதிக்கோதையொத்ததால்
வண்டுழாய்மலேந்தசெம்மலையுமொத்ததே. (70)

இவை மூன்றும் வைதருப்பபாகம். திணை - பாடாண். துறை-மலைவருணனை.

முப்புரத்தினைச்செகுத்தமுக்கணக்கனிற்சிரித்து
முத்தலைக்கணிச்சியுக்கதாற்
றப்பறப்பொருப்பினைக்குனுக்கிடக்கையைச்செருத்
தலத்துறப்புடைத்துருத்தெழா
நெய்ப்புறத்தினிற்குளித்தவச்சிரத்தினைப்பிடித்து
நெட்டுயிர்ப்பொடுற்றியக்கவே
குப்புறப்புழைக்கைவெற்பின்மத்தகத்தினைத்துளைத்த
கொப்புளித்தபச்சிரத்தமே. (71)

மத்தகத்தழுத்துவச்சிரத்தினைப்பறித்துயர்த்தி
மத்தவெற்புடற்றிநிற்பதா
னத்தகத்தடக்குமைக்கடற்கடைக்கனற்சினத்த
னச்சுளத்தினுற்றெதிர்ப்பவே
பித்தகத்தழைத்தடற்பொலிப்புலிப்புலத்தினுற்ற
பெற்றமொப்பவட்கியுட்குநீ
டுத்தமச்சுவர்க்கமுற்றகொற்றவர்க்கிமைப்படுத்த
வொத்தபத்துடைச்சதக்கணே. (72)

புற்புதக்கடக்கவுட்பொருப்புவச்சிரத்தினைப்
புழைக்கையிற்புடைத்தியக்கவே
யுற்றதுக்கிரச்சமர்க்குடக்குமிக்குரத்துரத்
துடைத்ததைப்பறித்துருத்திடா
வற்புதத்தெதிர்த்தியக்கநெட்டடிக்குளுற்றதொற்றை
யக்களிற்றைவிட்டுமுட்டவே
தெற்குவெற்பினைத்துளைத்ததப்புறப்புறக்கொடைத்
திசைக்களிற்றினைத்துளைத்ததே. (73)

இவை மூன்றும் கௌடபாகம். திணை—தும்பை. இவற்றுள், முப்புரத்தினையென்றது எமவெருமை. ஏனையிரண்டும் யானைமறமும் எமவெருமையுமாம்.

விரைக்கமலமுறுக்குடைந்ததகட்டகட்டிடனடுப்பொகுட்டு
வெண்டோட்டும்பர்
நிரைக்கமலத்தினிதிருந்துகுட்டெகினம்பார்ப்பருத்த
நினைத்துநிர்வா
யிரைக்கெழவேசெங்கால்வெள்ளுகிருறுமுன்
னிதழுறிஞ்சியிழிந்தநிந்தே
னரைக்குடுமிமறைக்கிழவனெருப்பிடைநெய்புகுப்பனபோ
னுன்றமாதோ. (74)

மாதண்டர்புகழ்ந்திடவாழ்ந்தருள்வாமபாகத்து
மழைதோய்வெள்ளி
வேதண்டமிசைப்பவளவேதண்டம்பகிரண்டம்
விழைவுகூர்வான்
மூதண்டமுகடுதொடுமும்மதிளின்முரண்முருக்க
முன்கைக்கொண்ட
கோதண்டவடவரைபோற்பணைத்தகெந்தமாதனமாங்
குன்றென்றுண்டே. (75)

நெய்த்திருண்டுசுருண்டுகடைகுழன்றறலின்கெழுதகைத்தாய்
நெறித்துநீண்டு
மொய்த்திருக்குங்குழற்காட்டின்முகையவிழ்பூந்துணர்விரையு
முற்றுமுன்ன
ரெய்த்திருக்குமிடைக்கிடர்மேலிடரிழைக்குந்தமர்போலு
மிருமாந்தொண்பூண்
வைத்திருக்குமுலைமுகட்டிற்பொதிகளபத்தொளிவிரையும்
வனைந்தமன்றே. (76)

இவை மூன்றும் பாஞ்சாலபாகம். முதற்பாட்டு நாடுவாழ்த்து. இரண்டாவது மலைவருணனை. மூன்றாவது குழல்வருணனை. இவை யொன்பதும் குருகாமான்மியம். இவை மூன்றுபாகமும் பலவடி

யான்வரு மொருசெய்புளின்கண்ணே பலவடிதோறும் விரவியும் பேதித்தும் வருவனவுமுள. அவையும் மேற்காட்டுதும். (௧௫)

80. இன்பந்தெளிவுசெறிவுசமனின்னிசையே
நன்சொலுதாரவின்றவலி—மன்காந்தந்
தையலுய்த்தலில்பொருண்மைசாற்றுஞ்சமாதியுட
னையிரண்டும்வைதருப்பமாம்

(எ - ன்.) எடுத்தமுறையானே வைதருப்பத்திற் கெய்து வன வாங் குணவலங்காரங்கட்குப் பெயரு முறையுந்தொகையுமுணர்-ற்று.

(இ - ள்.) இன்பமுந் தெளிவுஞ் செறிவுஞ் சமனிலையு மின் னிசையு முதாரமும் வலியுங் காந்தமு முய்த்தலில் பொருண்மையுஞ் சமாதியென்பதோடும் பத்தும் வைதருப்ப குணவலங்காரமாமென்ற வாறு. (௧௬)

81. ஏனைக்கவுடமிவையீரைந்தொடுங்கூடா
மானைப்பழித்தமதர்விழியாய்—நானயந்திங்
கெண்ணியபாஞ்சாலமிவைகட்கிடைப்பட்டு
நண்ணியதோர்சால்புடைத்தாநன்கு.

(எ - ன்.) ஒழிந்தனவாங் கௌட பாஞ்சாலங்களும் அக்குண வலங்கார மேற்குங் கூறுபாடுணர்—ற்று.

(இ - ள்.) ஒழிந்தகௌடமு மிங்ஙனமெண்ணப்பட்ட பத்தி னோடுங்கூடாது நடக்குமிலக்கணத்தவா மென்றவாறு. பத்தினோ டுங் கூடாதெனவே யும்மை யெச்சமாதலாற் சிலவற்றோடுங் கூடியும் வருமென்பதாம். பாஞ்சாலமு மப்பத்தினோடும் வைதருப்ப கௌள டங்களோடுங் கூடா திடைப்பட்டு நடத்தலைப் பொருந்து மொழுக்கத் தினையுடைத்தென்றவாறு. இவைகட்கும் என்னுமும்மை யிறந்தது தழீஇய எச்சவும்மையாம். (௧௭)

82. சொல்லாற்பொருளாற்சுவைபுறவின்பந்தெளிவு
மொல்காப்பொருள்புலப்பாடொன்செறிவு—நல்லா
யெழுத்தோரினஞ்செறிதலெல்லாவெழுத்தும்
வழுத்தீர்ந்துறல்சமனுமாம். (௧௮)

83. இன்னிசையதின்னிசையாமேய்ந்தவுதாரங்குறிக்கொள்
சொன்னடையால்வேறுபொருடோன்றலா—நன்னுதா
வாய்ந்ததொகைமிக்குவருதல்வலிகாந்த [அல்
மாய்ந்தொன்றனையுயர்த்தலாம். (கக)

84. செய்யுட்பொருளைத்தெளியவிரித்தற்குரிச்சொல்
லெய்துநடைத்துய்த்தலில்பொருண்மை—தையலா
யோங்குஞ்சமாதிபுவமேயத்தின்வினையை
யாக்குவமைக்கேற்றுவதொன்றாம். (20)

(இவைமூன்று சூத்திரமு முடனெழுதப்பட்டன.)

(எ - ன்) இவை யின்பமுதற் சமாதியிறுப பத்து மாமா றுணர்—ற்று.

(இ - ள்.) சொல்லினாலும் பொருளினாலு மினிமையுற வருத லின்பமாம். தெளிவென்பது கவியாற் கருதப்படும் பொருள் கேட் போர்க்குக் குறிப்புமொழியின்றி வெளிப்படைமொழியாகத் தோன் றுவதாம். ஒள்ளியசெறிவும், மூவினமாகிய எழுத்து ளோரின மிகுந்து செறியப்பாடுவதாம். ஒள்ளிய செறிவென்றதனால் எழுத் தானுய சொல்லானுய பொருளுஞ் செறிதலுங்கொள்க. சமநிலை மூவினமும் விரவப்பாடுவதாம். இரட்டை துணிவு. இன்னிசையும் அவ்வவ செய்யுட்கேற்ற சொன்னடையாற் பாடுவதாம். உதாரமும் செய்யுட் சொன்னடையால் வரும்பொருளன்றி யதன் குறிப்பினால் வேறுபொருடோன்றுவதாம். வலியும் தொகைநிலைச்சொன் மிக்கு வருவதாம். காந்தமும் ஒன்றனை யுயர்த்திப் புகழுங்கா லுலகநடை யிறவாமை யாராய்ந்துயர்த்துவதாம். உய்த்தலில் பொருண்மை கவி தன்னுற்கருதிய செய்யுட்பொருளை விளங்க விரித்துக் கூறுவதற்குப் பிறிது மொழிபெய்துகூட்டா ததற்குரியசொற்கள் செய்யுளகத் துளவாம்படி பாடுவதாம். சமாதியும் உவமேயத்தின் வினையை யுவ மைக்கேற்றுவதோ ரிலக்கணத்ததா மென்றவாறு. இதனைச் சாற் றுஞ் சமாதியென்றதனாற் குணவலங்காரங்கள் பத்திலுள்ளு மிதுவே சிறந்த குணவலங்கார மென்பதூஉ மிஃது மூன்றுநெறியார்க்கு மொக்குமென்பதூஉ மாயிற்று. இவற்றிற்கெல்லாம் என்னும்மை

யிடையிட்டுவந்தன. ஆம் என்பதனைச் சூத்திரந்தோறு மிறுதிவிளக் காகக் கூட்டுக. நல்லாய், நன்றுதாஅல், தையலாய் என்பன மகடூஉ முன்னிலை. தையலென்பது அண்மை விளி.

அவற்றுள், சொல்லின்பமாவது அடைசினை முதலென முறை மூன்று மயங்காமை வரும் வண்ணச்சினைச் சொற்களும் முதலொடு குணமிரண்டடுக்கிவரும் அடைசொற்களுஞ் சினையொடு குணமிரண் டடுக்கிவரும் அடைசொற்களும் வழக்கிடமுஞ் செய்யுளிடமுமாக விரண்டிறந்தனவா யடைபலவேண்டினவழியே புணர்ந்த சொற்க ளுடன், வழிமோனை முதலியன வரத்தொடுப்பனவாம். அவற்றாற் கேட்டோர் பெறு மின்பம் சொல்லின்பம். பொருளாவன:—அறம் பொருள் இன்பம் வீடென்பன. அப்பொருளால் வருமின்பமாவது மலரின் மதுக்காரணமாக மதுகரங்கட்கு வருமின்பம்போலக் கவிப் பொருளுட் கொண்டோர்க்கு வரு மின்பமாம். எனவே யவ்விரண்டி னுள், பொருளணியுள்ளு முக்கியமான பொருளணியுடைத்தாய்ப் பாடுவதே பொருளின்பமாம். இனிச்செய்யுள்வருமாறு:—

வெண்டிரைப்புனலருவியலையல்வயல்விரி
வண்டிமிர்பாசடைக்குவளைமென்பனிமலர்
புறக்கொடைமதிதரப்பொதியவிழ்ந்ததுபோய்ச்
சிறக்கணித்தனவாஞ்சேயிதழ்க்குமுத
முட்டாட்டாமரைமுறுக்குடைநாண்மலர்க்
கட்காமருகடைவாய்வழிந்திழிதர
மேய்தருகயவாய்மேதிகன்றுள்ளுபு
பணைமுலைசுரந்துபனித்தபாற்றடினி
நெடுவெண்டிங்களிறைமறுத்துடைத்தொளிர்
செந்தளிர்ப்பூஞ்சுனைத்தேமாத்துகுகனி
முடப்பரியரைப்பலாமுட்புறக்குடக்கனி
புறக்காழ்மாகதப்பூகதமிடற்றி
னிறக்காழ்திரண்டுநின்டுதிர்பழுக்காய்
நெட்டிலையரம்பையினீடுபொற்கூன்கனி
புதையிருடூர்இக்கதிர்பொழிநவமணிக்குவை
சுழித்தெடுத்திரைத்தவாய்த்தூமலர்பலகொடு

பாற்கடல்பொன்னியுட்படி திருவுருவங்
காண்பதின்முன்னியகாட்சியொன்றெனலாய்த்
துறைதொறுந்துறைதொறுந்துழனியின்வளைக்குந்
திருவரங்கேசனைத்திருமறுமார்பனை
மனத்துறசினைந்தும்வாழ்த்தியும்வணங்குன
ரெக்குலத்தெவரேயாயினு
மக்குணத்தவர்க்கடியேனடியேனே. (77)

இந்நேரிசையாசிரியப்பாவினுள் நால்வகை யடைசொற்களும் வந்தவாஞ் சொல்லின்பத்தோடும் பொருளின்பமும் வந்தமையா லிது சொற்பொருளின்பம். இதனு ளீரடை முதலொடுஞ் சினையொடும் புணர்ந்தன வைதருப்பம். இரண்டிறந்த மூவடை புணர்ந்தன பாஞ்சாலம். இரண்டு மூன்றுமிறந்த பலவடை புணர்ந்தன கௌடச்சொல்லின்பம். ஆதலாற் சொல்லின்ப மூன்றுபாகமும் அவற்றோடு மூன்று நெறியார்க்கும் ஒருதன்மைத்தாம் பொருளின்பமும் பல வடியான் வந்த ஒரு செய்யுளகத்துக் காட்டியவாறு கண்டுகொள்க. இதனுட் பொருளணியாவது தற்குறிப்பேற்றவுவமை. திணை — பாடாண். துறை—நாடுவாழ்த்து.

பொன்னசலந்திரண்டிரண்டாம்பொருவமர்தோட்கமலக்கட்
பொலிந்துநின்று
ரன்னவயற்குருகூரரணிவரைவாழ்மதர்நெடுங்க
ணணியிழாய்கேள்
மின்னிடையார்புறந்தருநாண்மிகுகாமக்கடலாழ்ந்த
மிக்கோர்தங்கள்
மன்னுயிரைத்தரும்புணைதான்மலிதிரைநீர்க்கடலிடத்தார்
மடலென்பாரே. (78)

இது வைதருப்பச்சொல்லின்பம். பகுதி—மடல். துறை—உலகின்மேல் வைத்துரைத்தல். இவ்வாறு பொழிப்பு மோனையாய் வருத லின்றெனவேண்டுவர் கௌடர்.

குயிலாருங்குளிர்பொழிற்றென்குருகேசன்குழகனுயர்
குன்றிற்குன்றுக்

கயிலாயன்களத்தணிந்தகடுவிடமுங்கரத்துழையுங்
கரந்தகண்ணாய்
மயிலாலுமழைதவழ்நும்மணிவரைக்கெம்மணிவரைநின்
மணிப்பூண்மன்னும்
பயிலாரப்பணைமுலைக்கோர்பணைமுலையெப்படியெனுமப்
படியாம்பண்பே. (79)

இது கௌடச்சொல்லின்பம். பகுதி—வன்புறை. துறை-இடமணித்துக்கூறி வற்புறுத்தல்.

கடுவேகயலெனக்கரந்தடுங்கண்ணிணை
காமனுங்காமுறுங்காட்சியகான்முகங்
கிள்ளையின்கிளையுங்கிளைத்தகைக்கிளையுடைக்
கீரமுங்கீர்த்திக்கீரமுங்கீரே.
குவடுடைக்குளிர்பொற்குன்றேகுவிமுலை
கூர்புதற்கூன்சிலைகூற்றுயிர்கூட்டுணுங்
கெடலருங்கெழுதகைகெழுமுபுகெழீஇய
கேகயங்கேளொடுங்கேடுறுங்கேழியல்
கைபுனைகைக்கிசைகைக்கிணைகைத்துணை
கொண்டலுட்கொண்டன்னகொண்டைடிங்கொடியிடை
கோடாக்கோவலர்கோற்றொ , கோமான்
கௌரவகௌசிகன்கௌசிகங்கௌத்துவ
மணியெனக்கொண்டுமனவீடளித்தோன்
கண்ணன்குறுங்குடிக்கனவரை
மண்ணகத்துறையுளாய்வளர்நிலமகட்கே. (80)

இது ககர வருக்க முற்றுமோனை. இதுவுங் கௌடச்சொல்லின்பம். பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பிடங் கூறல்.

கயலெனவேமதர்த்தமர்த்தகருநெடுங்கண்ணிவடனக்கிக்
கன்னிமன்னே
வயலெனவேயமர்துணையன்றளவளாயமர்துணையென்
றறிந்ததன்பான்

மயலறவேயியற்றமிழ்செய்மகிழ்மாறன்றுடரியின்கண்
மணந்தகாதல்
புயலெனவேபுரைநறுமென்புரிகுழற்குப்புகல்வனினிப்
புகலுமாறே. (81)

இது பாஞ்சாலச்சொல்லின்பம். பகுதி - மதியுடன்படுதல். துறை - குறையுறத்துணிதல். "குயிலாரு" மென்பதனையும் பாஞ்சாலச்சொல்லின்ப மெனினுமாம்.

வண்ணமுலைப்பொற்றாமரைமுகுளம்விறழிந்து
கண்ணெகிழாவண்ணங்கருதியோ—தன்மதியை
மால்வைத்தமாநிதிவண்கோளூரில்வானுதாஅன்
மேல்வைத்தான்மேனாள்விதி. (82)

இது பொருளின்பம். இதனுன் முலையாகிய பொற்றாமரை முகையவிழாதிருப்ப வதன்மேலாகப்பிரமன் மேனாள் முகமென்றுபெயரையுடைய மதியைவைத்தா னென்னும் பொருளின்பம் வந்தவாறு காண்க. பகுதி - இடந்தலை - துறை - மருங்கணைதல்.

மேலைமலைக்கதிர்மறையக்குவிமரையுட்டேனசையான்மீளாவைகிச்
சோலையில்வண்டினந்திறப்பவயற்கழுநிரிடங்தோய்ந்தசுரும்புமாதோ
மாலையிற்றன்மனைபுகுதுமணமகனைவிறலியொடுமதங்கன்பாடிக்
காலையினிற்றுயிலெழுப்பக்கடைதிறந்துபரத்தையிற்போகியகாட்சித்
[தே. (83)

இதுவுமது. துறை - நாடுவாழ்த்து.

திரகாயத்திரிகருணைக்கிலக்காகுமுணர்வுடையோர்சித்திகாட்டப்
பரகாயத்திடைபுகுந்துமறித்தொருகாயம்புகுதும்பான்மையேய்ப்ப
வரகாயத்துரிவைபுரிஇயொருபாந்தளொருபாந்தளூரிபுக்கூர்ந்து
வரகாயத்தகடுரிஞ்சும்பைந்நறலையமலைமுழைபோய்வைகுமன்னே. (84)

இதுவுமது. மலைவருணனை. இவையிரண்டுங் குருகாமான்மியம். இன்பம் முற்றும்.

ஏவொன்றுடக்கியிருபதுகைக்கார்வயிரத்
தூவொன்றுடலந்துளைபடுத்த—காவொன்
றரங்கத்தானல்லாதனைத்துயிருங்காத்தற்
கிரங்கத்தானல்லாரெவர். (85)

இது வைதருப்பத்தெளிவு. இதற்குச் சொல்லின்முடிவாற் பொருடோன்றும். துறை - கடவுள்வாழ்த்து.

தேனேமுளைமதியஞ்செந்தழல்பாரிப்பவிருந்
தேனேயயலார்சிரிப்பவே—தேனே
யிறைவகுளத்தாமரையோவெய்தார்வேளெய்து
குறைவகுளத்தாமரையோகூறு. (86)

இது சொல்லாற் கவியருமையும் நோக்குடைப்பொருள்கோளுந் தோன்றத் தொடுத்தமையாற் கௌடத்தெளிவு.

(இ - ள்.) தேன்போலுமினிய மொழியையுடையா யிளம்பிறையானது தழலை விரிப்பவு மயலார்சிரிப்பவு மித்துணைப்போது முயிரைத் தாங்கியிருந்தேனே! இங்ஙனமிருந்தவெனது துன்பமிகுதியுநாண்டுறந்ததுங் கண்டு தேனையொழுக்காநின்ற வகுளத்தாமத்தையுடையோ ரந்தோ மேவுகிலர்; இனிக் காமனெய்து குறைந்துபோவன குளத்தின்கட் டாமரையொன்றேயோ வோடையிற் காவியுமாவியு மல்லவோ கூறுவாயாக வென்றவாறு. ஏகார நான்கினுண் முன்னது விளி. இரண்டாவதிரக்கத்தின்கட் குறிப்பு. பின்னையவிரண்டு மீற்றசை. தாமரையோ வென்னுமோகாரம் ஒழியிசை. திணை - பெண்பாற்கூற்றுப்பெருந்திணை. துறை - துன்பமிகுதி தோழிக்குரைத்தல்.

உள்ளத்துணர்வெனுங்கண்ணுட்கொண்டுகாண்பதற்குங்
கள்ளக்கருங்கண்கலுழ்வனகண்—டெள்ளிப்
பிரியாரையுந்திருமால்பேர்நகரார்தூற்றத்
தரியாதென்னுள்ளந்தளர்ந்து. (87)

(இ - ள்.) எனதகத்தே யறிவென்னுங் கண்ணானது நங்காதலருடனென்னையு முட்கொண்டு காணுநிற்பதற்குப் புறத்தே தாமுங்

காணுதவிருப்பத்தா லென்னை வஞ்சித்த கள்ளத்தையுடைய விக்கண்கனழுவதனைக்கண்டு எம்மையிகழ்ந்து, பிரியாதவரையுந் திருமால் திருப்பேர்நகரின்கணுள்ளார் பிரிந்தாரென்று தூற்றுமதனைக்கேட்டுத் தளர்ந்த வென்னுள்ளம் ஒருவழிப்பட்டு நில்லாதென்றவாறு. இது பாஞ்சாலத்தெளிவு. என்னை? வைதருப்பத்தெளிவுபோல வெளிப்படையுமன்றிக் கௌடத்தெளிவுபோல நுண்ணிதாய்க் குறிப்பினுற் கொள்வதுமன்றி யிடைப்பட்ட நீர்மைத்தாய் வந்தமையா னெனக்கொள்க. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - தலைவி தலைவனை யியற்பட மொழிதல். தெளிவுமுற்றும்.

வண்ணமைந்திறவண்ணவன்விண்ணிலு
மண்ணிலும்முறைவார்
கண்ணன்விண்ணகர்மஞ்ஞைவிம்மிய
கண்ணகன்வரையோ
ரண்ணலிம்மலர்கொண்மினென்னவு
மன்னையங்ஙனம்யா
னென்னவொண்ணுதன்முன்னின்முன்னருள்
கென்னமுன்னினளே. (88)

என்பது அன்னுப் அழகிய மேகம்போன்ற திருமேனியையுடையான் சுவர்க்கத்திலும் பூமியிலு முறைவார்கண்ணிலுள்ளான் அவனது திருவிண்ணகரத்து மயில்கள் அகவு மிடமகன்ற மலைப்பக்கத்தொரு பெரியோன் யாங்கள் விளையாடும் வண்டன் மாளிகை முன்றிற்கண் வந்து நுமது வண்டலம்பாவைக்கணிய விம்மாலையை வாங்கிக் கொண்மினென்று கூற அங்ஙனம் வந்து கூறியதற்குச் செய்யவேண்டுவதென்னென் றியா னெண்ணுநிற்ப நம தொளிபொருந்தின நுதலினையுடையாள் முன்னுறாதனை யருள்கென வவன்முன்னேசென்று அதனைவாங்கின ளிஃதியானறிந்தபடி யென்றவாறு. முன்னில்-இன்முன்; அஃது முன்றிலென விலக்கணப்போலியாயும் வரும். முன்னிலெனவே வண்டன்மாளிகையும் வண்டலம்பாவையுங் கூட்டியுரைக்கப்பட்டன. இது வைதருப்பச்செறிவு. என்னை? மெல்லினமாகிய வெழுத்துச்செறிய மெல்லினவண்ணமுற் றவ்வெழுத்தானுய சொற்கள் செறிபச் செறித்தமையினெனக்கொள்க. பகுதி -உடன்போக்கு:

துறை - பூத்தருபுணர்ச்சிக் கூறத்தொடுநிற்றல். இவ்வாறு மெல்லின வண்ணத்தால் மெல்லெழுத்துச் செறிந்துவருதல் விரும்பாது வல்லின வண்ணத்தால் வல்லெழுத்துச்செறிந்தசொல்லோடும் வற்கெனத் தொடுப்பதே வேண்டுவர் கௌடர்.

புட்குழியுத்தமர்புட்கொடியத்தர்பொருப்பின்மடக்குயிலே
கட்டழல்கக்குகுழிச்சிறுகட்கரடத்ரிகடத்தொருமா
விட்புலமுற்றவிருப்பமிகுத்ததொர்வெற்றியனைக்குறுகா
வுட்குறவெற்றினனற்றதுதிக்கையொடெற்றமருப்பிணையே. (89)

என்பது புட்குழியென்னுந் திருப்பதியின்கண் ணுத்தமர் கருடக் கொடியுயர்த்த சுவாமியார்பொருப்பிடத்து மடப்பத்தையுடைய குயிலே மிக்க அழலைக்கக்குங் குழிந்த சிறுகண்களையு முள்ளத்தறு கண்மையையுங் கவுளின்கண் மதத்தினையுமுடையதோர் யானை விண் ணோரனைவரும் விருப்பத்தை மிகுப்பதோர் வெற்றியையுடையா னொருவனைப் பாயும்படிக்குக் குறுகினகாலத் ததனுள்ளமுட்க வவ னதனை வாளாலெறிதலு மதன்றுதிக்கையுந் துதிக்கைபற்றிய விரு கோடுமுடனே யற்ற வென்றவாறு. அங்ஙனம் வல்லிசைவண்ணத் தால் வந்தவாறு கண்டுகொள்க. அஃதே லிதன் முதனூல் செய்த தெண்டியாசிரியர் "செறிவெனப்படுவது நெகிழிசையின்மை" யென வைதருப்பச் செறிவிற்குக் கூறியதனை விரும்பாது ஒருதிறத்தெழுத் தானே நெகிழத்தொடுப்பதே கௌடச்செறிவென வேண்டிய திந் நூலுடையாருட்கொண்டு மிங்ஙனம் வற்கெனத்தொடுத்தன் முதனூ லோடும் வழிநூன் மாறுகொளக்கூற லென்னுங்குற்ற மாமாலோ வெனின், நன்றுசொன்னாய்! அவர்தாமே "விரவத்தொடுப்பது சமனிலை யாகும்" என்பதற்குச் "சோகமெவன்கொலிதழிபொன்றூக்கின்" என்பதனுள் மூவினமும்விரவத்தொடுத்ததனை வைதருப்பச் சமனிலை யெனவும், விரவுதனுள்ளும் வல்லெழுத்துச்செறிய வற்கெனந் தொடுப்பதே கௌடச் சமனிலையென அதற்கு "இடர்த்திறத்தைத் துறிபொற்றொடிநீயிடித்துத்தடித்துச், சுடர்க்கொடித்திக்கனைத்துந் தடுமாறத்துளிக்குமைக்கார்" என வற்கெனத் தொடுப்பதே கௌடச் சமனிலையெனவும் தானுமிவ்வண்ணங் கூறுக்கால் வைதருப்பச்செறி விற்கும், வைதருப்பச் சமனிலைக்கும் வேற்றுமையின்மையானு மிச்

செறிவிற்கு மோசையே நோக்குமென்பதனனுனும் பாஞ்சாலத்தோடும் பாகமூன்றெனக்கோடலானும் வைதருப்ப முதலிய மூன்றற்கு மூன்றுவண்ணமுஞ் சித்திரகவியிற் சாராது செறித்தாரன்றியும் பாயிரத்துள்ளு மிரண்டிடத்தாற் செய்தார் என்பதனு லுலகவழக்கினும் அருமையோடும் வற்கெனத் தொடுப்பானைக் கௌடக்கவி யென்பதுட்கொண்டமையானுந் தன்கோட்கூறலென்றுமுத்தியானும் இவர்க் கெழுத்துச் செறிவு மோசையு மவ்வவ பாகத்தின்படியே செறித்த நோக்கமாதலானும் இவ்வண்ணங்கூறுதன் மாறுகொளக் கூறலென்னுங் குற்றமாகாதென்றுணர்க.

முல்லைமுகைவெல்லுநகைநொய்யவிடை பையவிடை
மொய்யளகநவ்விவிழியா
பொல்லைநடையுள்ளதினிவெள்ளிடைய தில்லையென
வுள்ளபொழில்செய்யினயல்சூழ்
மல்லைநகரெல்லையிவணல்லிமலர்வல்லிபுணர்
வள்ளலுறையெல்லையவனே
தொல்லைமறையுள்ளபடிதெள்ளியுணரையருறை
துய்யபதிசொல்லிலுவனே. (90)

என்பது முல்லையரும்பை வெல்லு நகையையு மெல்லிய நடையையு முளதிலதென் றையமுறு மிடையையும் நெருங்கினகுழலையுமுடைய மான்போனோக்கத்தாய் உனக் கினியொரு கணப்பொழுதே நடையுள தஃதியாதென்னில் இவண் வெளியென்பது சிறிதுமில்லையென வுண்டாய சோலைகள் செய்யினது பக்கமெல்லாஞ் சூழப்பட்ட திருக்கடன் மல்லையாம். அவன் தாமரையாளைத்தழுவும் திருமாலாகிய வள்ளலுறைதானம். உவண் கூறுகிற பழைய மறையின்கணுள்ள நுட்பமெல்லாமவை சொன்னபடியே தெள்ளிதாயுணரு மறையோருறையும் பதியாகலானென்றவாறு. இது பாஞ்சாலச்செறிவு. என்னை? இடையினமாகிய வெழுத்து மிகவுஞ்செறிய வியைபுவண்ணமுமுற் றவ்வெழுத்தானுப சொற்செறிய வந்தமையானெனக்கொள்க. இங்ஙன மூன்று வண்ணமுமுற வாங்காங் கவ்வவினமிகப்பாடுவதன்றி வேற்றினஞ் சிறிதும் விரவாது தொடுப்பின் மூவினப்பாட்டானும் விரவாதுபாடுஞ் சித்திரகவியிற் சாருமாதலாற் பிறவினமுஞ் சிறிது

விரவுவதே முறையென்றுணர்க. இவற்றுள் முன்னையதுபகுதி - நடுங்காடல். துறையுமது. இது பகுதி - உடன்போக்கு. துறை-பதி பரிசுரைத்தல். இவை மூன்றும் எழுத்துச்செறிவு.

மறைமுரசந்தாமமகிழ்வழுதிநாடர்
துறைபொருனைவெற்பூர்துடரி—யுறைகுருகை
யஞ்சம்பராங்குசம்வெள்ளானைகொடியாணைமா
பஞ்சகலியாணன்பரி. (91)

என்பது வழுதிவளநாடர் துறை - பொருனை; வெற்பும்,ஊரும் - துடரியும், உறையுளாங்குருகாபுரியும்; பரி - பஞ்சகலியாணன்; மா - வெள்ளானை; ஆணை - சிபராங்குசம்; கொடி - அன்னம்; தாமம் - மகிழ்; முரசு வேதம் என்றவாறு. இதனுள் வழுதிவளநாடர் என்பது மத்திமதீபம். அதுவே நாடுந்திருநாமமுமாம். வெற்பூர் - நிரனிறை. பரிமா வாணை கொடி விதலையாப்பும், தாமம் மகிழ் முரசு மறை என மொழிமாற்றுமாகத் தசாங்கமென்னுஞ் சின்னங்களாகிய பல்பொருட் செறிவோடும் பல பொருள்கோளுஞ் செறிதலா னிது பொருட் செறிவு. துறை - தசாங்கவாழ்த்து.

மறந்தாங்கித்தெவ்வடுவைந்துதிதாங்கியிருட்பிழம்பு
மடியச்செந்தீ
நிறந்தாங்கியிடங்கரின்வெண்ணிணந்தாங்கிபனைத்துலகு
நியதிகாக்குந்
திறந்தாங்கியொளிர்திகிரிப்படைதாங்கித்திருவடிபொற்
சென்னிதாங்கி
யறந்தாங்கிவளம்புகழ்வாரறந்தாங்கியவரெனுமிவ்
வங்கண்ஞாலம். (92)

தழற்பாணிகறைகெழுவச்சிரபாணிமிளிர்படிகத்
தாமம்வேய்ந்த
நிழற்பாணிவிழைந்தகமண்டலபாணிமுதலெவர்க்கு
நிபனேயாய்வேய்ங்
குழற்பாணிகொடுதொறுவின்குழுவழைத்தமழைமுகில்பார்
குளிர்ப்பானீன்ற

கழற்பானிதனைப்புகழ்சக்கரபாணிபனைத்துயிர்க்குங்
களைகணவான். (93)

இவையிரண்டும் ஒருவகைச் சொற்செறிவு. இன்னனம் வந்த சொற்செறிவுட் பொருட்செறிவு மூன்று நெறியார்க்கு மொக்கும். துறை - சேர்துறைப்பாடாண் பாட்டு. செறிவு முற்றும்.

விழியுங்களபமுலையும்புன்முரலும்வேயுமுந்திச்
சுழியும்முரோமமுமொழுங்குங்கண்டேம்வண்டுசூழ்ந்துசெந்தேன்
வழியுந்திருமகிழ்மாலைப்பிரான்வெற்பில்வல்லிசெவ்வாய்
மொழியுந்துணைநெஞ்சமேசெவிக்கேயென்றுமூழ்குவதே. (94)

இது வைதருப்பச்சமனிலை. துறை - கிளவிவேட்டல்.

பனிப்பிறைப்பற்றுளைக்கட்செவித்துத்திப்பணடவிமேற்
குனித்தபொற்சிற்றடிச்சித்திரக்கார்குருகேசன்வெற்பிற்
றனித்தழற்கட்களிற்றைக்கொடுஞ்சியந்தூரத்திருள்வாய்த்
தனித்துறற்குய்த்துணர்த்துங்கதிர்வேலவன்றாழ்குழலே. (95)

இது கௌடச்சமனிலை. சூத்திரத்துள் நிலையென்பது செய்யுள் விகாரத்தாற் றொக்கதனை விரித்துரைக்க. தனித்துறற்கு - கங்குலின் கட்டனித்துக் குறிவழிவருதற்கு. உய்த்துணர்த்தும் - என்னுள்ளங் கொள்ளச் செலச் சொல்லி புணர்த்தாநிற்கும். கதிர்வேலவன் - ஒளியையுடைய வேலவன். தாழ்குழலே - தாழ்ந்தகுழலினையுடையாய். யானிதற்குச் செய்யவேண்டுவ தென்னென்றவாறு. பணடவி - ஆகுபெயர். பகுதி - இரவிற்குறி. துறை - இரவுவரவுணர்த்தல்.

இடிக்குங்கடகளிற்றுன்சடகோபனியலிசையாய்
வடிக்குந்தமிழ்மறைபாடியமாறன்மணிவரைமே
லடிக்குங்களிமயிலேவருந்தேனுமர்கல்வரைப்பூங்
கொடிக்குங்கொழுகொம்பராமெமர்மாடக்கொடிக்கழையே. (96)

இது பாஞ்சாலச் சமனிலை. பகுதி - இயற்கை. துறை - இடமணித்துக்கூறி வற்புறுத்தல். இவற்றுள் மூவினமும் விரவிவந்தவாறு காண்க. மூன்றனுள் முதற்பாட்டும் மூன்றும் பாட்டும் கிளவிமணிமாலை. சமனிலை முற்றும்.

எழுகா தலினுலிருகாவியுணீ
ரொழுகாமதியா னுலிவாய்—மெழுகா
யுருகா தணையாருயிர்காவலர்பே
ரருளாளருமாமவர். (97)

இதனுள், இருகாவியுணீர் - இரண்டுகண்ணுணீர். ஒழுகா என்றது ஒழுகவென்பத னெதிர்மறை. உருகா தணையாரென்பது வினை யெதிர்மறுத்தவினையெச்சம், அணையாரென்னும் வினைகொண்டது. பேரருளாளருமாமென்னு மும்மையால் உயிர்காவலருமாம் என்னு மும்மை விரிக்க. உயிர்காவலருமாய்ப் பேரருளாளருமாக வுருகு மென் காதல்கண்டு முருகியணைகின்றில ராதலா லிஃதென் வினையன் றோ வென்றவாறு. திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - நிலவுகண்டழுங்கல். இது தூங்கிசைச்செப்பலோசைத்தாய்வந்தமை யால் வைதருப்பவின்னிசை. என்னை? "இயற்சீர்வெண்டளையான் வரும்யாப்பைத், தூங்கிசைச்செப்பலென்மனார்புலவர்." என்றதனு லறிக. இவ்வாறுவிரும்பா தேந்திசைச்செப்பலோசைத்தாய்த்தொடுப் பதே வேண்டுவர் கௌடர்.

குஞ்சரமாமெய்ததுவன்கோதண்டங்கூடாமல்
வெஞ்சரம்பாய்வித்தனரால்வேட்டைதான்—வஞ்சகமே
யாங்கடவார்பூம்புனமீங்காரிவரென்றேயறியேம்
வேங்கடவாணன்சிலம்பின்மேல். (98)

எ - து வேங்கடவாணன் வரையிடத்திவ ரெய்ததுங் குஞ்சர மாம். வில்லுமின்றியே தழையே வில்லாக வெம்மையைச் செய்யும் வாளியைப்பாய்வித்தன ராகையா லிவர் வேட்டைமேலிட்டு வந்தது தான் வஞ்சமேயா மதுவுமன்றி நமது பொலிவையுடைய புனத்தை விட்டு நீங்குகின்றிலரா லிவர்யாரென்றும் வந்தகாரணம் யாதென்றுந் தெளிகிலமென்றவாறு. பகுதி - இருவருமுளவழியவன் வரவுணர்தல். துறை - ஐயுறுதல். இஃதேந்திசைச்செப்பலோசைத்தாய் வந்தமை யாற் கௌடவின்னிசை. என்னை? "வெண்சீர்வெண்டளையான் வரும்யாப்பை,யேந்திசைச்செப்பலென்மனார்புலவர்"என்பதனுலறிக.

மானபரனீந்தமணியாழிகைக்கொடுத்துச்
சானகிதன்னுவிதளிர்ப்பித்தான்—மீன

நெளிதரங்கவேலைநெறிகடந்துதேவர்
களிபுரந்தசேயெமதுகண். (99)

எ-து பெருமையுடைய பரமனாகிய இரகுநாதன் கொடுத்த மாணிக்கத்திருவாழியைக் கொடுத்துச் சனகராசன் புதல்வி திவ்வியான்மாவைத் தழைப்பித்தா னவன்யாரெனின், மீன்களையுடைத்தாய் நெளிக்கப்பட்ட திரையையுடைய சமுத்திரத்தி னெல்லையைக்கடந்து தேவர்க்கெல்லாங் களிப்பைக்கொடுத்த அஞ்சனைபெற்ற புதல்வன் எனக்கென்னுறுப்பிற் சிறந்த கண்ணென்றவாறு. இது ஒழுகிசைச் செப்பலோசைத்தாயே வந்தமையாற் பாஞ்சாலவின்னிசை. என்னை? "வெண்சீரொன்றலுமியற்சீர்விகற்பமு, மொன்றியயாப்பேயொழுகிசைச்செப்பல்" என்பதனாலறிக. இம்மூன்று விகற்பமு மூன்று நெறியார்க்கு மொக்கு மென்பாருமுளர். திணை-பொதுவியல். துறை-தூதுவென்றி.

நாட்டங்களிபற்றநாவுநசைபற்ற
வேட்டிற்பலர்கையிணைபற்றத்—தோட்டிலஞ்சிக்
கன்புற்றமுத்தர்பெருமானடிபரவி
யின்புற்றவர்க்கடிமையாம். (100)

இவ்வாறு வரும் பொய்ந்நிலைப்பட்ட வின்னாவிசை மூன்றுநெறியாரும் வேண்டாரெனக்கொள்க. தெண்டியாசிரியர் ஒழுக்கிசையென்பது மிது. திணை-பாடாண். துறை-பழிச்சினர்ப்பரவல். இன்னிசை முற்றும்.

மண்ணோர்தொழுஞ்சேறைமாயோன்மணிமார்பிற்
பெண்ணோர்மனுகுலமாம்பெற்றியாய்—விண்ணோர்
மருந்துதலைப்பெய்திருப்பமம்மர்கூர்நஞ்ச
மருந்துதலைச்செய்பவரிங்கார். (101)

எ-து உலகின்கண்ணுள்ளார் வணங்குந் திருச்சேறையின்கண் மாதவன் றிருமார்பிலிருக்குந் திருமகள் மனுகுலத்துட் டோன்றியதொன்று மியல்பினையுடையாய் விண்ணிற் றேவர்பானமாகிய வமிர்தமானது தம்மிடத்தே தமதாகவிருப்ப வதனையு மருந்தி மருந்து

2,304,000 மைலும், விலகும்போது 126,318,000 மைலு மிருக்கி றன. அதன் மந்தோச்ச சீக்கிரோச்சவித்தியாசம் 26000000 மைலாகும். இதனால் இதன் வட்டமானது சக்கிரமாயிராது அண்ட வடிவினையுடையதாகும். இக்கிரகமும் பூமியைப்போலத் துருவங்களிற் றட்டையாயும் மத்தியிற் பருத்துமிருக்கும். சூரியனுக்கும் அங்காரகனுக்குமுள்ள மத்தியதூரத்தாற்,சீதோஷ்ணங்கள் பூமியைக் காட்டிலும் 9-க்கும் 4-க்குமுள்ள வித்தியாசம்போன்று தோற்றும். முன்னே அங்காரகவாண்டு† இவ்வளவெனக் குறிக்கப்பட்டிருக்கிறது. துருவங்களிற் பருவங்கள் நீட்டித்துக் காணப்படுமாயினும் அதனது மத்தியரேகை அதன் வட்டத்திற்கு $27\frac{1}{4}$ பாகையே சாய்வாயிருப்பதால், $23\frac{1}{2}$ பாகை சாய்வாயிருக்கும் பூமியிற் றோற்றும் ருதுக்களுக்கு மதற்கும் அதிக வித்தியாசமிருக்கக் காரணமில்லை. அங்காரகனுக்குச் சூரியன் அதிதூரத்திலிருக்கும்போது கோடைகால முண்டாகிறது.

அங்காரகன் தன்னைத்தானே 24மணி 33 நிமிஷம் 227 சகண்டிற் சுற்றுகிறது. அப்படிச் சுற்றுவதால் அடிக்கடி பேதங்கள் தோற்றுகின்றன. உற்றுப் பார்க்கும்போது அதன் இருதலைகளிலும் இரண்டு வெண்மையான ஒளிப்பாகங்கள் காணப்படுகின்றன. விளிம்போரமெல்லாம் வெண்மையாகத் தோற்றுகின்றனவென மேலே கூறினும். அவை அதிக ஜோதியாக ஓரம்வரையிற் றென்படுகின்றன. இதனைச் சுற்றி இரண்டு உபக்கிரகங்கள் $30\frac{1}{4}$ மணியிலும் $7\frac{2}{3}$ மணியிலும் ஓடுவனவாக 1877மாண்டிற் கண்டுபிடிக்கப்பட்டன.

இருநூறு வருடங்கட்கு முன்னரே செவ்வாய் மண்டலத்தின் பரப்பிற் காணப்படும் சிவப்பும் இருட்பாகமும் திடீரென வுண்டாகிய தல்லவென்றும், சாசுவதமானவையென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன. இருட்பாகங்கள் நீர் நிறைந்த விடமென்றும், ஒளிப்பாகங்கள் பூமியென்றும் அந்நாட்டொட்டு இதுகாறும் தீர்மானித்து வருகின்றனர். நமது பூமி யிருப்பதுபோலவே அங்கும் நான்கு பக்கங்களிலும் ஜலத்தாற் சூழப்பட்ட பூமி யிருக்கின்றது. அவற்றை ஐரோப்பிய வானசாஸ்திரிகள் கண்டுபிடித்தவர்கள் பெயரால்வழங்கு

† 687 நாளென்பர் புரோக்டர்.

கின்றனர். இதற்குற்ற சாக்ஷியங்களென்னவென்று விசாரிப்பது சுக ஜமே. சந்திரனிலும் அனேக சமுத்திரங்களிருப்பதாகப் பெயரிட்டு வழங்கிவந்து, இப்போது சமுத்திரமே யில்லையென்று வானசாஸ்திரி களாற்சொல்லப்படுவதும், உண்மைதான். ஆயினும் அப்படி யிதிற் றென்படுவதில்லை. ஒருக்கால் டால்ஸ்என்னும் சாஸ்திரக்ஞர் அதனைச் சோதித்துக்கொண்டிருக்கும்போது மறைந்திருந்த ஒரு இடம் வர வர விலக ஆரம்பித்துச் சுத்தமாக ஒருமணி நேரத்திற்குள் தோற் றிற்றும். நமக்கு அதன் மத்தியரேகை முதலியன தெரிந்திருப்ப தால் இன்னகாலம்சென்று வருகிறதெனக் கண்டுபிடிப்பது சுலபம். அப்படிப்பார்த்து அது மாரிகாலமாயிருந்ததால் நமது நாட்டிலும் மாரிகாலத்தில் உச்சி வெடிவெடிப்பதுபோல வெடித்திருக்க வேண் டுமெனத் தீர்மானித்தனர். சீதோஷ்ண ஸ்திதி பூமியைவிடச் சௌ கரியமாயிருப்பதால் அங்குக் கோடை மாரிகாலங்கள் அதற்குத் தக்க படி இருக்கக்கூடும். நம் நாட்டிலேயே மாரிகாலத்தில் அதிகமப்பும் மந்தாரமுமாயிருக்குமாயின் அங்கு எப்படி யிருக்கவேண்டும். இத னைக் கண்டு சிலர் மயக்குறுகின்றனராம். அப்படி மயக்குறக் காரண மில்லையெனச் செவ்வனே யாராய்ச்சி செய்திருக்கின்றனர்.

சிற்சில சமயங்களிற் செவ்வாயை நன்றுயாராய்ச்சிசெய்ய இடந் தாராது மூடும் பொருள் ஜலபதார்த்தமெனக் கொள்ளவேண்டி யிருப் பதால் அங்கு நீர்நிலைக ளிருக்கின்றனவென்பது நிச்சயம். ஆகவே நமது சமுத்திரங்கள் நீலநிறமாய்த் தோற்றுவதால், செவ்வாயினும் பூபாகம் சிவந்தும், நீர்ப்பாகம் நீலமாயும் தோற்றுகிறது. வர்ண சோதனையால் நமது பூமியிற்றோற்றும் நீராவிப்படலம் முதலியன அங்கும் தோற்றுவதாக நிச்சயித்திருக்கின்றனர். ஆனாலவை யிங் குப் பூமியிற்படும் உஷ்ணம் மறுபடி சூரியனிடம் செல்லாமற் றடுப்பதுபோல வங்கும் தடுக்க உபயோகப்படுவதோடு பூமியையும் மழை ரூபமாக வளஞ்செய்யக்கூடும். மழையிருக்குமாயின் காற்றி ருந்தே தீரவேண்டும். ஆகையால் வாயு வியாபித்திருக்கிறதென்பது முண்மையேயாம்.

இவைகளெல்லாம் இருக்கும்போது ஜீவராசிகளு மிருக்கவேண் டுமென மேல்நாட்டு மேதாவிக ளெண்ணுகின்றனர். அந்த எண்ணத்

தைப் பூர்த்திசெய்து அப்படி அறிவுடையோ ரிருக்கின்றதாவெனச் சோதிக்கவேண்டிய ஏற்பாடுகள் செய்துவருவதாகச் சமாசாரப் பத்திரிகைகள் மூலமாய் வாசித்த ஞாபகமிருக்கிறது. அப்படியுமிருக்குமாயின் அதுவும் வியப்பாயிருக்குமென்பதிற் றடையென்னை.

---

## வியாழன்.

இதுவரை நமது பூமிக்குச் சமீபமாயிருந்த கிரகங்களையும் பூமியையும்பற்றிச் சொல்லிவந்தோம். இப்பொழுது நமது பூமிக்கும் சூரியனுக்கும் அதிக தூரத்திலிருக்கும் கிரகமான பிரகஸ்பதியைப் பற்றிப் பேசுவோம். இந்தக் கிரகமானது நமது பூமிக்கு வெகு தூரத்தி (475692000 மைல்) லிருப்பதால் அதனைத் தூரதிருஷ்டி கொண்டு காண்பது முடியாதகாரியமாகிறது. இக்கிரகமானது மற்றைக் கிரகங்களைப்போலன்றித் தன்னை நான்குஉபக்கிரகங்கள் சுற்றிக் கொண்டுவரச் செல்கின்றது. இக்கிரகம் முழுதும் வட்டவடிவமாயின்றித் தட்டையாகவிருக்கிறது. அதன் குறுக்களவு 85000மைல்* அல்லது பூமியைவிடப் பதினுறுமடங்கு பெரியது. சந்திரனினின்றும் பார்க்கின், 33 மடங்கு அதனைவிடப் பெரிதாயும், ஆயிரஞ் சந்திரர்களுதயமாகு மொளியுடையதாகவுமிருக்கும்.

இவ்வளவு பெரிய கிரகமாயினும், அது தன்னைத்தானே 9மணி 55 நிமிஷம் 26 சகண்டிற் சுற்றிக்கொள்கிறதென, அக்கிரகத்திற்றோற்றும் புள்ளிகள்கொண்டு கணக்கிட்டிருக்கின்றனர். இக்கிரகம் மத்தியரேகைக்கு 87 பாகைதான் சாய்வாகையால் அது னிரவு பகல் வித்தியாசத்திற்குக் காரணமில்லை. எக்காலமும் வசந்தமாகவே யிருக்கவேண்டுமாம். இது ஒருதரம் சூரியனைச்சுற்ற ஏறக்குறைய 12 வருடங்கள் (சரியாக 4232½ நாட்கள்) செல்லுகின்றன. அப்படியாயின் அதனது சுற்று 10478 ஆகவேண்டும். இது இவ்வளவு பெரியதாயினும் சூரியனொளிதான் இதற்கும் வேண்டியிருக்கிறது. இது பூமியைவிட 1387,431 மடங்கு கனமுள்ளது.

---

* லாசகிரென்பவர் 85390 மைலென்பர்.

இதன் மத்தியில் அனேக கோடுகள் புலப்படுகின்றன. அவைகளுட் சில சிவந்த நிறமாயுந் தோன்றுகின்றன.

இதனைச்சுற்றி நான்கு உபக்கிரகங்கள் ஓடுகின்றனவென்றோம். ஒவ்வொன்றும் தன்னைச் சுற்றும் காலமும் ஒன்றற்கொன்றுள்ள தூரமும் பின்வருமாறு காண்க.

| | நாள் | மணி | மினிட் | ஒன்றற்கொன்றுள்ள தூரம் |
|---|---|---|---|---|
| முதலாவது (அயோ) | 1 | 18 | 28 | 2352 |
| இரண்டாவது(யூரோபா) | 3 | 13 | 43 | 2099 |
| மூன்றாவது (கனிமீட்) | 7 | 3 | 43 | 3436 |
| நான்காவது(காலின்டோ) | 16 | 16 | 32 | 2929. |

மேற்கூறிய உபக்கிரகங்கள் சுற்றுங்காலத்தை யுற்றுநோக்கின், அவைகள் சந்திரனைவிட அதிக வேகமாகச் சுழலுகின்றனவென்பது தெளிவாம். நமது நாட்டிற் கிரகணமுண்டாவதுபோன்று இந்தஉபக்கிரகங்களாலும் வியாழன் மறைக்கப்படுகிறதென்று நமக்குப்புலப்படுகிறது. பிரகஸ்பதியினிடத்து ஜீவராசிகள் வசிக்கக்கூடு மென்பதற்கான தோற்றமிருப்பினும் பூமிக்கு இக்கிரகம் வெகுதூரத்திலிருப்பதா லொன்றும் நிச்சயமாகச் சொல்லக்கூடவில்லை.

---

## சநி.

முன்னர் நமது பூமியைவிட அனேக மடங்கு பெரிதானவொரு உலக மிருப்பதாகச் சொன்னோம். அதுவேயொரு ஆச்சரியகரமான விஷயமாயினும், இப்பொழுது அதினுமொரு விசேஷமான விஷயமொன்று வெளிப்படுகிறது. பிரகஸ்பதி மண்டலத்திற்கு அடுத்ததாக வருவது சநி மண்டலமாம். இக்கிரகமானது மற்றவைகளைப்போற் றனித்திராது ஒரு வளையமிட்டுத் தோன்றுகிறது. நக்ஷத்திர சாலைகளிலுள்ள தூரதிருஷ்டிகொண்டு அதனிற் பழக்கமுறாத வொருவன்கூட மந்தனை யுற்றுநோக்குவனாயின் அவனுக்கு அவ்வளையத்துடன்

றேற்றுகிறது. இக்கிரகத்தை முதன்முதலில் நச்சுக்குழாய்கொண்டு பார்த்தபோது இருபக்கங்களிலும் இரண்டு ஸ்தம்பங்களிருப்பதாயும் நடுவில் இக்கிரகம் தோன்றுவதுபோலவும் காணப்பட்டதாக எழுதியிருக்கிறர். பிறகு ஐரோப்பிய நிபுணர்கள் கருவிகொண்டு சோதித்தபோது, இக்கிரகத்தை யொரு சோதி வளையம் வளைந்துகொண்டிருப்பதாக விளங்கிற்று. இந்த வளையத்தி னிருபாகங்கள்தான் காலிலியோ வென்னும் வானசாஸ்திரிக்கு தூண்களைப்போற் றேற்றியதாம்.

இக்கிரகம் சூரியனைச்சுற்றிச் சக்கிராகாரமாயோடாது, அண்டாகிருதியாக வோடுகிறது. இது தன்னைத்தானே 10 மணி 29 நிமிஷம் 17 சகண்டில் சுற்றுகிறது. இது சூரியனை முழுவதுஞ் சுற்ற 24630 தரம் சுழலவேண்டும்; அப்போது நமக்கேற்பட்டிருக்கு மிராசிமண்டலத்தை மந்தன் சுற்ற 30 வருடமாகிறதென்பது நிச்சயமாகிறது. சாதாரணமாக இந்த 24630ஐ வருஷமான 360க்கிய 68½ ஈவு கிடைக்கிறது. சநி 10 மணி 29 நிமிஷம் 17 சகண்டு அல்லது அரைநாளுக் குள்ளாகவே தன்னைச் சுற்றிக்கொள்வதால் 68½யிற் பாதிக்குட்பட்டே சூரியனைச் சுற்றி மறுபடி யதேயிடத்திற்கு வரச் செல்கிறதென்பது பார்வையிற் றெரிகிறது. கணக்கிடச் சரியாகவே யிருக்கும். கிரகங்கள் சாதாரணமாகப் பூமிக்கு எதிரிலும் சூரியனுக்குப் புறம்பேயு மிருக்கும்போது சமீபத்திலும், சூரியன் கடையிலும் கிரகம் மத்தியிலுமிருக்கும்போ ததிகதூரத்திலுந்தென்படும். இதற்குக் காரணம் அவைகளு ளொவ்வொன்றும் அந்தரத்திற் செல்வதுதான். இதுவுமன்றி இரண்டும் வட்டரேகையிற் (இராசிமண்டலம்) சென்றுகொண்டிருப்பது மொன்று. சூரியனைச்சுற்றி விருத்தமாகச் சநி யோடாது அண்டாகிருதியாக வோடுவதால் ஓரிடம் அருகாகவும் ஓரிடம் தூரமாயுமிருக்குமன்றே. அதன்படி சமீபதிருஷ்டி 823301000 மைலும் தூர திருஷ்டி 920973000 மைலுமிருக்கின்றன. பூமிக்கு 732000000 மைலும் 1002000000 மைலுமாயிருக்கும். இவ்வளவு தூரத்திலிருந்தும் நக்ஷத்திரங்களை யறிந்தோர் இதுதான் சநி யென்று ஒன்றைக் காட்டுகின்றனரேயெனின், அதன் ஆகிருதி பூமியைவிட 9 மடங்கு அதிகமானதென்பது அதன் விட்டம்

70100 மைலென்பதால் விளங்கும். அதன் கனவளவு 700 மடங்கதிகமானதா யிருக்கக்கூடுமெனக் கணக்கிடுகின்றனர்.

சூரியன் அதிக தூரத்திலிருப்பதால் சூரியனொளி அவ்வளவாகப் படுவதில்லையாம். ஆயினும், வானசாஸ்திரத்தைக்கொண்டும், மற்றும் கருவிகளைக்கொண்டும் பார்க்கும்போது பூமிக்கு இக்கிரகத்தாற் றென்படுமொளி காணவேண்டியதற் கதிகமாகவிருப்பதாகத் தெரிகிறது. இதனைச் சுற்றியிருக்கும் மண்டலங்கள் கடின பதார்த்தமுமன்று; ஜலபதார்த்தமுமன்று. இருவகையாகச் சொல்லப்படக்கூடாததா யிருந்ததோடு அவைகளாற் சநிக்கு அதிக வொளிபெறக்கூடியதாயுமில்லை. இதன் எட்டு உபக்கிரகங்களுஞ் சேர்ந்தா லதுகொடுக்கக்கூடாதோவென்று லவைகள் நமது சந்திரனைவிட 2, 1, $1\frac{1}{4}$, $\frac{3}{4}$, $\frac{5}{8}$, $\frac{1}{3}$, 1/100, 1/40 ஆகிருதியுடையனவாயும், எல்லாஞ்சேர்ந்தாலு மிந்துவைப்போ லாறுசோமன்கள் கூடிய இடமே யுடையதாகையாலும் அவற்றால் தனக் கவ்வளவு பிரயோஜனமற்றதாயிற்று. இதனிடையில் 1805ல் சநியினிடத்துச் சிலஉற்பாதங்கள், அதாவது அதன்விருத்தாகாரம் மறைந்து கிரகமே நாற்கோணச்சார்வா யிருப்பதாகச் சர்உவில்லியம் ஹெர்ஷலென்னும்பேர்பெற்ற வானவிற்பன்னர் தெரிவித்தார். அதனைப்போ லனேக நிபுணர்கள் கண்டனராயினும் பலர் பலவிதமாகத் தீர்மானித்தனர். முடிவாக பிராக்டர் என்னும் நிபுணர் இவைகளைச் செவ்வனே யாராய்ந்து அதனிடம் இயல்பாகவே உஷ்ணமிருக்கிறதென்றும், அதனாலுண்டாகும் புகை மேகங்கள் அவ்விதம் உயரக்கிளம்பி அதன் விருத்தாகாரத்தை மறைக்கின்றனவென்றும் தீர்மானித்தார். அதனையே இதுவரையிலுமுள்ள சாஸ்திர விற்பன்னர்க ளொப்புக்கொண்டு வருகின்றனர். அதனாலேயே நமக்கு அதிக ஒளிபெற விடமுண்டாகிறது.

(தொடரும்.)

இலக்கணவிளக்க பரம்பரை,

திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.

---

ஸ்ரீ:

# பக்தி வைபவம்.

——·⊱:o:⊰·——

## ஈசுவரதத்துவம்.

1. உலகம்யாவையுந்தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலும்நீக்கலும்நீங்கலா
அலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கேசரணங்களே.

2. ஆக்குமாறயனுமுதலாக்கியவுலகம்
காக்குமாறுசெங்கண்ணிறைகருணையங்கடலாம்
வீக்குமாறரனுமவைவீந்தநாண்மீளப்
பூக்குமாமுதலெவனவன்பொன்னடிபோற்றி.

எவன் ஈசுவரன்:—எவனிடத்திலிருந்து இந்தப்பிரபஞ்சம் உண்டாயிற்றோ, எவனுடைய ஆஞ்ஞையின்மூலம் இப் பிரபஞ்சம் நடக்கிறதோ, எவனிடத்தில் இப் பிரபஞ்சம் லயமாகிறதோ, பிரபஞ்சம் லயமாகியபின் எவனிடத்திலிருந்து மீள உண்டாகிறதோ ஆகிய இவற்றிற்கெல்லாம் முதற்காரணமான தனி வஸ்து எவனோ அவனே ஈசுவரன். அவனே நித்தியமாயுள்ளவன், பரிசுத்தமானவன், எப்போதும் சுயேச்சையுள்ளவன், ஸர்வ வல்லமையுள்ளவன், ஸர்வஞ்ஞன், பரம காருண்யப்பிரபு, நிர்விசேஷமானவன், நிர்விகாரமானவன், நிச்சலமாயுள்ளவன், மேருகிரியைப்போல்ஸ்திரமாயுள்ளவன், சிந்மயன், அநிர்வசனீயமானவன், குருவுக்கெல்லாங்குரு ஆகிய இவைமுதலிய குண விசிஷ்டனும் குணரகிதனும் இருக்கிறான். கடவுள் இருப்பு. ஆகாயத்தில் இரவில் அநேக நக்ஷத்திரங்களைக் காண்கின்றோம். ஆனால் அவை சூரியோதயமானபோது காணப்படுவதில்லை. அந்தக் காரணத்தைக்கொண்டு பகலில் ஆகாயத்தில் நக்ஷத்திரங்களே இல்லையென்று கூறலாமா? அவ்வாறே அஞ்ஞானதசையில் ஈசனைக்காணப் பெறாத காரணத்தால் ஈசுவரன் இல்லையென்று சொல்லுதல்கூடாது.

நீர் என்ற ஒரு பொருளையே ஜலம், வாரி, பாணி என்று இவை முதலிய பல, சொற்களால் வழங்குவதுபோலவே ஆநந்தஸ்வரூபமாகிய பிரமத்தைப் பலர் பலவிதமாகக் கூறுவர். குயவனது கடையில் குடம், பானை, ஜாடி, கலயம், தாலம் முதலிய பலவகை யுருவமைந்த பாத்திரங்கள் இருந்தபோதிலும் அவையாவும் மண்ணாற் செய்யப்பட்டனவேயாகும். அவ்வாறே கடவுளும் ஒருவரேயாயினும் வெவ்வேறு காலதேச வர்த்தமானங்களால் வெவ்வேறு நாமரூபங்களால் பூஜிக்கப்படுகின்றார். கடவுள் ஒருவரேயாயின் வெவ்வேறு சமயங்களிற் கூறும் வண்ணம் வெவ்வேறு தன்மையாய்க் காணப்படுவது எங்ஙனம்? என்பார்க்கு வீட்டின் ஒரே யஜமானன் ஒருவனுக்குப் பிதாவாயும் மற்றொருவனுக்குச் சகோதரனாயும் ஒருத்திக்குக் கணவனாயும் இவ்வாறு பல பிரகாரங்களாற் காணப்படுவதுபோல எந்த எந்தப் பக்தனுக்கு எந்தப்பிரகாரம் காட்சி அளித்தாரோ அந்தந்தப்பிரகாரங்களாக வர்ணிக்கப்படுகின்றார் என்றும், மாடிமேல் ஏறுவதற்கு ஏணி மூங்கில், படிக்கட்டு, கயிறுமுதலிய சாதனங்கள் பயன்படுவதுபோல் கடவுளைக் காண்பதற்கும் பலவகை மார்க்கங்களும், சாதனங்களும் ஏற்பட்டிருக்கின்றன என்றும் கூறலாம். ஆகாயத்திலிருந்து விழுகிற மழைநீர் எவ்விதமாகச் சமுத்திரத்தை யடைகிறதோ அவ்விதமே எந்த தெய்வத்தை எந்த மதத்திலிருந்து வணங்கினும் கடைசியில் எல்லாம் பரமாத்மாவான கேசவனையே அடைகிறது. நம்மாழ்வாரும்,

"நும்மின் கவிகொண்டு நும்நும் இட்ட தெய்வமேத்தினல்
செம்மின் சுடர் முடி என் திருமாலுக்குச் சேருமே."

என்று திருவாய் மலர்ந்தருளினர். அவ் வுருவங்களுள் ஒன்றை மாத்திரம் கண்டவன் அதுதான் கடவுளின் உருவம் என்று உணர்கிறான். ஆனால் அவரது அநந்தகோடி லீலா விபூதிகளையும் கண்டு களித்த ஞானி ஒருவனே இவ் வநந்தகோடி ரூபங்களெல்லாம் அவ் வாநந்த மூர்த்தியின் விபூதிகள் என்று கூறமுடியும். கடவுள் சகுணமாயும் நிர்க்குணமாயும் விளங்குகின்றார். அவற்றை முற்றும் கண்டவர் ஒருவருமில்லை. அவர் இன்னும் எத்தகையர் என்பதைச் சொல்ல அவரால்தான் ஆகும்.

அப்படியானால் இரண்டுவிதக் கடவுள் உண்டோ? இதுவல்ல அதுவல்ல என்று ஒவ்வொன்றையும் பரிசோதித்துப்பார்த்துக் கடைசியில் சச்சிதானந்த ஸ்வரூபமாயிருக்கிறவனே பகவான் என்று கண்டுபிடிக்கும் தத்துவஞ்ஞனுக்கும், இதுவரை சொன்னபடி பிரம்மசுரூபி என்று கண்டு பகவானைக்கொண்டாடும் பக்தனுக்கும் இரண்டுவித ஸ்வாமிகள் உண்டா? எவன் சச்சிதானந்தமாக இருக்கிறனே அவனே பக்தனுக்கும் பகவான். ஸகுணப்பிர்ம்மமும் அவனே. நிர்க்குணப் பிரமமும் அவனே. இரண்டும் ஒன்றே. பக்தனல் பூஜிக்கப்பட்ட கடவுள்வேறு பிரம்மம்வேறு என்று எப்போதும் எண்ணமலிருக்கவேண்டும். ஒன்றுகி எங்கும் வியாபகமாயிருக்கிற பிரம்மத்தை நெஞ்சில் நினைத்துத் தியானிக்கமுடியாத அவ்வளவு சூக்ஷ்மமாயிருக்கிற காரணத்தை முன்னிட்டே பக்தன் எல்லாவற்றிற்கும் முதற்காரணமான ஈசுவரனைப் பிரமத்தில்நின்றும் சகுணமாக உபாசிக்கிறுன். அதாவது சகுணபிரம்மமாகத் தியானிக்கிறுன். ஏனென்றல்:—பிரமம் களிமண்ணுகவும் அதிலிருந்து கணக்கில்லாத நானுவித வஸ்துக்கள் செய்யப்பட்டதாகவும் இருக்கிறது. களிமண்விஷயத்தில் அவையெல்லாம் ஒன்றே. ஆனல் உருவம் அல்லது தோற்றம் அவைகளுக்கு ரூபத்தை உண்டுபண்ணுகிறது அப்படிப்பட்டவஸ்துக்களாக அவைகள் செய்யப்படுவதற்குமுன்னமே அவையெல்லாம் களிமண்ணில் சூக்ஷ்மமாக அடங்கியிருந்தன. பதார்த்தத்தால் அவைகள் எல்லாம ஒன்றே என்பதில் சந்தேகமில்லை. ஆனல் அவைகளுக்கு ரூபம் உண்டாகும்போதே அந்தரூபம் உள்ளபரியந்தம் அவைகள் நானு பேதமுள்ள வெவ்வேறுக இருக்கின்றன. களிமண்ணுகிய எலியானது களிமண்யானையாக ஒருபோதும் ஆகமாட்டாது. ஏனெனில் களிமண்ணுக வைத்துப்பார்க்கும்பொழுது அவைகள் ஒன்றுயிருந்தாலும் பிரத்தியக்ஷ வெளித்தோற்றத்தில் ரூபம் அவைகளை உள்ளபடி வித்தியாசமாகக் காட்டுகிறது. அதுபோல் ஈசுவரனே தனிவஸ்துவாயுள்ள தத்துவப்பொருளின் பிரத்தியக்ஷரூபம். அல்லது வேறுவிதமாகச் சொல்லுவோமானல் பார்க்கக்கூடியரூபம் ஈசுவர ரூபமேதான். இப் பிரபஞ்சசிருஷ்டியும் நித்தியமாயுண்டு ஈசுவரனும் நித்தியமாகவிருக்கிறுன்.

ஜீவாத்மா பரமாத்மா என்று இருவரும் நித்தியர்களாயிருக்க இருவர்க்கும் உள்ள வேற்றுமை என்ன என்பதைப்பற்றி ஆராய்வோம். வேதாந்த சூத்திரங்களின் நான்காவது அத்தியாயத்தில் நான்காவது பாதத்தில் மோக்ஷத்தை அடைந்தபிறகு பந்தத்தில்நின்றும் விடுபட்ட ஜீவாத்மாவுக்கு வரக்கூடிய பெரும்பான்மையான அநந்தமான சக்தியையும், ஞானத்தையும்பற்றிச் சொல்லியபிறகு சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாரமாகிற முத்தொழில்களைச் செய்யக்கூடிய சக்தி பகவானுக்கே யிருப்பதைத்தவிர வேறு எவரும் மோக்ஷத்தை யடைந்தவர்களாக விருந்தாலும், அப்படிப்பட்ட சக்தியை யடையார் என்று ஒரு சூத்திரத்தில் வியாசபகவான் எடுத்துச்சொல்லுகிறார். துவைதமத பாஷியகாரர்களுக்கு மேற்படி சூத்திரத்திற்கு வியாக்கியானம் செய்வதில் பரமாத்மாவான பகவானுக்குள்ள அநந்த சக்தியும் பூரணமான சுயேச்சை நிலைமையும் கீழ்ப்பட்ட ஜீவாத்மாவுக்குக் கிடைப்பது எப்பொழுதும் அசாத்தியமென்று காண்பிக்க எளிதாயிற்று. துவைதத்தில் பூரண பாண்டித்தியமுள்ள மத்வாசாரியார் வராஹ புராணத்திலிருந்து ஒரு சுலோகத்தை உதகரித்து இதைப் பற்றித் தன் அபிப்பிராயத்தைச் சுருக்கமாக எழுதுகிறார்.

(தொடரும்.)

வி. தி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
தமிழ்ப்பண்டிதர்.

---

உ

## பிழைதிருத்தம்.

—:o:—

சென்ற கார்த்திகைமாதச் செந்தமிழில் ௩0-ஆம் பக்கம் ௧௩-ஆம் வரியில் "கடைய கடையிணை, பின்கடைக், கூழை யிடைப்புணர்வு" "என்றிருப்பதை கடையே கடையிணை பின் கடைக்கூழை இடைப் புணர்வு" எனப் பிரித்துக்கொள்க.

பத்திராதிபர்.

# புத்தக வரவு.

(1) திருமந்திரம்:—இது சிவயோகசித்தியடைந்து சிறந்த திருமூலதேவராற் செய்யப்பட்ட, சிவாகமசாரப்பொருள்களை யுபதே சிக்கும் 3000-செய்யுள்களை யுடையதாய்ச் சைவத் திருமுறைகளுட் பத்தாந்திருமுறையாகவைத்துப் போற்றும் பெருமைவாய்ந்ததென் பது யாவரு முணர்ந்ததே. யாப்பருங்கலவிருத்தியுள் மிக்குவரும் ஆரிடப்போலிக்கு உதாரணமாக இந்நூற்செய்யுள் காட்டப்பட்டமை யாற் பிறராலும் இது ஆரிடநூல்லியமாக மதிக்கப்பட்டதென்பதும் நன்கு விளங்கும். இவ்வருமை வாய்ந்த தமிழ்மறையானது முன் னரே யச்சிடப்பட்டிருப்பினும் அது சுத்தபாடமின்றி யிருப்பது கண்டு சிவபுண்ணியச் செல்வரான தேவிகோட்டை ஸ்ரீமாந் மெ. அரு நா. இராமநாதஞ் செட்டியார், ஸ்ரீமாந்-மெ. அரு. அரு. அருணாச லஞ் செட்டியார் இவர்கள் விருப்பத்தையும் பொருளுதவியையும் கொண்டு ஸ்ரீலஸ்ரீ சபாபதி நாவலரவர்கள் மாணாக்கர் மாவை ஸ்ரீமத்-விசுவநாதபிள்ளை அவர்களாற் றத்துவவிசார சிலரான சில பண்டி தர்கள் முன்னிலையிற் பலபிரதிகளை வைத்துப் பரிசோதித்துத் திருத் தப்பட்ட மூலத்துடன் வேண்டும் இடங்களுக்கேற்ற சில குறிப்பு ரையு மெழுதி நன்கு பதிப்பிக்கப்பட்டு ப்ருஹ்மஸ்ரீ திவான்பஹதூர் ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயரவர்களுக்கு அர்ப்பணம் செய்யப்பெற்றி ருக்கிறது. இதில், மஹாமஹோபாத்தியாய பிருஹ்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களாலும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதபண்டிதரவர்களாலும் கொடுக்கப்பட்ட சிறப்புப்பாயிரங்களும் வேதாரணியம் பிருஹ்மஸ்ரீ-வை. வே. இரமணசாஸ்திரிகளால் எழுதப்பட்ட நூன்முகமும் மற் றும் பதிப்புரை முதலியனவும் சேர்க்கப்பட்டுள்ளன. இதன் விலை ரூ 3—8—0.

---

(2) வல்லீபரிணயம்:—இது கடலூர் ஸ்ரீமத்-ந. பலராமையர வர்களா லியற்றப்பட்ட ஒரு புதிய தமிழ் நாடகம். இதில் குமரக் கடவுள் வள்ளிநாயகியை மணம்புரிந்த சரித்திரத்தைக்கொண்டு பாத் திரங்களுக்கேற்ற நடையுடன் இடையிடையே சில கீர்த்தனமுதலிய பாடல்களுமுடையதா யியற்றப்பெற்றிருக்கிறது. விலை விவரம் வேண்டுவோர் ஆக்கியோர்க்கெழுதித் தெரிந்துகொள்க.

---

☞ மேற்கண்டபுத்தகங்கள் 2-ம் பாண்டியன் புத்தகசாலையில் வழக்கப்படி சேர்க்கப்பட்டன.

---

ப—ர்.

வேளிர் வரலாறு:—இப் பெயர்பெற்ற வியாசமொன்று, செந்தமிழில் அதன் பழைய பத்திராதிபராவ ஸ்ரீ. மு. இராகவையங்கார் அவர்களால் வெளியிடப்பட்ட விஷயம் பலர்க்குத் தெரிந்திருக்கலாம். இவ் வாராய்ச்சி, 1905-ம் வருஷத்து மதுரைத் தமிழ்ச்சங்கக் கூட்டத்தில், காலஞ்சென்ற வி. கனகசபைப்பிள்ளையவர்களது அக்கிராசனத்தின்கீழ்க் கூடிய மஹாசபையில் வாசிக்கப்பட்டது. இஃது, அப்போதே அறிஞர் பலருடைய நன்குமதிப்பைப் பெற்றதோடு, ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு ராயல் ஏஷியாடிக் ஸொஸைட்டி பத்திரிகையில் வெளியிடப்பெற்றும் பாராட்டப்பட்டது. தமிழ்நாட்டில் பண்டைக்காலத்தே விளங்கிய வேளிர் என்ற கூட்டத்தாரின் குலம் குடி காலம் தேசம் பெருமை முதலியவற்றைச் சங்கச் செய்யுள்களையும் பிற சரித்திரநூல்களையுந் துணைக்கொண்டு, தக்கபடி ஆராய்ச்சிசெய்து இனிய நடையில் எழுதப்பட்டது. இத்தகைய வியாசத்தை, சென்னைச் சர்வகலா சங்கத்தாரும் 1914-ம் வருஷத்து இன்டெர் மீடியட் பரீக்ஷாபாடமாக நியமித்திருத்தலாலும் இதன் பெருமை யாவருக்கும் விளங்கும். இதனை, ஐயங்காரவர்கள் மறுமுறை சோதித்துப் பல கீழ்க்குறிப்புகளிட்டும், அவ் வேளிர் குலத்தலைவரான, ஆய், எவ்வி, ஆவி, பாரி, பேகன், நன்னன் முதலிய பழைய தமிழ் வள்ளல்கள் சரித்திரங்களை எழுதிச்சேர்த்தும் ஒரு சிறு புத்தகமாக இப்போது வெளியிட்டிருக்கின்றனர். இவ் வாராய்ச்சிகளெல்லாம் படிப்பவர்க்கு ஆனந்தத்தை அளிக்கவல்லன என்பதில் ஐயமில்லை. "மிகவும் கடினமாகிய சங்கச் செய்யுளிற் புகுந்து ஆராய்ந்து விஷயங்களை ஒழுங்காக எழுதுவதைக் காட்டிலும் சிறந்த அருமை வேறு யாதுளது? இங்ஙனம், ராயல் ஏஷியாடிக் ஸொஸைடியாராலும், சர்வகலா சங்கத்தாராலும் மற்றும்பல தக்க பண்டிதர்களாலும் கொண்டாடப்பெற்ற இந் நூலைப்பற்றி அதிகமாக இங்கு எழுதல் மிகையென்றே எண்ணுகிறேன். இதன் விலை அணு 8. வேண்டியோர், "மு. இராகவையங்கார், c/o. செந்தமிழ்ப் பத்திராதிபர்," தமிழ்ச்சங்கம், மதுரை. என்ற விலாசத்துக்கேனும், தமிழ்ச்சங்க மானேஜர் அவர்கட்கேனும் எழுதிக்கொள்க.

பத்திராதிபர்,

திரு. நாராயணையங்கார்.

பிறிதில்லாப் பெரும்பிணியைத்தரும் நஞ்சையு முண்ணுநிற்பவ ரிவ் வுலகின்கண் யாவர்தா மென்றவாறு. பகுதி - பாத்தையிற்பிரிவு. துறை - நினைவறிகண்புதை. இது வைதருப்பவுதாரம். என்னை? தம்மிடத்திலே பெறுதற்கரிய வமிர்தமெளிதா யெய்தியிருப்ப வதனை யுண்ணாநின்றவர் அயலே யிருக்கு நஞ்சினையுஞ் சென்றுண்ண விரும் புவா ருலகின்கண்ணில்லையால் அதுபோல நின்னிடத் துவட்டா வின்பந்துய்க்கின்றயான் பிறரிடத் துவர்ப்புடைத்தா மின்பந் துய்யே னென்பது குறிப்பினாற் கொள்ளக்கிடந்தமையினானெனக் கொள்க.

நாதன்மகிழ்மாறனன்பனுவல்கற்றுணர்ந்து
போதந்தழைந்தபுனிதர்தாம்—வேதம்
விதித்தவொருமூன்றின்மெய்ம்மையுணர்வான்
மதித்தொருநூலோதார்மறித்து. (102)

இதுவும் வைதருப்ப வுதாரம். என்னை? மகிழ்மாறன் பனுவல் கற்றுணர்ந்தார் தத்துவங்கள் மூன்றினுண்மை யுணரவேண்டி மறித் தொருநூ லோதாரெனவே யத்தத்துவங்கள் மூன்றினையு மதுதானே மயக்கமறக் கூறுமென்பது குறிப்பினாற் கொள்ளக்கிடந்தமையா னெனக்கொள்க. வேதம்விதித்தவொருமூன்றுவன:—சித்தசித்தீச் சுரம். மெய்ம்மை—உண்மை. உணர்வான்—உணரவேண்டி. மதித்து— உட்கொண்டு. மறித்து—மீண்டும். திணை—பாடாண். துறை—பனுவல் வாழ்த்து.

காழில்கனியுண்கடுவன்களங்கனியை
யூழிற்பருகியுருகுதிரு—மூழிக்
களத்தாதியைமதங்காகாமக்குழவி
வளத்தாரிடந்தேடுவாய். (103)

என்பது காலமங்கலம் பாடவந்த யாழ்ப்பாணனே பரலில் லாதே முழுது மென்மையு மினிமையுமுடைய வரம்பைக்கனியை யச்சமின்றி யுண்ணாநின்ற கடுவ னகத்துமுழுதும் பாலாய்ச் சிறிது புறமென்மையு மற்பச் சுவையுமுடைய களங்கனியையு முறையே போலப்பருகி யதன் சுவைக்கு முள்ளமுருகுந் திருமூழிக்களத்து முதல்வனைக் காமமென்னுங் குழவிச்செல்வத்தையுடைய பரத்தைய

ரிடத்தே தேடிக் காண்பாயாக. அஃதன்றி யெம்மிடத்துக் காண்ட லரிதென்றவாறு. காழ் - கோட்டை. ஊழில் - ஊழ்வினையாலே யெனினுமாம். இது கௌடவுதாரம். என்னே? காழில் கனியுங் கடுவன் களங்கனியை யூழிற்பருகியுருகு திருமுழிக்கள, மெனவே யக்கடுவன்போல, உத்தமமாகிய விவளோடும் உள்ளும் புறம்பும் ஒரு நீர்மைத்தா மென்மையோடும் உவர்ப்பில்லாத பேரின்பத்தைத் துய்த்த தலைவன் இழிந்த வியற்கையை யுடையாராய்ப் புறம்பு பொருணசைக்காய்ச் சிறிதுநெகிழ்ந் துள்ளெகிழ்ச்சியற்ற பரத்தையரிடத்தே யுவர்த்த சிற்றின்பத்தைத் துய்த் தவ்வின்ப மீட்டுந்துப்பா னவர்சேரிவிட்டு நீங்கானுயினு னென வுள்ளுறையுவமங் குறிப்பிற் கொள்ளக் கிடந்தமையானும் 'காமக்குழவி வளத்தாரிட மெனவே யிஃது, எமது காதற்புதல்வன் என்னுஞ் செல்வத்தையுடைய மனை யென்பதூஉம், யாம் புதல்வற் பயந்த மூப்புடையே மென்பதூஉம், இன்னும் அவ்விலேசானே யெம்மிடத் தவர்பெறு மின்பம் எமக்கவர் கொளுத்தக்கொண் டியாங்கொடுக்கு மியற்கை யின்பமே யல்லாது பலரையுந்தோய்ந் தவரவர் கொளுத்தக்கொண்ட பல விகற்பமாகிய செயற்கையின்ப மெம்மிடத்தில்லையே யென்னுங் கூற்று மாகக், குறிப்புங் கூற்றுங் குறிப்பினுற் கொள்ளக் கிடந்தமையானே யிவ்வாறு வேண்டுவர் கௌடரெனக்கொள்க. பகுதி - இதுவுமது. துறை - பாணனொடு கூறல். கூற்று - தோழிகூற்று.

நாம்பிரமமென்றேசுவில்வாருமன்னுயிர்க
டாம்பிரமத்தொன்றுமெனுஞ்சார்பாரு—மாம்பிரம
நாரணனேவென்பாருநாவிறுடையபிரா
னாரணப்பாக்கற்றுணராதார். (104)

என்பது போனந்தச் சிற்குணாதிகச் சுடர்ச்சொரூப ரூபப் பரத்துவ மென்னும் பரமபதநாதன் அனிருத்தனாகி யுந்தியந்தாமரைப் பொகுட்டிற் பலகோடி யண்டங்களைப் படைத்துப் பலகோடி யண்டந்தோறும் பலகோடி பிரமாதிகளைப்படைத் தழிவிலதா யல கிறந்த வணுக்கடோறும் திவ்வியாத்ம சொரூப வியத்தியுடன் சருவபூத பூரணகாரணனாகி மீனவதாரமுதலாய வவதாரங்களானும் அம்சாவதாரங்களானுங் காவல்பூண்டு வாழ்நாளுட் டன்னுல், லீலைக்காக

வமைத்த வவையனைத்து மழிந்துந் தானழியா தேகோதகத்தின் மேலோராலிளந்தளிருள் ளடங்கும் பச்சைக் குழவியாகியும் பல்லா யிரகோடி யண்டமாகியவற்றை யகத்திட்டு மறித்தும் புறத்திட்டுக் காவல் பூண்டு விளையாடு மகடிதகெடித சாமர்த்திய குணங்களு ளொருகுணமுமின்றி யிருவினைத் தளைப்பட்டு மலமூத்திராதிகளா லாய பாண்டத்தோடு மிறந்தும் பிறந்து முழலு முத்தியறியா மூட ராகி நாம்பிரமமென்றே நாக்குத் தடுமாறுது நவிலு மொருசார்பா ரும், கற்றறிநூல் பல கற்றனராகித் தத்துவ முணர்ந்தும் பற்றறச் சாலோகமுதலிய மூன்று மெய்தி யிருவராயிருந் தீறில்பேரின்ப மொருவராமெனத் துய்க்குஞ் சுகானந்தத்தைக் கெடுத்துக் கூடா ததனைக் கூடுவதாக்கிச் சூனியப்படுத்தி மன்னுயிர் பிரமத்தோடு மொன்றுமென்று நாயனடிமைத்திறம் நழுவிய மூடரா மொருசார் பாரும், ஆதியு மந்தமு மருமறை யரியென வோதிய பொருளுரைக் குடையதை யறிந்தும் அகிலாண்டகோடி பிரமாண்டநாயகனென முத்திதருவதாம் பிரமம் சிமந் நாராயணனே வென்றையுறு முழு மூடரும் ஒருநான்மறைத்துணி வோதாதுணர்ந்த நாவீறுடைய பிரான் கூறிய திருவாய்மொழியைக் கற் றுண்மைப்பொரு ளுணரா மூவகை மூட ரென்றவாறு. ஆரணத்தின் வழிவந்த நூலாதலாற் திருவாய்மொழிக் காரணப்பாவென்ப தாகுபெயர். அல்லதூஉந் தமிழ் வேதமென்றும் அதற்குப் பெயர். ஆரணப்பாக் கற்றுணராதா ரென வே யதனைக் கற்றுணர்ந்தா ரவை கூறுரென்னுங் கூற்று மெஞ்சி நிற்பதூஉங்காண்க. இங்ஙனங் கூறிய மூன்றும் வேதத்தின் வழி வந்த திருவாய்மொழியாகிய பனுவற்றுணிவன்றென்பதூஉம் அத னைக் குரவரா லுணர்ந்தோர் மதமும் அம்மூன்றினையுந் தள்ளின மத மே யென்னு மவையுங் குறிப்பெச்சம். இக்கூற்றுங் குறிப்பும் புலவ னுலாம். இங்ஙனமாகிய சொன்னடைகொண்டு வேறுபொருடோன் றலா விதுவுங் கௌடவுதாரம். திணை - வாகை. துறை - சால்பு முல்லை.

சினமென்பதையறியாதவர்தினமும்புகழ்மாறன்
செஞ்சொற்றமிழ்மறைபாடியசெல்வன்குருகையுளார்.
முனமன்பினதளவொன்றியமுறையான்மலரணைமேன்
முடுகும்பரிசமொடிங்கிதமொழியென்பதுபெறவே.

தனமின்றெனினுலகத்தெவர்தனியின்பமதுறுவார்
தாமென்றபினளகத்துறுதனிவண்டொடுநின்பான்
மனமொன்றியபெடையேவலியுளதென்றனரன்றே
மறையென்றதைபுணராதவென்மனதேகொடியதுவே. (105)

என்பது தோழீஇ! வெகுளியென்பதை மனத்தினாலுங் குறித் தறியாத சுத்தசாத்துவிக குணனுடையோர் வாழ்த்துங் காரிமாறப் பிரான் செஞ்சொலாகிய தமிழ்மறையைப்பாடிய செல்வத்தையுடை யோன் குருகைமாநகரினிடத்து நம்மிறைவர் பொருண்மேற் பிரியு முன்னர் இருவர்க்கும் புணர்ச்சிமேற்சென்ற வுள்ளத்தன்பினதள வும் யாக்கையின்களிப்பு மேகாந்தமு மிடையாமமும் ஒன்றாகப் பொருந்திய வியல்பான மலராலலங்கரிக்கப்பட்ட அமளியிடத்து முடிக்கிய பரிசத்தோடு நலம்பாராட்டலென்னு முறைபோற் பிரிதனி மித்தமென்பதாக என்னொடுந் திருவேமகளிரிடத்துத் தனமென்பன வில்லையாகி னுலகத்துள்ள வாடவருள் யாவர்தா மொப்பற்ற வின்பத் தை யெய்துமவர்க ளென்றன ரதன்பின்வ ரளகத் தரும்பவிழ்ந்த காலைத் தேனையுண்ணவந் ததனிடத்துறைவதாந் தனிச்சுரும்போடும் நினதிடத் தொருமனப்பட்ட பெடையே மனவலியுடைய தென்றன ரன்றே. யவையிரண்டையு மிக்கதொனியென் றுட்கொளாதவெனது மனதே கொடியதென்றவாறு. இது பாஞ்சாலவுதாரம். என்னை? தனமென்பதிரட்டுறமொழிதலாய் நடுவணையெய்தாதவர்க்கிருதலையு மெய்தா; பொருள்வயிற்போகவேண்டு மென்பதனை யுணர்த்தியதாக வும், நின்பான் மனமொன்றிய பெடையே வலியுளதென்றதனால் நிலைத்து நீங்கிபபெடைநின்னையின்றியாற்றாமையாற் றானிறக்கினீயு மிறப்பையென்று நினதுயிரைப் போற்றித் தனதுயிரைப் பிடித் திருந்த மனவலியுடைத் தென்பதா யதுபோலத் தாம்பிரிந்தகாலத் தியானு மாற்றாமையா லிறவாது தம்முயிரையும் போற்றி இல்லறங் காத்திருத்தல் வேண்டுமென்பதூஉ முணர்த்தியதாகக் குறிப்பினாற் பிறபொருள் கொள்ளக்கிடந்தமையா னென்றறிக. இதனுள் அள வும் என்னுமும்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கதனை விரித்துரைக்க. தோழீஇ என்னு முன்னிலைப்பெயரு மெஞ்சிநின்றதுங் காண்க. பகுதி - பொருள்வயிற் பிரிதல். துறை - தலைவி தலைவனையியற்பட

மொழிதல். இவற்றை மூன்றுநெறியார்க்கு மொக்குமென்பாரு முளர். அவை பொருந்தாவென வுணர்க. உதாரம் முற்றும்

மன்னிலங்கைமூதூர்வழியோ திறந்ததொன்னூர்
பொன்னகர்செல்வாயிற்புதவன்றே—தென்னரங்கன்
மைந்நீரசெம்பவளவால்வளையவண்டரள
முந்நீரணைகட்டுமுன். (106)

என்பது அழகிய திருவரங்கத்தையுடைய மாயோன் கடலைக் கரை கட்டின முற்காலத்து இராவணனாகிய நிருதர்கோன திலங்கை யாகிய பழைய நகர்க்குச் செல்லும் வழியோ திறந்தது? தென்னரங் கேசனது பாணத்தா லிறந்த சத்துருக்களாகிய அரக்கர்செல்லும் வீர சொர்க்கவாயிலின்கட் கதவல்லவோ திறந்த தென்றவாறு. எனவே வழியுங் கதவுந் திறந்த தென்பதாம். மைந்நீர செம்பவள வால்வளைய வண்டரள முந்நீரை யெனக் கூட்டுக. இதுவைதருப்பவலி. என்னை? இருளி னீர்மையுடைத்தாய்ச் சிவந்த பவளத்தைப் பெற்ற வெளுத்த வளையைப்பெற்ற அதனிடமாக வளவியதரளத்தைப் பெற்ற முந்நீரை யூடறுத்துக் கடலை யணைகட்டின முற்காலத்தெனவே வேற்றுமைத் தொகை இருபெயரொட்டுப்பண்புத்தொகை வினைத்தொகைகளை முன்னிட்டுப் பெயருடைமைப் பொருளாய் நின்று கருகும் நீர்மை யுடைய நீரையெனப் பெயர்மே லேறியவிடத்து மிப்பொருளையுடைய தாயிருந்த திப்பொரு ளென்னுமிடத்து மிடைநின்ற வுடைமை வினைக் குறிப்புங் காலம்பெற்ற வினைக்குறிப்புமாகிய சொற்க ளிடையிடை பலவிடத்துந் தொக்கதோடும் பிறசொற்களுந் தொகைமிக்கு விரித லானும் எனக்கொள்க. திணை - உழிஞை. துறை - புறத்திறை.

வன்கேழற்பன்றியாய்வான்பிறைக்கோட்டாழ்புனலாழ்
கொன்கேழ்கிளர்தாழ்குழல்களிப்ப—முன்கொணர்ந்த
வெம்பிரான்சங்காழியேந்தினனெவ்வுளார்
தம்பிரான்றாளேசரண். (107)

என்பது வலியகேழலாகிய பன்றியாய் வானின்கட் பிறைபோன்ற கோட்டாலே யாழ்ந்த புனலின்கட் டாழ்ந்த நிறங்கிளருந் தாழ்ந்த குழலினையுடைய பூமிதேவியானவ ளுள்ளங்களிப்ப முன்னாட் புறத்

தே கொண்டுவந்த எம்முடைய பிரான் சங்கையு மாழியையுங் கைகளி லேந்தினன் எவ்வுளார்க்குந் தம்பிரான்; அவனது திருவடிகளே சரண மென்றவாறு. கொன் - பயனில் சொல். இது கௌடவலி; என்னை? இதனு ளிருதிறப் பண்புத்தொகை முதலாகத் தொகையாறு முடைமையினைக்குறிப்பும் பிறசொற்றொகைகளு மிகவருதலா னெனக் கொள்க. துறை - கடவுள் வணக்கம்.

பொற்றொடிவேற்கண்கள்புடைசிறந்தாட்கெஞ்ஞான்று
முற்றவுடலுயிர்க்கொன்றென்றே—சொற்றனவாற்
றொடலர்தார்மாறன் றுடரிபிநெஞ்சேயிவளைக்
கூடலெளிதென்றேகுறி. (108)

என்பது பாஞ்சாலவலி. என்னை? பொற்றொடியெனவே வேற்றுமைத் தொகைப்புறத்து வந்த அன்மொழித்தொகையும், வேற்கண்ணெனவே யுவமைத்தொகையும், புடைசிறந்தாட்கெனவே வேற்றுமைத்தொகையும், உடலுயிரெனவே யும்மைத்தொகையும், தோடலர் தாரெனவே வினைத்தொகையும்வந்து பண்புத்தொகையொன்றுமே வராது, பெயர் வினைச்சொற்களு முளவாய்,முன்னவைபோலச் சுருங்காது மிகாது மிடைநிலைப் பட்டமையா னென்றுணர்க. பகுதி-பாங்கியிற்கூட்டம். துறை - பாங்கியைமதிதல். வலி முற்றும்.

ஆவிக்குறுதுணைப்பெண் ணாரமுதைப்போதுரைத்த
நாவிற்கினிமையளிப்பதோ—மூவுலகுந்
தாய்க்கொண்டதாளரங்கர்தண்ணளிசார்விண்ணவர்தாம்
வாய்க்கொண்டுயிர்வாழ்மருந்து. (109)

என்பது எனதாவி வாழ்வதற்கு மிக்கதற்றுணையாகிய விப் பெண்ணாகிய அமிர்தினைப்போற் றன்பெயரினைச் சொன்னாற் சொன்ன நாவிற்கு மினிமையை யளிப்பதொன்றுமோ? பூமிமுதலாய மூன் றுலகங்களையுந் தாண்டியளந்துகொண்ட தாளினையுடைய திருவரங் கேசர் கருணையைப்பொருந்தின வானிலுள்ளார் வாயாலுண்டினிமையைக்கொண் டுயிர்வாழாநின்ற அமிர்தமென்றவாறு. ஓகாரம் ஒழியிசை. இதனுள், பெண்ணாகிய வமிர்தினுயர்த்தி யுலகொழுக்கிறவாமை யுயர்த்தினமையால் இதுவைதருப்பகாந்தம். பகுதி - இடந்தலை. துறை - நலம்புனைந்துரைத்தல்.

திங்கள்வெண்கதிரும்பானுவின்கதிருஞ்சிறிதும்வைகனுநுழைந் தறியாப், பொங்கர்மல்கியபூஞ்சோலைகள்ளிடையிற்புதையிருளிரிதா மடவா, ரெங்குமேந்தியசெஞ்சுடர்களானுரககனேந்தெழின்மவுலியாயி ரத்துந், தங்குபன்மணிகள்பரப்பிவைத்தொளிர்பாதா ல மீ தெ னப் பொலிதருமால். (110)

இதுவுமது. (குருகாமான்மியம்) திணை - பாடாண். துறை - விளக்குநிலை.

தென்னனங்கைமால்வரைமேற்சேயிழைவன்கட்கூற்ற
முன்னினுயிருண்ணுமெனமுன்னுற்றோ—மன்னுயிருண்
கூற்றுருவமக்களுருக்கொண்டோர்விழிக்கெதிரே
தோற்றுருவங்கொள்ளாத்துணிவு. (111)

இது கௌடகாந்தம். பகுதி - இயற்கை. துறை - தகையணங் குறுத்தல்.

பூட்டியபுழுங்கருமேதியரிதாளிற்கருங்குவளைப்போதுமேயத், தீட்டியநாவினைக்குறுக்கிச் சிறைவண்டின்பண்ணமுதைச்செவியானு ண்டு, மோட்டுமுதுமுலைக்கண்மடைதிறந்தொழுகும்பாலமுதமுழங்கி யாம்பற், காட்டுவரம்புடைப்பவயற்கழனியடைத்துழவருழுங்காட்சித் தொன்றே. (112)

இது பாஞ்சாலகாந்தம். துறை - நாடுவாழ்த்து. (குருகாமான்மி யம்.) காந்தம் முற்றும்.

ஆழிப்படைக்கையருளாளன்மிக்கதிரு
மூழிக்களத்துறையுமூவர்கோ—னூழிதொறும்
வித்தகனேகாரிதருமெய்ஞ்ஞானமுத்திரைக்கை
யுத்தமனேகாக்கவெனை. (113)

திணை - பாடாண். துறை - புறநிலைவாழ்த்து.

இறையேதிருமால்வீடென்பதுமந்தாம
மறையேபனுவலெனவைக்கு—நிறைகூர்
கரையற்றபோதக்கடன்மாறனுண்மை
யுரைகற்றுணர்ந்தாருளம். (114)

திணை - பொதுவியல். துறை - பனுவல்வாழ்த்து. இவையிரண்டும் உய்த்தலில் பொருண்மை. இவை மூன்றுநெறியார்க்குமொக்கும். உயத்தலிற்பொருண்மை முற்றும்.

கூன்டுகுமுதமலர்சிரிக்கக்கோகனக
மீண்டிதழ்ச்செங்கைகுவிக்குமெல்லிதா—னீண்டுகமா
மென்றுவிறையபங்கத்தேந்தல்பொருட்கேக
லொன்றுனுமாகாதுனக்கு. (115)

சிரித்தல் - மலர்தல். ஏந்தல் - அண்மைவிளி. இதனுள் சிரிக்கவெனவும் கைகுவிக்கவெனவு முக்கியப்பொருளாகிய வாயினது கிரியையும், கையினது கிரியையு மொப்புடைப்பொருளாகிய குமுதத்தினுங் கமலத்தினும் புணர்த்துரைத்தமையாற் சமாதி யெனக்கொள்க. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - செலவழுங்குவித்தல்.

ஆரப்பொழிற்கோங்கரும்புதினமாக
வாரைப்பொருதெழுந்தவன்மைசேர்—பேரைக்
குழைக்காதரென்றெருகாற்கூறுதோவென்றிக்
கழைக்கார்முகன்காகளம். (116)

இது சிலேடைவாய்பாட்டால் வந்த சமாதி.

(இ - ள்.) சந்தனப் பொழிலகத்துநின்ற கோங்கரும்பு வைகலும் மேகத்தினிடத்துண்டாகிய தண்ணீரைத் துழா யெழும் எனவும், ஆகத்தினிடத்துக் கட்டிளகச்சினைப் பொருதெழுமெனவும் முலையினதுகிரியையைக் கோங்கினதரும்பிடத்துப் புணர்த்தவாறு காண்க. மாகம், ஆகம் எனப் பிரிமொழிச் சிலேடையும், வாரையெனச் செம்மொழிச் சிலேடையுங்கொள்க. இவை மூன்றுநெறியார்க்கு மொக்கும். சமாதி முற்றும். ஆக இன்பமுதற் சமாதியீறுகக் குணவலங்காரம் பத்தும் அடைவே வந்தவாறு காண்க. திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - குபிலொடு வெறுத்துக்கூறல். (௨0)

85. செப்புட்குணங்களொழிவறவேசெப்புவதும்
பொய்யில்புலமைபுறுப்புன்கவியேற்—கெய்துமதோ
சொற்றவற்றுற்சொல்லாதவற்றினையுஞ்சொல்லியவா
முற்றுவித்தல்கற்றோர்முறை.

(எ - ன்.) சொல்லிய குணவலங்காரங்கட் கொழி புணர்- ற்று.

(இ - ள்.) செய்யுட்களின் குணவலங்காரங்களை யொழிவற முற்ற வுணர்த்துவதும் பொய்யென்பதில்லாத அறிவின்றன்மை பொருந்தாத புன்சொற் கவியேற்கு மெளிதா யெய்தப்பெறுந் தன்மைத் தொன்றோ? ஆகையா லிங்ஙனஞ் சொல்லப்படுங் குணங்களோடுஞ் சொல்லாதொழிந்த வக்குணங்களையுஞ் சொல்லியனவாக முற்றுவித்தல் கற்றுணர்ந்த சான்றோர்கட னென்றவாறு. இங்ஙனம் கூறவேண்டும் நோக்கம் யாதோவெனின், செறிவென்று சொல்லப்படுவதும் எழுத்துச் செறிவும் சொற்செறிவும் பொருட்செறிவுஞ் செறிந்து வேறுவேறு ஒலித்துநடக்கும் என்று கூறியவற்றுள் எழுத்துச் செறிவும் வண்ணமு மூன்று நெறியார்க்கும் வேறுவேறாக்கி, யொருவகைச் சொற்செறிவு மவையல்லாத பொருட்செறிவு மூன்று நெறியார்க்கும் பொதுவாகக் கூறினாரெனினும் மெய்க ளுடனிலைமயக்கமின்றி யேனை மயக்கமாக வண்ணமும் பொதுவாவனவு முள. அது வருமாறு:—

மயர்வறமதிநலனருளியநறைகமழ்மலர்மகள்புணர்பவன்மே
லுயர்வறவுயர்நலனெனமுதிர்தமிழ்மறையுரைமகிழ்முனிவரைவாழ்
புயல்புரைகுழன்மதிபுரைநுதல்வடவரைபுரைபுணரிளமுலைசேர்
கயல்புரைவிழியெனதுயிரெவணினதுயிர்கவல்வகையெவன்மயிலே.

இது அராகந்தொடுத்த அடியோடும் பிறிதடியும்படத் தொடர்ந்தோடினமையான் முடுகு வண்ணம்; "முடுகுவண்ண, மடியிறந் தோடியவதனோரற்றே" என்றாராகலின். இவ்வண்ணமு மூன்றுநெறியார்க்கும் ஒக்கும். ஒழிந்தனவற்றுள்ளு மிவ்வண்ணம் பாகுபடுமென்னு நோக்கத்தாற் கூறப்பட்டது. அவையெல்லா மீண்டுரைப்பிற் பெருகும். பகுதி - உடன்போக்கு. துறை - செவிலி தேடல். (உக)

தருகாளமேகங்கவிராயராயன்சடையவன்பாற்
குருகாபுரேசர்ப்புனையலங்காரங்குவலயத்தே
கருகாதசெஞ்சொ லுரைவிரித்தான்கற்பகாடவிபோல்
வருகாரிரத்தினகவிராயன்பேரைவரோதயனே.

பொதுவியலுரை முற்றும்.



ஸ்ரீ:

## இரண்டாவது

# பொருளணியிய லுரை.

——:o:——

86. பொருளினுஞ்சொல்லினும்புனேயுறுசெய்யுட்
கணிபெறப்புணர்த்தலினணியெனும்பெயர்த்தே.

என்பது சூத்திரம் இவ்வோத் தென்னுதலிற்றோவெனின், ஒத்து நுதலியதூஉ மோத்தினது பெயருரைப்பவே விளங்கும். ஆயின் இவ்வோத் தென்னபெயர்த்தோ வெனின்? பொருளணியிய லென்னும் பெயர்த்து; பொருளானு மணிக ளுணர்த்தினமையின். ஆயின் இதன்றலைச் சூத்திர மென்னுதலிற்றோவெனின்? சொல் வான் றொடங்கிய அணியென்பவற்றிற்குக் காரண மிவையென்ப தூஉ மவை செய்யுட் கின்னசிறப்புடைத்தாகப் புணர்த்தலி னிப் பெயர்த்தாயிற் றென்பதூஉ முணர்—ற்று.

(இ - ள்.) புலவராற் றொடுக்கப்பட்ட கவிகட்குப் பொருளா னுஞ் சொல்லானும் அழகெய்தப் புணர்ப்பதால் அணியென்னும் பெயரையுடைத்தாயிற் றிவ்வலங்காரமென்றவாறு. புலவராலென்ப தூஉம் அலங்கார மென்பதூஉஞ் சொல்லெச்சம். அணி யிரண்ட னுள் முன்னேயது அழகாம். பின்னேயது பூணும். எனவே பொரு ளானுஞ் சொல்லானு மணியிரண் டென்பதாயிற்று. (க)

87. அவற்றுள்,
புவனம்போற்றியபொருளணிபுகலிற்
றவலரும்பான்மைத்தன்மையுவமை
யுருவகமுன்னுறைபொட்டுல்லேக
மொப்புமைக்கூட்டம்வேற்றுமைதிட்டாந்தந்
தற்குணம்பிரத்தியனீகஞ்சங்கய
மற்புதசித்திரசவாந்தற்குறிப்பதிசயஞ்
சிலேடைபின்வருநிலேதீபகநிரனிறை
புட்டுவில்விறைச்சிப்பொருள்கோள்பொருண்மொழி

யதிகம்வகைமுதலடுக்கிணையெதுகை
விரோதமுபாயம்விசேடஞ்சமாயித
மேதுச்சுவைபரியாயமிலேசந்
தற்பவமசங்கதிதடுமாறுத்தி
புணர்நிலைவேற்றுப்பொருள்வைப்புவிபாவனை
யார்வமொழிநெடுமொழிபரிவருத்தனை
காரணமாலைகாரியமாலை
யேகாவலிபிரதீபம்பிறவணி
முன்னவிலக்கப நுதிநிந்தாத்துதி
புகழ்வதினிகழ்தன்மாறுபடுபுகழ்நிலை
பரிசங்கைகாவியலிங்கம்பரிகர
முறுசுவைவினோத்திசமுச்சயமுதாத்த
மாசிசங்காஞ்சங்கிரணமே
பாவிகமெனவறுபானன்காகும்.

(எ - ன்.) வைத்த முறையானே பொருளாநு மணிகளது பெயரு முறையுந் தொகையுமுணர்—ற்று.

(இ - ள்.) அங்ஙன மிரண்டு கூற்றவாகிய அணிகளுள் உயர்ந்தோர் முதலெனப் போற்றப்பட்ட பொருளணி யொன்றனையுங் கூறுமிடத்துத் தன்மை முதலாகப் பாவிக மீறாக அறுபத்துநான்காமென்றவாறு. இவற்றிற்கெல்லா மெண்ணும்மை தொக்கு நின்றன. என என்பது எண்ணிடைச்சொல்; என்னை? "என்று மெனவு மொடுவு மொரோவழி, நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்." என்பதனல். எனவென்பதனைத் தன்மை முதலாக வெண்ணிய வெங்கு மொட்டுக. அஃதாக இச்சூத்திரத்துள் சிலேடை, பின்வருநிலை, தீபகம், நிரனிறை முதலிய சொல்லாநு மணிகளுந் மிதனுட் கூறுநிற்பப் பொருளணியியலென்ப தென்னையெனின், மிகுதி பொருண்மேல வாதலின் மிக்கவற்றாற் பெயர்கொடுத்தார்; அஃதியாவது போலவெனின், அங்காரகமாகிய சந்தனத்துடன் குங்கும கற்பூர கத்தூரி கூடினும் பூசியது சந்தனமென்பதுபோலக் கொள்க. அற்றேல் இவை முறையாயினவா றென்னையோவெனின், இயல்பு விகாரமென விரண்டாகிய வவற்றுள், தன்மை யியல்பாதலான் முற்

பட்ட முறைமைத்தாக வைக்கப்பட்டது. உவமையை மூன்றுறுப் படக்கிய பிண்டமாகுந் தொல்காப்பியத்து ளிறுதிநின்ற பொருளகத் தகப்பட்டதாக அலங்காரத்தினையுங் கூறிய ஒல்காப் புலமைத் தொல் காப்பியனரு முவமைபென்ப தொன்றாகத் தொகைபெற்று வினை முதலிய நான்காய் வகுத்துப் பலவேறு விரியாய் நின்று விகாரமாய தன்றிப் பிறவலங்காரங்கட்கு முபகாரமுடைத்தாகலானு மஃதொன் றினையுமே முக்கியமாக்கி யதனுட னுருவகமும் உள்ளுறை யுவமமும் வகுத்துக்கூறிய முதன்மையானும், இதற்குத் தனியே முதனூல் செய்த தெண்டியாசிரியரும் அவர் நோக்கமே தாமு முடம்பட்டா ராகத் தன்மையின்பின் னுவமையை வைத்தாராகலானும் இருவர் நோக்கமு முட்கொண் டிந்நூ லுடையா ரவை யிரண்டிற்கு மிந்நூல் வழிநூலாகலானுந் தன்மையை முதல்வைத் ததன்பின்ன ருவமை யையு முதல்வைத்தது முறையெனக்கொள்க. உருவகமும்,உவமையும் பொருளும் வேறுபட்டு நில்லா தொன்றென்னும் பான்மைத்தாய மாட்டேற்று முவமையாதலானும் உள்ளுறை யுவமமும் இசை திரிந் திசைக்கப்படுவதா யுவமையோ டுவமிக்கப் படும்பொருள் பிறி தோராது தாராது அவ்வந்நிலங்களிற் பிறந்த கருப்பொருளோடுஞ் சார்த்தி யுள்ளுறுத்திக்கொள்ளு முவமை யாதலானும் அவை முறை யே வைக்கப்பட்டன ஒழிந்த ஒட்டு உல்லேக முதலியனவு முவமை யைப் பின்சென்றிருத்தலா னவை வைத்தமுறையு முய்த்துணர்ந்து கொள்க. அவையெல்லா மீண்டுரைப்பிற் பெருகும். உவமையைப் பின்சென்றனவல்லாத அலங்காரங்களையுந் தமக்குப் பொருந்தின முறையே வைத்த முறையு முய்த்துணர்ந்துகொள்க. அவையு மீண் டுரைப்பிற் பெருகும். அஃதாக ஆறு லிந்நூ லுடையார் முதனூல் களிற் கூறியபடியே வழிநூலிற் சிறிது புடைநூலிலக்கணந் தவறாது கூறப்புகுந்து மிகவு மிதன் முதனூலாகிய தண்டி கூறிய அணிகளுள் நுட்பமென்னும் அலங்காரத்தைக் குறைத்தும் பிற முதனூலணிகள் கூறிய அணிகளையுந் திரட்டிக் கூறி, மற்று நூல்களுட் கூறாத பூட்டு வில் இறைச்சிப்பொருள்கோள் பொருண்மொழி யென்னு மூன்றி னேடும் வகைமுதலடுக்கு இணைபெதுகை உபாய முறுசுவை புகழ்வதி னிகழ்தலென்னும் அலங்காரங்களையுங் கூட்டி அறுபத்துநாலாக மிகுத்ததுஉ மொருவழிக் குன்றக்கூறன் மிகைபடக்கூறலென்னுங்

குற்றமாம் பிறவெனின், ஆகாது; என்னே? நுட்பமென்பது பரிக ரத்து ளடங்குமெனக் குறைத்துஞ் செய்யுட்கணிபெறப் புணர்ப்ப தெல்லா மணியெனப்படுதலான் முன்னைய மூன்றுஞ் சொல்லிலக்க ணத்தினும் பொருளியலினும் புறத்திணையினுங் கூறியபடியே செய் யுட்கழகாதலி னணியிற்கூட்டி மிகுத்தார். ஏனையவைந்து மழகெய் துவதா யிலக்கியங்கண்டதற் கிலக்கண மியம்பியதாக்கி மிகுத்தா ராகலானென்றுணர்க. அன்றியும் வழிநூலும் புடைநூலுஞ் செய் தற்கேதுத் தொகுத்தன் முதலிய நான்கினுள்ளு முதலன விரண்டு மிகவு மேதுவாகலானுங் கூறப்பட்டன. அற்றேல் ஐயமுந் தெரிதரு தேற்றமும் பொதுநீங்குவமையுந் தெண்டியாசிரிய ருவமவிரியுட் புணர்க்க அவற்றை யேனையாசிரியர் வேறுவேறணியாகப் புணர்க்க, இந்நூலுடையார் முதலவிரண்டும் பிறர்நோக்கத்தோடுங் கூட்டிப் பிறிதோரணியாக்கிப் பின்னையது தெண்டிநோக்கத்தோடுங் கூட்டிப் புணர்த்ததூஉங் குற்றமாமெனின், குற்றமன்று. இருவர்க்கு முத லான தொல்காப்பியனுர் "தடுமாறுவமங் கடிவரையின்றே" யென வழுவமைதி வாய்பாட்டாற் கூறினமையானும் அவற்றுள் உவம வுருபு புணராமையானு முவமையைப் பின்சென்ற பிறிதோரணியா கப் பிறருடம்பட்டதுதானுடம்படுதல் என்னு முத்தியா னுடம்பட் டும் ஏனையது "தானே தனக்குவமைதா"னென உவமவாசகம் புணர்ந் தமையானும் "ஓரிஇக் கூறலு மரீஇய பண்பே" என்றாராதலானும் பிறர்மதங்களைத லென்னு முத்தியானுங் கூறப்பட்டது. இங்ஙனம் பெயரு முறையுந் தொகையுமாகிய அணிகளை முதனூலாசிரியர் வகைப்படுத்தியும் விரித்துங் கூறிய நோக்கத்தோடுஞ் சிலவற்றை யிந்நூலுடையார் தன்கோட் கூறலென்னு முத்தியானுந் தன்குறி யிடுதலென்னு முத்தியானும் வகுத்ததன்மேல் விரித்து வகுத்தும் விரித் ததன்மேல் விரித்ததையும் அவ் வணிகட்குணர்த்தும் பீடிகை முதலாய வுரைநடை நோக்கங்களா னுங்காங்குக் கண்டுகொள்க. அவையெல்லா மீண்டுரைப்பிற் பெருகும். (உ)

88. வழுவாமரபினெப்பொருளையும்விகாரந்
தழுவாநடைபெறப்புணர்ப்பதுதன்மை.

(எ - ன்.) மேனிறுத்தமுறையானே தன்மையென்னு மலங்கா ரத்தினது பொதுவிலக்கணமுணர்—ற்று.

(இ - ள்.) இருதிணையுட் குற்றமில்லாத விலக்கணத்தையுடைய எவ்வகைப்பட்ட பொருள்களையு முவமை முதலிய விகார வணிகள் கூடாதே சுபாவகடைபெறப் புலவன் பாடுவது தன்மையென்னு மலங்காரமா மென்றவாறு. கடை - ஒழுக்கம். குற்றமில்லாத வெவ் வகைப்பட்ட பொருளையுமெனவே குற்றமுள்ளவற்றின் சுபாவத் தைப் பாடுவதுந் தன்மையா மெனினும் அலங்காரத்தின்பாற் கூடா தென்பதாம். வழுவாதமரபென்னும் வினையெதிர்மறுத்தபெயரெச்ச வாய்பாடு செய்யுள்விகாரத்தாற் றொக்கி நிற்றுயிர்மெய் கோவாமுத்த மென்பதுபோலக் குறைந்துநின்றது. தழுவா வென்பது மது. விகா ரம் ஆகுபெயர். (௩)

89. அதுவே,

பொன்பொருண் மக்களுயிருளவஃறிணை
சினைவினைபண்பிடமெனவஞ்சிவனும்.

(எ - ன்.) தன்மையின் சிறப்பிலக்கணப் பாகுபா டுணர்—ற்று.

(இ - ள்.) அதுவே—அத்தன்மை யென்னுமணி, யுயர்திணை யிடத்துப் பொருட்டன்மை; மக்கட்டன்மையும், அஃறிணையிடத் துயிருள்ள வஃறிணைத் தன்மையும் உயிரில்லாத வஃறிணைத் தன்மை யும், அப்பொருளின் சினைத்தன்மையும், வினைத்தன்மையும், பண்புத் தன்மையும், இடத்தன்மையுமெனத் தனித்தனி புலப்படப் பொருந்து மென்றவாறு. அதுவே, என்பது "சீர்கூனுதல் நேரடிக்குரித்தே" யென்பதனாற் சீர்கூனுயிற்று. இவற்றிற்கெல்லா மென்னும்மை செய் யுள் விகாரத்தாற் றொக்குநின்றன. உயிரில்லஃறிணை யென்பது முயர்திணையென்பது மெதிர்மறை யெச்சமாகி விரிந்தன. இன்னுமவ் விலேசானே யுயிருளவஃறிணையு ளியங்குதிணையும் உயிரில்லவற்றுட் கருத்துப் பொருளுங் கொள்க. (௪)

90. அவற்றுள்,

பொருளியல்பாண்பெண்ணெனவிருபுலப்படும்.

(எ - ன்.) இதுவும் பொருட்டன்மைக்கோர் பகுதியுணர்—ற்று.

(இ - ள்.) அச் சொல்லப்பட்ட வுயர்திணை யஃறிணையுட் பொருட்டன்மை ஆடூஉப்பொருட்டன்மை மகடூஉப்பொருட்டன்மை என விருவகைத்தாய்த்தோற்று மென்றவாறு. (ரு)

91. அரும்பெறன்மக்கட்டன்மையுமற்றே.

(எ - ன்.) இதுவும் உயர்திணைக்கண் மக்கட்டன்மைக்கோர் கூறுபாடுணர்—ற்று.

(இ - ள்.) பெறுதற்கரிய மக்கட்டன்மையும் பொருட்டன்மை போல விருவகைப்படு மென்றவாறு. அற்று உவமவுருபு. அஃறிணைக் கொருமை பன்மை யென்பதல்லாது ஆண்பெண் ணென்பது சிறப்பின்மையாற் கூறாராயினர்; என்னை? "ஆண்பெண்பலரென முப்பாற்றுயர்திணை" "ஒன்றேபலவென்றிருபாற்றஃறிணை" யென்பதனுலறிக.

இவற்றிற்கெல்லாஞ் செய்யுள் வருமாறு:—

செம்பொனுடைசெறிதிருமருங்கின
னம்புயத்தனிமலரலர்ந்தவுந்தியன்
கவுத்துவக்கடவுட்கவினிழன்முழுமணி
பவித்திரத்திருமகள்பதிந்தமார்பினன்
வலம்பயின்முப்புரிநூலொடும்வாடா
திலங்கியவனமாலிகைபுனையிணைப்புய
னிகல்புரிதிகிரிசங்கேந்தியகரத்தினன்
கதிர்மணிமௌலிகவித்தசேகரன்
மதிதவழ்சோலைமலையலங்காரன்
பூதலந்தாயபொன்னடி
காதலித்தவர்வல்வினைகடந்தவரே. (118)

இது ஆடூஉப்பொருட்டன்மை. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து. உரையிற்கோடலென்பதனு லுரையெழுத வேண்டுவதில்லை. பா - நேரிசையாசிரியப்பா.

கனையிருள்கடிவயிரப்பரல்செறிதமனியப்
புனைகழலொடுவனைபரிபுரப்பூந்தாளினன்

குரங்கிணையொடுமெருங்கிவலைபோலந்துகிலின
னறந்தழைகருமபன்றனைபருளலருந்தியன்
கவுத்துவமணிவனமாலிகைகலந்தொளிர்திருப்
பவித்திரமுடன்மலர்மாமகள்பயின்மார்பினன்
வான்றேய்கதிரினிற்றிகிரியைவலனேந்திய
மீன்றேய்மதியினில்வரிவளையிடனேந்திய
மகரக்குழைதழைகாதினன்மணிமௌலியன்
கொப்பலதலைசேர்திருமலைமேலுறை
செல்வனை,
மனமொழிமெய்களின்வழிபடுபவராய்ப்
புனைநறுமலர்பொழிபவர்பாற்
கனவிலுமுறுங்கொடுங்கனிச்சியோனே. (119)

கனையிருள் - செறிந்தவிருள். வயிரப்பரல் - வயிரமணி; உள்ளிடாய தரி. தமனியப்புனைகழல்-பொன்னாற்புனையப்படும் வீரக்கழல். பூந்தாளென்றது பொலிவினையுடைய சிபாதம். வான்றேய்மதி…ஏந்தியும் - வானிடத் தலமரல்பொருந்திய கதிராற்கொண்ட சக்கரத்தை வலத்தே தரித்தும். மீன்றேய்………இடனேந்திய - நாண்மீனோடு பொருந்திய மதியாற்கொண்ட வலம்புரியை யிடத்தே பொறுத்த வென்க. என்னை? வான்றேய் கதிர்போன்ற திகிரியை மீன்றேய் மதிபோன்ற வலம்புரியை யென வுவமைத்தொகைத் தொடர்மொழி யன்றோ வெனின், அன்று; இமையாத முக்கண் மூவரிற் பெற்றவ ரென்பதுபோலக் கொள்க. சரிடத்து மின் சாரியை. ஆல் என்னு முருபு இன்னென மூன்றுவ தைந்தனுருபாய் மயங்கியன. கொண்ட வென்னும் வினையுந்தொக்கது. செல்வனை யென்பது தனிச்சொல். சிபாத முதலியவற்றை யுடையனாகித் திருமலைமே னிலைபெற்ற திருவுடையானைத் திரிவித கரணங்களாலும் அருச்சனை செய்பவராய்க் கைகளா னறுமலர்தூயவரிடத்துக் காலன் கனவினுங் கனவினு மணுகானென்றவாறு. இது பத்தடியாய்ச் செல்வனை யென்னுந் தனிச்சொற் பெற்று மூன்றடி பேரிசை யாசிரியச் சுரிதகத்தாலிற்ற சிந்தடி வஞ்சிப்பா. அலங்காரமுந் திணையுந்துறையு மிதுவு மது.

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

# 1912ஞ செப்டம்பர்மீ 1உ முதல் 30உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ | அ. | ப. | செலவு | தொகை ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| கானாடுகாத்தான் மகா-௱-௱-ஸ்ரீ சா. ரும. மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்களிடமிருந்து பரிதாபிஞ ஆடிமீ முதல் கார்த்திகைமீ முடிவு மீ 5க்கு மாதம் 1க்கு ரூ 50 வீதம் சந்தா வரவு ரூ. | 250 | 0 | 0 | சபைச்சிப்பந்திகளுக்கு சம்பளம் செல்லாக்கிய வகையிற் செலவு ரூ | 398 | 3 | 8 |
| | | | | கலாசாலை மாணவர்களுக்குஆகாராதி போஷணைக்காக செல்லாக்கியது. ரூ | 61 | 11 | 10 |
| செந்தமிழ்ச்சந்தா வகையில் வரவு ... | 20 | 2 | 0 | கலாசாலை மாணவர்களுக்கு புத்தகம்வாங்கியது | 3 | 12 | 3 |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு 243-1-3 | | | | பைண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச் செலவு 0-6-0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு 51—1—0 | | | | ஷை ஆபீசு கண்டின்ஜன்சிச்செலவு 20-13-0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 21 | 3 | 0 |
| ஆக பிரிண்டிங் ஆபீசு வரவு ... | 294 | 2 | 3 | | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 82—4—0 | | | | பிரிண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிசெலவு 50-1-9 | | | |
| | | | | ஷை ஆபீசு ஆயில் எஞ்சின் சம்பந்தமாய் எண்ணெய்ச் செலவு 18—5—11 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு 3—12—0 | | | | ஷை ஆபீசு கண்டின்ஜன்சிச்செலவு 5—6—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 73 | 13 | 8 |

| | | | |
|---|---|---|---|
| ஆக பைண்டிங் ஆபீஸ் வரவு ரூ | 86 | 0 | 0 |
| புத்தக விற்பனை வரவு ... | 109 | 12 | 0 |
| சங்கம் காலி நிலம் மரக்கடைவாடகை பரிதாபிஹ ஆவணி மீ" த்துக்கு வரவு 55—0—0 | | | |
| விளம்பர வகையிற்சார்ஜ் வரவு ரூ 10-15-0 | | | |
| புக்போஸ்ட் ரிஜிஸ்டர் சார்ஜ் வி. பி. வரவு 0—10- 0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ... | 66 | 9 | 0 |

| | | | |
|---|---|---|---|
| போஸ்டேஜ் வகையிற் செலவு | 15 | 0 | 0 |
| பிரிண்டிங் ஆபீஸ் கம்போஸிங் ஸ்டுல்கள் ரிப்பேர் வகையிற் செலவு | 8 | 14 | 0 |
| சங்கம் பிரஸ் ஆயில் எஞ்சினுக்கு 1912ஹ யேப்பிரல்மீ" முதல் 1913ஹ மார்ச்சுமீ" முடிய ஒரு வருஷத்துக்கு லைசென்ஸ் செலுத்தியது ரூ 50—0—0 | | | |
| சங்கம் ஆபீஸ் இருக்கிற கட்டிடத்துக்கு சென்ற ஜூலை ஆகஸ்டு இந்த இரண்டுமீ" ங்களுக்கு செல்லாக்கிய வாடகை ரூ 50—0—0 | | | |
| கலாசாலை யிருக்கிற கட்டிடத்துக்கு சென்ற மார்ச்சு, யேப்பிரல், மே, இந்த மூன்றுமீ" ங்களுக்கு செல்லாக்கிய வாடகை ரூ 54-0-0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 154 | 0 | 0 |
| கலாசாலை உபயோகத்து கரோசனுயில் வாங்கியது ரூ 1—14—0 | | | |
| ஷை பிளாக் போர்டு பெயிண்டு செய்ததர்க்கு ரூ 2—0—0 | | | |
| ஷை கண்டிஸன்லிச் செலவு ரூ 0—5—9 | | | |
| ரசீது லேபிள் வண்டிவாடகைச்செலவு 1-0-0 | | | |
| திருமங்கலம் வகையரு இடங்களுக்கு பிரிண்டிங் பைண்டிங் ஆர்டர் வாங்கிவர ரயில் சார்ஜ் வகையருவுக்கு செல்லாக்கியது ரூ 0—12—0 | | | |
| புவனேந்திர காவிய எல்நோட்டீஸ் சவுத் இந்தியன் மெயில் பத்திரிகையில் பிரசுரஞ் செய்ததற்கு சார்ஜ் கொடுத்தது ரூ 3—10—0 | | | |
| சுதேசமித்திரன் பத்திரிகைக்கு 1912ஹ ஜனவரிமீ" முதல் டிசம்பர்மீ" முடிய எக்ஸ்சேஞ்சு போக பாக்கி சந்தா வி. பி. மூலம் செலு | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | த்தியது ரூ 6—2 0 | | | |
| | | | | ஆபீஸ் ஸ்டேஷனரி, கண்டிஜன்ஸி, பில்கலெக்டருபயோகத்துக்கு பவுன்டன் பென் வகையரு உள்பட செலவு 2—13—0 | | | |
| | | | | பிரிண்டிங் ஆபீஸ் பில்படி சங்கமாபீசு அச்சுக்கூலி வகைக்கு செல் 51—1—0 | | | |
| | | | | ஷை ஆபீஸ் பில்ப்படி ஷை ஆபீஸ் பைன்டிங் வகைக்கு செல் 3—12—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 73 | 5 | 9 |
| ஆக மொத்தம் வரவு .. | 826 | 9 | 3 | லேட் பிரசிடெண்டு டிரஸ்டியவர்களிடமிருந்து கடன் வரவு ரூ 1000-த்தில் 1911 நவம்பர் மீ"த்திலும் 1912 ஜுன்மீ"த்திலும் செல் ரூ 400 போக நாளது செப்டம்பர்மீ"த்தில் ஷை கடனுக்காக செல்லாக்கியது ரூ | 200 | 0 | 0 |
| சென்ற ஆகஸ்டு மீ"த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 854 | 6 | 1 | ஆகமொத்தம் செலவு ரூ | 1005 | 0 | 2 |
| ஆக மொத்தம் ... | 1680 | 15 | 4 | By pass Book Rs. 521-8-2 }<br>By cash Rs. 154-7-0 } போக பாக்கியிருப்பு ... | 675 | 15 | 2 |
| ஆக மொத்தம் ... | 1680 | 15 | 4 | ஆக மொத்தம் ... | 1680 | 15 | 4 |

**R. RENGASAMI IYER.**
*Ag. Manager.*
15—10—12.

*Audited and found Correct*
**S. GOPALASAMY IYENGAR,**
23—10—12. *Auditor.*

## மதுரைந் தமிழ்ச்சங்கத்து

# 1912-ஞ் அக்டோபர்மீ 1௳முதல் 31௳ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை ரூபா. | அ. | ப. | செலவு. | தொகை. ரூபா. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1912ம்ஞு செப்டம்பர், அக்டோபர் இரண்டு மாதங்களுக்குரிய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச்சந்தா வரவு ... | 100 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு சம்பளம் செல்லாக்கிய வகையிற் செலவு ... | 387 | 12 | 10 |
| செந்தமிழ்ச் சந்தா வகையில் வரவு ... | 47 | 5 | 0 | கலாசாலை மாணவர்களுக்கு ஆகாராதி போஷணைக்காக செல்லாக்கியது ரூ. ... | 54 | 15 | 6 |
| பிரிண்டிங்ஆபீசு அச்சுக்கூலிவரவு 234—13-6 | | | | கலாசாலை மாணவர்களுக்கு புத்தகங்கள் வாங்கிய வகையிற் செலவு ரூ. ... | 2 | 6 | 0 |
| சங்கம் ஆபீசு சம்மந்தமான அச்சுக்கூலி வரவு ... 2—10—0 | | | | பைண்டிங் ஆபீசு கண்டின்ஜென்ஸி செலவு ... | 22 | 9 | 4 |
| ஆக பிரிண்டிங் ஆபீசு வரவு ... | 237 | 7 | 6 | பிரிண்டிங்ஆபீஸ்ஸ்டேஷனரிச்செலவு 62-6-6 | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 34—10—6 | | | | ஷை ஆபீசு ஆயில்என்ஜின் சம்பந்தமாய் எண்ணெய்ச் செலவு 11—7—0 | | | |
| சங்கம்ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... 12—0—0 | | | | ஷைஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு 3—14—1 | | | |
| ஆக பைண்டிங் ஆபீசு வரவு ... | 46 | 10 | 6 | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 77 | 11 | 7 |

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| புத்தக விற்பனை வரவு ரூ ... | 119 | 15 | 0 |
| சங்கம் காலிநிலம் மாக்கடை வாடகை நாளது பரீதாபி-ஞு புரட்டாசி மீ த்துக்கு வரவு ... 55—0—0 | | | |
| தவரிப்போன யோக்கியதா பத்திரத்துக்கு டூப்ளிக்கேட் காப்பி கொடுத்த வகையில் கட்டண வரவு ரூ. 0—8—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ ... | 55 | 8 | 0 |

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| போஸ்டேஜ் வகையிற் செலவு ... | 16 | 8 | 0 |
| ஆயில் எஞ்சின் வகையரு ரிப்பேர்செய்தவகையிற் செலவு ... | 4 | 4 | 0 |
| சங்கம் ஆபீசு இருக்கிற கட்டிடத்துக்கு செப்டம்பர், அக்டோபர் இந்த இரண்டு மாதங்களுக்கு செல்லாகிய வாடகை ரூ.50—0—0 | | | |
| 1912 ஏப்பிரல்மீ முதல் செப்டம்பர்மீ முடிய அரை வருஷத்துக்கு சங்கம் தொழில்வரி செலுத்தியது ரூ.6-0-0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ. ... | 56 | 0 | 0 |
| ஆபீஸ் உபயோகத்துக்காக கண்ணாடி பீரோ 2, ஸ்டூல் 1 வாங்கிய வகையிற் செலவு ... | 38 | 12 | 0 |
| லைபிரேரி உபயோகத்துக்காக புத்தகங்கள் வாங்கிய வகையிற் செலவு ... | 5 | 6 | 0 |
| கலாசாலை உபயோகத்துக்கு கரோசன் ஆயில் வாங்கியது ரூ. 2—0—2 | | | |
| ஷை உபயோகத்துக்கு ஸ்டேஷனரி சாமான்கள் வாங்கியது ரூ. 2—1—3 | | | |
| சங்கம் கலாசாலை (Sign Board) புதிதாய் செய்ய பலகைக்கிரயம் தச்சுக்கூலி வகையிற் செலவு ரூ. 3—0—0 | | | |
| V. P. புக் ரசீது லேபிள் வண்டி வாடகை வகையிற் செலவு ரூ. 2—2—0 | | | |
| சென்னை ஹிந்து பத்திரிகை சந்தா பாக்கி செலுத்தியது ரூ. 50 மணியார்டர் கமிஷன் 0-8-0 ஆக செலவு ரூ. 50—8—0 | | | |
| சரஸ்வதிபூஜைச்செலவு ரூ. 5—0—6 | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | சீமையிலிருந்து தருவித்த ராப்பர் பேப்பர்களுக்கு சென்னை ஹாலண்டுமோல் கம்பெனிக்கு இன்சூர் செய்தனுப்பிய வகையிற் செலவு ரு. 165 7-0 ரயில்வே சார்ஜ் செலுத்தியது ரு. 5-0-0 ஆக ரு. 170—7—0<br>ஆபீஸ் ஸ்டேஷனரி கண்டிஜன்சிச் செலவு ரு. ... 2—12—0<br>பிரிண்டிங் ஆபீஸ் பில்ப்படி சக்கம் ஆபீசு அச்சுக்கூலி வகைக்குச் செல் ரூ ... 2—10—0<br>ஷை. ஆபீஸ் பில்ப்படி ஷை. ஆபீஸ் பைண்டிங் வகைக்குச் செல் ரூ 12—0—0<br>ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 252 | 8 | 11 |
| ஆக மொத்தம் ரூ | 606 | 14 | 0 | | | | |
| | | | | ஆகமொத்தம்செலவு | 918 | 14 | 2 |
| சென்ற செப்டம்பர்மீ த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ரூ ... | 675 | 15 | 2 | போகபாக்கியிருப்பு* | 363 | 15 | 0 |
| ஆக மொத்தம் ... | 1282 | 13 | 2 | *By Pass Book 321—8—2<br>By cash on hand 42—6—0 | | | |
| ஆக மொத்தம் ரூ ... | 1282 | 13 | 2 | ஆக மொத்தம் ... | 1282 | 13 | 2 |

R. RANGASWAMI AIYER,
*(Ag.) Manager.*
14—11—12.

*Audited and found Correct*
S. GOPALASAMY IYENGAR,
24—11—12. *Auditor.*

உ

கடவுள்துணை.

நாற்கவிராசநம்பி யியற்றிய

# அகப்பொருள்விளக்கம்

மூலமு முரையும்.

---

இவை

மதுரைத் தமிழ்ச்சங்கத்து அக்கிராசனாதிபதியாயிருந்த

பாலவனத்தம் ஜமீந்தார்

ஸ்ரீமாந்-

பொ. பாண்டித்துரைத்தேவரவர்களால்

பரிசோதிக்கப்பட்டன.

---




---

செந்தமிழ்ப்பிரசுரம்—௩௪.

---

மதுரை:

தமிழ்ச்சங்க முத்திராசாலைப்

பதிப்பு.

1913.



---

## அகப்பொருள்விளக்கம்

# முகவுரை.

---

பண்டைக்காலத்து வழங்கிவந்த தமிழிலக்கியங்களைக் கற்போர் எளிதி னுணர்தற் குபகாரமாகவும், கற்றுவல்லோர் மற்று மிலக்கியங்க ளியற்றுவதற்குக் கட்டளையாகவும் முன்னோரால் விதிக்கப்பட்ட பழைய இலக்கணநூல்கள் பலவற்றுள்ளும் தொல்காப்பியம் மிகச் சிறந்தது. அது எழுத்துச் சொற் பொருள் என்னும் மூன்றதிகாரங்களை யுடையதாய் எழுத்ததிகாரத்தில் எழுத்திலக்கணங்களையும் சொல்லதிகாரத்துட் சொல்லிலக்கணங்களையும் விரித்தும், பொருளதிகாரத்துள் அகம் புறம் என்னும் இருபகுதியாகிய பொருளிலக்கணங்களையும் அவைபற்றி நிகழும் யாப்பிலக்கண முதலியவற்றையும் அக்காலவழக்கொடு பொருந்த வேண்டுமளவு விதித்தும் முடிக்கப்பெற்றுள்ளது.

அரும்பெருநூல்களைக் கற்குமாற்றன் மிக்குள்ள முற்காலத்தவரால் அந்நூல் எளிதி னுணரப்பட்டிருப்பினும் அவ்வாற்றல் குன்றி வரும் பிற்காலத்துக் கல்விமுதிர்ச்சி யுடையார்க்கன்றிக் கற்குஞ் சிறார்க்கெல்லாம் அங்ஙன முணர்தற்கரியதாயிற்று. ஆகவே, பிற்காலத்து அவ்விலக்கணங்களுள் எழுத்துச்சொல் என்னும் இருவகை யிலக்கணங்களையும் தற்காலவழக்குநோக்கிப் புதியன புகுத்துக் கற்போர் எளிதினுணரத் தொகை வகை விரியாற் சுருங்கியதாகப் பவணந்திமுனிவரால் நன்னூலென்னு மிலக்கணநூலொன்று செய்யப்பட்டிருக்கிறது. அவ்வாறே பன்னிருபடலத்துள் விரிந்து பரந்துகிடந்த புறப்பொருளிலக்கணங்களைக் கற்பவர்கள் தெளிவுறுமாறு முறைப்படுத்தி ஐயனாரிதனாரால் 'வெண்பாமாலை' யென்னும் புறப்பொரு ளிலக்கண நூலும் ஒன்று செய்யப்பட்டுள்ளது. மற்றும் யாப்பிலக்கணங்களைப் பிற்கால வழக்கு நோக்கி விரித்து யாப்பருங்கலமென்னும் இலக்கணநூல் ஒன்று பிருகத்ஸாகரராற் செய்யப்பட்டது. அதனைக் கற்போர் எளிதி னுணருமாறு, அவ்விலக்கணங்களைச் சுருக்கி 'யாப்பருங்கலக்காரிகை' யென்னும் யாப்பிலக்கணநூலொன்று அமுதசாகரராற் செய்யப்பட்டிருக்கிறது. அங்ஙனம் அணியிலக்கணங்களும் பிறராற் செய்யப்பட்டுள்ளன.

## II

அம்முறையில் 'அகப்பொருள் விளக்க' மென்னு மிந்நாலும் நாற்கவிராசநம்பி என்பவரால், தொல்காப்பியத்து வேற்றிலக்கண வியல்களினும் விரிந்து பரந்து கிடந்த அகப்பொரு ளிலக்கணங்களைத் தற்காலத்துச் சான்றோ ரிலக்கியங்களுக்கியைய முறைப்படத் தொகுத்துப் பொரு ளினிதுவிளங்கச் சூத்திரம் வகுத்து உரையுமெழுதி உதாரணமுங் காட்டி முடிக்கப்பெற்றது.

இது, அகப்பொருளிலக்கணங்களைத் தெளிவுற விளக்கு மியல் புடைய தென்பதுபற்றி 'இலக்கணவிளக்க' நூலுடையாரால் அகப் பொருளிலக்கணங் கூறுமிடத்துப் பெரும்பாலும் இந்நூற் சூத்திரங் களைக்கொண்டே அவ்விலக்கணங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

இந்நூலாசிரியரது ஊர் பாண்டிநாட்டுட் பொருநையாற்று வட கரையருகிலுள்ள திருப்புளிங்குடி என்னூர் திருப்பதி. இவரது பெயர் நம்பிநயினர் என்பதே. இவரது மதம் ஜைனம். இவர் வட மொழியிலும் வல்லுநர். இவர் தமது புலமைத் திறமைகொண்டு நாற்கவிராசர் என்னும் சிறப்புப்பெயரும் பெற்றமையால் நாற்கவிராச நம்பி என வழங்கப்பெறுகின்றனர். இவர் தந்தையார் முத்தமிழ்ப் புலமையும் உத்தமகுணங்களு மொருங்கமைந்த உய்யவந்தநயினர் என்பார். இவர் ஆசிரியபதம் பெற்றவர். இந்நூல் அரங்கேறிய இடம் பாண்டியன் குலசேகரன் அவைக்களம். இவையெல்லாம் இந்நூலின் சிறப்புப்பாயிரத்தாலும் அதனுரையாலும் நன்கு விளங்குகின்றன.

இந்நூலே, மதுரைத் தமிழ்ச்சங்கஸ்தாபகரும் அச்சங்கத் தலை வருமாயிருந்த தமிழபிமானம்பூண்ட பாலவநத்தம் ஜமீந்தார் ஸ்ரீமாந் பாண்டித்துரைத்தேவரவர்கள் அச்சிடக்கருதிப் பலராலும் சங்கத் துக்குக் கொடுக்கப்பட்ட ஏட்டுப்பிரதிகள் பலவற்றையும் ஒப்புநோக் கிப் பரிசோதித்துச் செந்தமிழ்ப் பிரசுரமாக வெளியிட்டுவந்தார்கள். அப்பிரதிகளுட் சில தஞ்சைவாணன்கோவைச் செய்யுண் மட்டுமே யுதாரணமாகக் காட்டப்பட்டுள்ளன. வேறுபல பிரதிகளில் தஞ்சை வாணன்கோவைச் செய்யுளுடன் எற்றபெற்றி இடையிடையே பல துறைகளுக்கு நற்றிணை குறுந்தொகை அகநானூறு முதலிய சங்க நூற் செய்யுள்களும், அகப்பொருட்டுறையிற் சூற்பரியமில்லாத சில

பிறநூற் செய்யுள்களும் உதாரணம் காட்டப்பட்டிருந்தன. சங்கச் செய்யுள்களிற் சில துறை வேறுபடக் காட்டப்பட்டுள்ளன. அகப் பொருட்டுறையிற் றூற்பரியமில்லாத உதாரணச் செய்யுள்களிற் சில பொருந்தாதனவுமிருந்தன. அவை இடைச்செருகலென விலக்கப் பட்டன. இடையிடையே யுதாரணமாகக் காட்டப்பட்ட சங்கச் செய்யுள்கள்பலவும் பல பிரதிகளிலும் பிழைபட்டுக் கிடந்தமையால் அவற்றை இயன்றவளவு திருத்தியும், தெளிவில்லாத செய்யுள்கள் பலவும் தேவரவர்கள் விருப்பத்தின்படி மஹாமஹோபாத்தியாய பிரம்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களாற் றிருத்தி யனுப்பப்பெற்றும் பெரும்பாகமும் அச்சிட்டு முடியும்தருணத்தில் தேவரவர்கள் தெய்வ கதியால் தேகவியோகமடைந்துவிட்டார்கள்.

பின்பு எஞ்சிய சிறிதுபாகமும் அவர்கள் திருத்திவைத்திருந்த பிரதியைக்கொண்டு அச்சிட்டு முடிக்கவேண்டியதாயிற்று. இத்தரு ணத்தில் மஹாமஹோபாத்தியாய ஐயரவர்கள் திருத்தியனுப்பிய உதாரணச் செய்யுள்கள் அகப்படாமையால் மறுமுறையும் அவர்க ளுக்குச் சிரமங்கொடுக்க நேர்ந்தேன். அவர்கள் எனது வேண்டுகோ ளுக்கிணங்கி, தங்கள் இடையில்லாத காரியங்களுக்கிடையே சிரமம் பாராட்டாது திருத்தியனுப்பிய பரோபகாரப் பெருந்தகைமை பாராட்டற்பாலது.

இப்புத்தகம் பதிப்பித்த பிரதிகளிற் செந்தமிழிற் செலவானவை போக எஞ்சியவை சிலவேயுள்ளனவாதலால் கூடியவிரைவில் மறு முறையும் பதிப்பிக்கவேண்டிய நிலையி லிருக்கிறது. அப்பதிப்பு, இன்னும் சிறிது செப்பஞ்செய்து மேற்கோள்விளக்க முதலிய விஷய சூசிகைகளுடன் வெளியிடப்படுமாகையால் இப்பொழுது முடிந்த மட்டில் பரீக்ஷைக்குப் படிப்பவர்களுக்கு விரைவி லுபயோகப்படும் படி புத்தகரூபமாக்கப்பெற்றிருக்கிறது.

இங்ஙனம்,

திரு. நாராயணையங்கார்,

பத்திராதிபர்.
"செந்தமிழ்."

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1912௵ நவம்பர்௴ 1௳ முதல் 30௳ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ. | அ. | ப. | செலவு | தொகை ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1912௵ நவம்பர்௴த்திய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச்சந்தா வரவு ... | 50 | 0 | 0 | சபைச்சிப்பந்திகளுக்கு சம்பளம் செல்லாக்கிய வகையிற் செலவு ... 318-1-0 | | | |
| செந்தமிழ்ச்சந்தா வகையில் வரவு ... | 45 | 9 | 0 | சேதுபதி செந்தமிழ்க்கலாசாலை உபாத்தியாயர்களுக்கு சென்ற அக்டோபர் 1௳ முதல் 6௳ முடிய சம்பளம் செல்லாக்கியது ... 11—3—6 | | | |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு 165-4-3 | | | | | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு ... 26-11-0 | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு அக்டோபர் 7௳ முதல் 31௳ முடிய சம்பளம் செல்லாக்கியது... 54-13-6 | | | |
| ஆக பிரிண்டிங் ஆபீசு வரவு ... | 191 | 15 | 3 | | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 19—2—0 | | | | ஆக மேற்காட்டிய வகையிற் செலவு ரூ | 384 | 2 | 0 |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... 13—2—0 | | | | சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை மாணவர்களுக்கு அக்டோபர்௴ 1௳ முதல் 6௳ முடிய ஆகாராதி போஷணைக்கு செல் ... 11—4—0 | | | |
| ஆக பைண்டிங் ஆபீஸ் வரவு ... | 32 | 4 | 0 | | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| புத்தக விற்பனை வரவு ரூ ... | 57 | 0 | 0 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு அக்டோபர் 7வ முதல் 31வ முடிய ஆகாராதி போஷணைக்காக செல்... 47-14-0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 59 | 2 | 0 |
| சங்கம் காலிநிலம் மாக்கடை வாடகை நாளது பரிதாபி-ஹு ஐப்பசிமீ த்துக்கு வரவு ... 55—0—0 | | | | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு புத்தகங்கள் வாங்கிய வகையில் செலவு ரூ | 3 | 0 | 0 |
| விளம்பர சார்ஜ் வகையில் வரவு... 8—2—0 | | | | பைண்டிங் ஆபீசு கண்டின்ஜன்ஸி செலவு ரூ | 20 | 13 | 5 |
| | | | | பிரிண்டிங் ஆபீசு ஸ்டேஷனரி செலவு 50-10-6 | | | |
| தனித்தமிழ் பரீக்ஷை கட்டணம் வகையில் வரவு ... 18—0—0 | | | | ஷை. ஆபீசு ஆயில் எஞ்சின் சம்பந்தமாய் எண்ணெய்ச் செலவு 6—13—6 | | | |
| | | | | ஷை ஆபீசு கண்டின்ஜன்ஸிச் செலவு 3—3—2 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 60 | 11 | 2 |
| கலர் ராப்பர்க்காயிதம் விற்றுமுதல் வகையில் வரவு ... 4—10—0 | | | | போஸ்டேஜ் வகையிற் செலவு ... | 17 | 0 | 0 |
| காலி மைஜாடிகள் விற்றவகையில் வரவு ... 0—4—0 | | | | கட்டிங் மெஷின் டிரெடில் வகையறா ரிப்பேர் செலவு ரூ | 3 | 0 | 0 |
| சங்கம் கௌரவ காரியதரிசிகள் T. C. ஸ்ரீநிவாஸ ஐயங்காரவர்கள் T. N. சுந்தரராஜ ஐயங்காரவர்கள் இவ்விருவர்களிடமிருந்து தீபாவளி பண்டிகைக்கு கலாசாலை மாணவர்களுக்கு வஸ்திரங்கள் வாங்கிக்கொடுப்பதற்காக இனும்வரவு 15—0—0 | | | | சங்கயாபீசு கட்டிடத்துக்கு செல்லவேண்டிய நவம்பர்மீ த்திய வாடகையில் ஷை கட்டிடத்தின் நிலவரிக்குச்செல். ரூ | 7 | 11 | 8 |
| | | | | லைப்ரேரி உபயோகத்துக்காக புத்தகங்கள் வாங்கிய வகையிற் செலவு ... | 2 | 7 | 0 |
| | | | | சீமையிலிருந்து தருவித்த கலர் ராப்பர் காகிதங்களுக்கு கப்பல்சார்ஜ் வகையறா செல்லாக்கியது ... 13-8-0 | | | |
| | | | | சங்கம் கலாசாலை (Sign Board) பெயின்டிங் செய்தவகையிற் செலவு ... 2-0-0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ ... | 101 | 0 | 0 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு தீபாவளி பண்டிகைக்கு வஸ்திரம் | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| சங்கம் கௌரவ காரியதரிசி T. C. ஸ்ரீநிவாச ஐயங்காரவர்களிடமிருந்து கைமாற்றுவகையில் வரவு ரூ | 75 | 0 | 0 | வாங்கிக்கொடுத்தவகையிற் சங்கம் கௌரவ காரியதரிசியவர்களிடமிருந்து வந்ததொகை செலவு ... 15-0-0 | | | |
| | | | | ரசீதுலேபிள் வண்டிவாடகை வகையிற் செலவு ... 1-0-6 | | | |
| | | | | ஆபீஸ் ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸிச் செலவு ரூ. ... 1--13—3 | | | |
| | | | | பிரிண்டிங் ஆபீஸ் பில்ப்படி சங்கம் ஆபீசு அச்சுக்கூலி வகைக்குச் செல் ரூ ... 26—11—0 | | | |
| | | | | ஷை ஆபீஸ் பில்ப்படி ஷை ஆபீஸ் பைண்டிங் வகைக்குச் செல் ரூ 13—2—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 73 | 2 | 9 |
| ஆக மொத்தம் ரூ | 552 | 12 | 3 | ஆகமொத்தம்செலவு | 631 | 2 | 0 |
| சென்ற அக்டோபர்மீ" த்தின் கடைசித்தேதியில் நின்றபாக்கித்தொகை ரூ ... | 363 | 15 | 0 | போகபாக்கியிருப்பு* | 285 | 9 | 3 |
| ஆக மொத்தம் ... | 916 | 11 | 3 | * By Pass Book 240—0—0 }<br>By cash on hand 45—9—3 } | | | |
| ஆக மொத்தம் ரூ ... | 916 | 11 | 3 | ஆக மொத்தம் ... | 916 | 11 | 3 |

R. RANGASWAMI AIYER,
*(Ag.) Manager.*
18—12—12.

*Audited and found Correct*
S. GOPALASAMY IYENGAR,
25—12—12. *Auditor.*

உ

# அபிதானசிந்தாமணி.

இதுவரை தமிழில் வெளிவராத "அபிதானசிந்தாமணி" என்னும் அரிய பெயரகராதிப் புத்தகமானது மதுரைத் தமிழ்ச் சங்கத்தாராற் பதிப்பிக்கப்பெற்று முடிவடைந்திப்பொழுது கலிகோ பைண்டுசெய்து விற்பனைக்குச் சித்தப்படுத்தி வைக்கப்பெற்றிருக் கிறது. இதில் வடமொழி தென்மொழி நூல்களிலும், உலக வழக்கிலும் வழங்கிவரும் பிரசித்திபெற்ற தேவர், முனிவர், அரசர், புலவர் முதலிய பலர்களுடைய பெயரும், அவர்கள் சரித்திரச்சுருக்க மும், நதி, மலை, கடல், தேசம், நகரம் முதலிய பலவற்றின் பெயரும், அவற்றின் விவரணங்கள் பலவுமெழுதப்பெற்றிருக்கின்றன. ராயல் 8-பக்கம் கொண்ட பாரம் 131 உள்ளது. நல்லகாகிதத்திற் றெளி வான எழுத்திற் பதிப்பிக்கப்பெற்றது. இதன் விலை ரூ 7 (எழு) வேண்டுவோர் மதுரைத் தமிழ்ச்சங்கம் மானேஜருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

R. Rangaswami Aiyer,

*Ag. Manager.*



உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக.] பரீதாபி ஹூ தைமீ [பகுதி-ந.

## ஐயவினுத்தொடர்விடை.

நமது செந்தமிழ்த் தொகுதி 11-பகுதி 1-இல் ஐயவினுத்தொடர் என்ற தலையங்கத்தின்கீழ், சகோதரரொருவர் தமக்குத் தோன்றிய ஐயவினுக்களிரண்டைத் தெரிவித்திருக்கின்றனர். அவற்றின் முக்கியபாகங்களைமாத்திரம் எடுத்து அடியில் எழுதியிருக்கின்றேன்.

### வினு I.

(a) யாப்பருங்கலக்காரிகை ஒழிபியலுள் "அருகிக்கலி" என்ற காரிகையின் உரையில் உரையாசிரியர், "இரணத்தொடைக்கும்" என்ற உம்மையால் ஒழிந்த மோனை, இயைபு, எதுகை, அளபெடை என்னுந் தொடை நான்கிற்கும் இவ்வாறே யொட்டிக்கொள்க; அவை கூடி வழங்குமாறு:—என்று, "கடையே, கடையிணை, பின், கடைக்கூழை, இடைப்புணர்பு" என்றவற்றை முறையே முற்கூறிய நான்கின்பாலுஞ் சார்த்தி "இவற்றிற் கிலக்கியம்" யாப்பருங்கல விருத்தியுட் கண்டுகொள்க என்றதால் அவ்விருத்தியில் கடையிணை யியைபு, பின்னியைபு முதலியவற்றிற்கு உதாரணம் வருமாறெங்ஙனம்? அவையெவை?

(b) "இறுதியியைபு" என்றமையான் விகற்ப இலக்கியம் காட்டுகையில் மோனை, எதுகைகளுக்குக் குறிப்பிட்டிருக்கிறபடி முதற்சீரினன்றோ இறுதியில் வரவேண்டும்? அங்ஙனமாயின், "கடையிணையியைபு"க்கு ஈற்றிலிருந்து இலக்கியம்காட்டி வரவியலும்; ஆனதால், "மொய்த்துடன்றவமும் முகிலே பொழிலே" என்பது இணை

*

யிையபுக்குப் பொருந்துமா? "கடையிணையியைபு" என்றலாகாதோ? "வில்லேநுதலே வேற்கண்கயலாம்" என்பது இணையியைபுக்கு இலக்கியமன்றோ? மறுக்கின் என்? காரணம் விளக்கவேண்டுவல்.

## வினு II.

(a) திருக்குறள் 532, 534, 246, 199 பாக்களிலுள்ள பொச்சாப்புக்கு மறவியென்றே பரிமேலழகியார் உரைபெழுதிச் செல்கின்றனர். இதனல் பொச்சாப்பும் மறவியும் ஒன்றென்றே உரையாசிரியர் நினைத்தனர்போலும்; அற்றாயின், நன்னூல் உரியியல் "அறிவருளாசை" என்னுஞ் சூத்திரத்தில் "பொச்சாப்பூக்கமறமதமறவியினைய" என்று உயிர்க்குணத்தில் பொச்சாப்பும், மறவியும் வேறாய் வகுத்துணர்த்துவர் ஆசிரியர் பவணந்தியார்; இரண்டும் வேறென்று கூறியவர் கருத்துடன் ஒன்றென்றே பொருள்கொண்டவர் கருத்துப் பொருந்துமா? வழக்கத்தில் முன்னவரே சான்றாகின்றனர்; இவற்றின் காரணம் வேண்டுவன்.

இவ்விரு வினுக்கட்கு உத்தரம் வருமாறு:—

## விடை I.

(a) யாழ்ப்பாணத்துச் சுன்னுகம் வித்வான் ஸ்ரீ அ. குமாரசுவாமிப்பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்று வெளிப்போந்த "யாப்பருங்கலக்காரிகைப்புத்துரையில்" "இரணத்தொடைக்கும்" என்பதிலுள்ள உம்மையை எச்சவும்மையாகத் தழீஇ மற்றை நான்கு தொடைகட்கும் கடை, கடையிணை, பின், கடைக்கூழை, இடைப்புணர்பு இவற்றைச்சார்த்தி எழுதப்படாமலிருத்தலைக்காண்க. முன்னர் அச்சிடப்பெற்ற யாப்பருங்கலக்காரிகை யுரைப்பிரதியில் "இரணத்தொடைக்கும்" என்பதிலுள்ள உம்மையை எச்சவும்மையாகக்கொண்டு மற்றைத்தொடை நான்குக்கும் கடைமுதலியன நான்கும் சார்த்தி எழுதியிருக்கின்றதெனின், அதற்குச் சமாதானம் மேற்கூறிய யாப்பருங்கலக்காரிகைப்புத்துரையின் முகவுரை, உபக்கிரமணிகைகளைப் படிப்பின், கிடைக்கும். அன்றியும், இயைபுத்தொடை பின்னியைபு இலக்கணம் எவ்வாற்றானும் பொருந்தாது. இது ஆராயின், தெரியும். ஆகவே, பின்னியைபு முதலிய வருமாற்றையும் அவற்றிற்குரிய உதா

ரனைத்தையும் காட்டலாகாமையுணர்க. யாப்பருங்கலக்காரிகையின் பழைய உரையாசிரியர் கூறியபடி யாப்பருங்கலவிருத்தியில் காட்டியிருக்கக்கூடுமெனின் அது அவ்விருத்தி அச்சுவாகனமேறி வந்த பின்னன்றே உணரக்கூடும். ஈண்டு அதுகிடக்க.

(b) மொய்த்துடன்றவழும் முகிலே பொழிலே என்பது கடையிணை இயைபுக்கு இலக்கியம் ஆகாது; வில்லேநுதலே வேற்கண்கயலாம் என்பது இணையியைபுக்கு இலக்கியம் ஆகாது. என்னை? "இறுதியியைபு" எனலால் இறுதிச்சீரையே முதலாகக்கொண்டு இயைபுத்தொடையின் விகற்பங்களை யெல்லாம் அறிதல் வேண்டும்; மற்றைத் தொடை நான்கன் விகற்பங்களையெல்லாம்-முதற்சீரையே முதலாகக் கொண்டு அறிதல்வேண்டும். இவ்வாறு அறிதல் தொன்றுதொட்டு வரும்முறை. இது சொல்லளவன்று; இலக்கியத்திலும் காட்டுவல். அவ்விலக்கியம் அடியில் வருவன.

சிதம்பரச் செய்யுட்கோவை.

(1) (a) † அவரோ வாரார் கார்வந் தன்றே
கொடிக்கு முல்லையுங் கடிக்கரும் பின்றே.

(b) திருமுடியிற் கண்ணியு மாலையும் பாம்பு
திருமார்பி லாரமும் பாம்பு—பெருமான்
திருவரையிற் கட்டிய கச்சையும் பாம்பு
பொருபுயத்திற் கங்கணமும் பாம்பு.

(2) வண்டுஞ் சுரும்பு ஞிமிறுங் குடைந்தார்ப்பத்
தண்டே னிறைக்கு மிதழி நறுங்கண்ணி
யெண்டோண்முக் கண்ணு னிமைபம் புனமன்றி
லண்டர்கள் கண்களிப்பத் தொண்ட ரகங்குளிர்ப்ப
நின்றாடு மாடற் குருகா திருத்திரால்
வன்றிண் மறலி புடைத்துக் கொடிது டைக்கு
மன்று முருகீர் கொல்லாம்.

---

† இக்குறியிட்ட பாட்டுமாத்திரம் தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியலில் எழுத்தடியியைபுக்குக்கூறிய உதாரணப்பாட்டாம்.

(3) வானே நிலனே கனலே மறிபுனலே
ஊனே யவ்வூனி னுயிரே யுயிர்த்துணையே
யானேறு மேறே யரசே யருட்கடலே
தேனே யமுதே யளியோங்கள் செல்வமே
யானே புலனு நலனு மிலனன்றே
யானுனு மென்போன்மற் றூர்பெற்று ரம்பலத்துண்
மாநா டகங்காணும் வாழ்வு.

இப்பாக்களுள் முதலிரண்டுபாட்டு அடிகள்தோறும் முறையே ஈற்றெழுத்து, சொல் இவைகள் ஒன்றிவரத் தொடுத்தமையால் அடியியைபுக்கு இலக்கியமாதலும், 2-ம்பாட்டு 2-ம்அடி 1, 2 சீர்களின் ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால் இணையியைபுக்கு இலக்கியமாதலும், ஷை பாட்டு 4-ம்அடி 1, 3 சீர்களின்ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால் பொழிப்பியைபுக்கு இலக்கியமாதலும், 3-ம்பாட்டு 1-ம்அடி 1, 2, 3, 4 சீர்களின் ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால் முற்றியைபுக்கு இலக்கியமாதலும், ஷை பாட்டு 2-ம்அடி 1, 2, 4 சீர்களின் ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால் கீழ்க்கதுவாயியைபுக்கு இலக்கியமாதலும், ஷை பாட்டு 3-ம்அடி 1, 2, 3 சீர்களின் ஈற்றெழுத்து ஒன்றிவரத்தொடுத்தமையால் கூழையியைபுக்கு இலக்கியமாதலும், ஷைபாட்டு 4-ம்அடி 1, 3, 4 சீர்களின் ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால் மேற்கதுவாயியைபுக்கு இலக்கியமாதலும், ஷை பாட்டு 5-ம்அடி 1, 4 சீர்களின் ஈற்றெழுத்து ஒன்றிவரத்தொடுத்தமையால் ஒரூஉ இயைபுக்கு இலக்கியமாதலும் உணர்க. இங்கு மேற்கூறியாங்கு இறுதிச்சீரையே முதலாகக்கொண்டு கணக்கிடப்பட்டதைக் கருதுக.

விடை II.

(a) ஆசிரியர் பரிமேலழகியார் 532, 534, 246, 199 திருக்குறட்பாக்களிலுள்ள பொச்சாப்புக்குப் பொருளாகக்கொண்ட மறவியின் பொருள்வேறு; ஆசிரியர் பவணந்தியார் உயிருடைப் பொருள்களின் குணப்பண்பு உணர்த்துவான் தாமருளிய "அறிவருளாசை" என்பதை முதலாகக்கொண்ட சூத்திரத்திலுள்ள மறவியின் பொருள் வேறு. இவற்றுள் முன்னையது மறத்தலும் பின்னது மறந்து

செய்யுங் குற்றத்தினையும் உணர்த்தும். இங்ஙனம் மறவியென்னுஞ் சொல் இருபொருள் உணர்த்துவதை "வழுக்குமறவியு மயர்ப்பு மிவ றறு, மறப்பென்கிளவி மறலுமாகும்" எனவும், இழுக்குஞ் சோர்வும் புன்மையு மிகழ்ச்சியும், வழுக்குங்கிழு மறவியும் பொல்லாங்கும், பொச்சாப்பென்பது புகலுமப் பெயர்க்கே" எனவும் வரும் பிங்கலந் தைச் சூத்திரங்களாற்றெளிக. இவற்றால் இரண்டாசிரியர் கருத் தும் மாறுபடாது பொருந்துமாறு காண்க. இனி, பொச்சாப்புக்கு மறப்பென்னும் பொருளுளதோவென ஐயங்கிழின் அதனைப் "பொச் சாப்பு மறவிதீதாம்" என்ற 11-வது நிகண்டுரைகொண்டு ஒழிக்க.

இங்ஙனம்

அ. முத்தையமுதலி,

உபாத்தியாயன்,

பரங்கிப்பேட்டை.

---

உ

# ஐயவினாவுக்கு விடை.

சென்ற கார்த்திகை மாசிகச் செந்தமிழ்ப் பத்திரிகையிலே யாப் பருங்கலக் காரிகையில் வரும் இயைபுத்தொடை விகற்பத்திலும், பொச்சாப்பு என்பதற்குப் பரிமேலழகர் கூறிய பொருளிலும் ஐயப் பாடுற்று "நச்சுவார்க்கினியர்" என்பாரொருவர் வினவுவாராயினர். இயைபுத்தொடையையும், பொச்சாப்பு என்பதன் பொருளையுஞ் சிறிது விளக்குவாம். விளக்கவே அவரையப்பாடும் அகலும் என் பது அநுமிதியாகும்.

இறுதியியைபு.

"இறுதியியைபு" என்பது யாப்பருங்கலக் காரிகையிலே இயை புத்தொடைக்கு இலக்கணங் கூறிய சூத்திரம். யாப்பருங் கலக்காரி கையிலே வருஞ் செய்யுள் கட்டளைக்கலித்துறையாயினும் இலக்க ணங் கூறும் பாகமெல்லாஞ் சூத்திரம் போன்றிருத்தலால் இதனையுஞ்

சூத்திரம் என்றும். இறுதி(ஒன்றின்)இயைபு=அடியினிறுதியானது மற்றையடியிறுதியோடாவது, அவ்வடிக்கணுள்ள சீரிறுதிமற்றைச் சீரிறுதியோடாவது ஒன்றத் தொடுக்கப்படுமாயின் அத்தொடை இயைபுத்தொடை எனப்படும். ஒன்றின் என்பது "எழுவாயெழுத் தொன்றின்மோனை" என்புழி நின்று கொணர்ந்து கூட்டியுரைக்கப் பட்டது. இங்ஙனங் கூட்டியுரைக்குமாறு வைத்துச் செல்லுதல் சூத் திரக்காரர் வழக்கு. வடநூலாரும் "ஸூத்ரேஷு த்ருஷ்டம்பதம்ஸூத்ராந்தரேஷ்வநுவர்த்தநீயம்" என்பர் "ஒரு சூத்திரத்திற் காணப் படாதபதம் மற்றைச் சூத்திரத்தினின்று சேர்த்து நிறைக்கத்தக்கது" என்பது இதன் பொருள்.

இறுதி என்றது அளவடியின் இறுதிச்சொல்லினையும், எழுத் தினையுஞ் சுட்டி என்க. அது "எழுவாயெழுத்தொன்றின்" என்பத னாலும் "மொய்த்துடனுமியைபிற்கு" எனக்காட்டிய உதாரணச் செய் யுளானுந் துணியப்படும். இறுதியியைபு என்பது அடியியைபு, இணை யியைபு முதலிய எட்டிலுஞ் சென்று இயைபு என்பதனை விளக்கி நிற்கும். அடியியைபினிலக்கணம் "அடிதோறு முதல்" என்பதனாற் கூறப்பட்டது. இதனுரை யாப்பருங்கலக் காரிகையிற் கூறினேம். ஆங்குக் காண்க. இணையியைபு முதலிய எழும் "இருசீர்மிசையிணையா கும்" என்னும் செய்யுளாற் கூறினர்.

உதாரணம்.

மொய்த்துடன் றவமு முகிலே பொழிலே (இணையியைபு.)
மற்றத னயலே முத்துறழ் மணலே (பொழிப்பியைபு.)
நிழலே யினியத னயலது கடலே (ஒரூஉ வியைபு.)
மாதர் நகிலே வல்லே யியலே (கூழையியைபு.)
பல்லே தளவம் பாலே சொல்லே (கீழ்க்கதுவாயியைபு.)
வில்லே நுதலே வேற்கண் கயலே (மேற்கதுவாயியைபு.)
புயலே குழலே மயிலே யியலே (முற்றியைபு.)

இச்செய்யுளிலே எண்வகையியைபுத் தொடையும் வந்திருக் கின்றது. இஃது எழுத்தியைபு. இயைபாய் நின்ற எழுத்து லே என் பது. இயைபு என்பது இயைந்து நிற்றலுடையது எனப்பொருள்

படும். லே என்னும் எழுத்து அடிதோறும் இறுதியில் ஒன்று தலையும் அறிக. அதுவே அடியியைபு.

ஆசிரியர் இறுதி என்றது அளவடியினிறுதியை; என்பதை இவ்வுதாரணத்திலே பொழிப்பியைபு, கூழையியைபு முதலியவற்றின் உதாரணம் நன்கு புலப்படுத்திற்று. "மாதர் நகிலே வல்லே யியலே" என்புழி "இயலே" என்பதை முதற் சீராகக் கொள்ளாக்கால் "மாதர்" என்பது ஈறிலியாய் நின்று கூழையாவது எப்படி? கூழை என்பது குறு என்பதனடியாகப் பிறந்த பெயர். அசதியின் பெயராகிய கூளி என்பதும் இது போன்றது.

அடி, இணை, பொழிப்பு முதலிய எட்டும் காரணக் குறிகள். அடி—முதலினிற்பது. இணை—இரண்டாய் வருவது. பொழிப்பு—பொலிவுடையது. இறுதி என்பதற்கு முதற்சீரினிறுதி எனக்கொள்ளின்; குறியீடுந் தவறும்! அவர்கருத்துந் தவறும்! நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற் கூறிய உரையுந் தவறும்! உதாரணமுந் தவறும்! ஆதலின் இறுதி என்பதற்கு முதற் சீரினிறுதி என்பது கொள்ளற்க. கொள்ளாதொழியவே "முகிலே பொழிலே" என்பது கடையிணை எனக்கொள்ளாமையும் அமையும். கடையிணையியைபுக்கு வேண்டுமாயின்; "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்" (நாலடி) என்புழித் "தம்மை யிகழ்ந்தமை" என்பன போல வருபவைகளைக்கொள்க. இயைபுக்கு அளவடியினிறுதியே முதலாகக் கொள்ளுங்கால் "தம்மை யிகழ்ந்தமை" என்பது கடையிணையாய் வரற்குத் தடை யாது? இங்ஙனமே மற்றையுதாரணங்களையுங் காண்க.

## பொச்சாப்பு.

பொச்சாப்பு என்பதற்குச் சூடாமணி நிகண்டுகாரர் மறத்தல் என்பர். பிங்கலநிகண்டுகாரர் குற்றம் என்பர். தொல்காப்பியர் "பொச்சாப்பு என்பது அற்றப்படுதல்; அஃதாவது பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானும் ஒரு நிகழ்ச்சியான் இடையறவுபடுதல்," (மெய்ப்பாட். கஉ) "பொச்சாப்பு - கடைப்பிடியின்றி நெகிழ்ந்திருத்தல்" (மெய்ப்பா. உகூ.) என்பர். இப்பொருள்களுள்ளே மறவி என்னும் பொருளை விலக்கி மற்றையவற்றுள் ஏற்புடைய தொன்மை நன்னூலில் வரும் பொச்சாப்பு என்பதற்குப் பொருளா

கக்கொள்க. பரிமேலழகர் ஆண்டைக்கேற்ப மறவி என்னும் பொருள்கொண்டார். பொச்சாப்பு என்பது பலபொருளொருசொல்.

விம்மல்+ஆப்பு = விம்மாப்பு எனவும், ஏமம்+ஆப்பு = ஏமாப்பு எனவும் புணர்ந்து நின்றதுபோலப் பொச்சம்+ஆப்பு = பொச்சாப்பு எனப் புணர்தலாயிற்று; என அறுமிதிபெறுகின்றும். பொச்சம் - பொய்யுடையது. பொய் - உள்ளீடில்லது, பொந்துபோன்றிருப்பது. பிங்கலநூலாரும் பொய் என்பதனை மரப்பொந்தின் பெயர்களுள் ஒன்றுகவைப்பர். ஆப்பு - ஆதல். "சிதைவின்றி யெச்சத்திற்கேமாப்புடைத்து" (வள்) என்புழி ஆப்பு என்பது ஆதல் என்னும் பொருட்டாதலும் அறிக. பொச்சாப்பு = உள்ளீடிலதாதல்.

கவர்+பு = கப்பு எனவும், உவர்+பு = உப்பு எனவும் விகாரப்பட்டு முடிந்ததுபோலப் பொய்+சு என்பனவும் விகாரப்பட்டுப் பொச்சு என முடிந்து பின்னர் அம்முப்பெற்றுப் பொச்சம் என நிற்பதாயிற்று. கப்பு - பிளவு, கவருடையது. "கப்புடைநாவினுகருலகமும்." (இராமாயணம்) உப்பு - உவர்ப்புடையது.

யாம் இறை பயப்பனவாக இங்கே எழுதியவைகளைச், சங்கத (ஸம்ஸ்கிருத) மொழியிலுந், தமிழ்மொழியிலும் நுண்ணிய ஆராய்வுடைய பண்டிதராகிய செந்தமிழ்ப் பத்திரா திபாவர்களும் நோக்கித் தமது கருத்தினை உரைத்தல் நன்றாகும். அவருரைக்குங்கால் அபூர்வமான பல பொருள்கோள்களைக் குறிக்கோள் செய்தற்கு இடனுகும். அவர்கள் எழுதிய காவியம், ஐயவினுவின் விடையுரை, பரிசோதனத்தோடர் என்னும் இலேக்கியங்களிலே எத்தனையோ தொடர்களின் மெய்ப்பொருள்கள் காணப்பட்டு விபரீதங்களை நீக்கின. பரிசோதனத்தொடர் விடயத்திலே அவர்கள்போல யாமும் பிரீதியுடையோம். அது முன்னர்ச் செந்தமிழிலே யாம் எழுதிய "பிங்கலநிகண்டு" "வாதவூரர்புராணம்" முதலிய இலேக்கியங்களால் விளங்கும்.

சுன்னுகம் }
பரிதாபிஞூ }
தை மீ }

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

ஸ்ரீ:

# இயைபுத்தொடை முடிவுரை

சென்ற கார்த்திகை மாதத்துச் செந்தமிழில் தச்சநல்லூர் "நச்சுவார்க்கினியன்" என்பவரால் வெளியிடப்பட்ட ஐயவினுத் தொடருக்குப் பரங்கிப்பேட்டை கவர்ன்மெண்டு பாடசாலை யுபாத்தியாயர் ஸ்ரீமான். அ. முத்தைய முதலியாரெழுதிய "ஐயவினுத்தொடர்விடை" என்னும் "பொருளுரை" (விஷயப்பிரவசனம்) ஒன்றும், பின்னும் அத்தொடருக்கே சுன்னுகம் வித்வான், ஸ்ரீமான், அ, குமாரசுவாமிப் பிள்ளையவர்களெழுதிய "ஐயவினுவுக்கு விடை" என்னும் "பொருளுரை" ஒன்றும் வந்துள்ளன.

இவ்விரண்டும் ஒரேவிடயம் பற்றிய "பொருளுரை" யாயிருப்பினும், ஒருவரையொருவர் விரவாத விருவர்கருத்து மொற்றுமை பெற்றிருப்பதுகண்டு, ஐயுற்ருர் நன்கு தெளிதற்குபகாரமாகு மென்பதுகருதியும், அரியவிடயங்களைப் பரியாலோசித்தெழுதும் பண்டிதர்களுழைப்பு வீணுகாமற் பயன்படச்செய்ய விரும்பியும் இப்பகுதியுள் அவ்விரண்டு முடன்சேர்க்கப்பட்டுள்ளன.

அவ்விரண்டு "பொருளுரை" களும், வினவப்பட்ட பொருளின் ஐயமொழியுமாறு விடைகள் பலவும் விரித்தளித்து நின்றன.

அவற்றுள், ஸ்ரீமான், பிள்ளையவர்களெழுதிய "பொருளுரை" யின் முடிவில் "பத்திராதிபர் நோக்கித் தமது கருத்தினையுரைத்தல் நன்ருகும்" என்றெழுதிய வாக்கியத்தின் முன்னும், பின்னும் யான் கொள்ளப்பெருத சில அடையும், தொடையும் அளிக்கப்பட்டுள்ளன. அவை, யெனக் கேலாதனவாயினும், பெரியோர்வாக்காதலின், "நிறைமொழி" யாகுக.

"கற்றமற்ருேர் கண்டு களிக்குமள வென்னுரைகள், குற்றமற்ற வென்று குறிக்கொள்ளே" னுகி, யானெழுதிய லேக்கியங்களைப்பற்றி, அவர்களெழுதிய வாக்கியங்களே யெனது ஐயுறவினை நீக்கிநின்றன. இது நிற்க.

ஐபவினுத் தொடரில், இயைபுத் தொடைபற்றியும், பொச்சாப்புப்பற்றியும் வினவியோ ரையுற வொழியுமாறு பிள்ளையவர்களாற் செவ்வனம் விடையளிக்கப்பட்டிருப்பவும், "பத்திராதிபர் நோக்கித் தமது கருத்தினையுரைத்தல் நன்ருகு" மென்ற விருப்பத்தை வீணுக்காது அவர்கள் சொல்லியவற்றுள்ளே சில சொல்லுகின்றேன்.

இயைபுத்தொடை விடயத்தில்,ஐபவினுத்தொடரின் ரூற்பரியம், மற்றைத்தொடையும் தொடைவிகற்பங்களும் போல இயைபுத்தொடையும், அதன் விகற்பங்களும் முதற்சீர்தொட்டு அவ்வச்சீரின் இறுதிபற்றி வருதல் கூடாதா? வென்பதே.

அங்ஙனம் வருதல்கூடும், கூடாது என்னுமிரண்டனுளொன்றை அத்தொடையினிலக்கண முரைக்கும் சூத்திரப்பொருள் கண்டு துணிய வேண்டும்.

அச்சூத்திரம் யாதெனில் "எழுவாயெழுத்தொன்றின்" என்னும் காரிகையினுள்ளது. அக்காரிகை வருமாறு:—

(க) எழுவாயெழுத்தொன்றின்மோனை;

(உ) இறுதியியைபு;

(ஈ) இரண்டாம், வழுவாவெழுத்தொன்றின் (மாதே) எதுகை;

(ச) மறுதலைத்த, மொழியான்வரினுமுரண்;

(ரு) அடிதோறுமுதன்மொழிக்கண், அழியாதளபெடுத்தொன்றுவதாகுமளபெடை (யே). என்பதாம்.

இக்காரிகையில் இருபிறைக்கோட்டுள்,தொகைகொடுத்துக்காட்டப்பட்டன ஐந்தும் ஐந்துசூத்திரங்களாம். நூல்களுள் ஒருசெய்யுளிற் பல சூத்திரங்களும் வரப்பெறு மென்பதனை, "கருவிதொகுதி கமசிறைத்தியலும்" என்னும் உரிச்சொல்லியற் செய்யுளை "இரண்டு சூத்திரம்" எனவும், "கவர்வுவிருப்பாகும் சேரேதிரட்சி, வியலென் கிளவி யகலப்பொருட்டே" என்னும் செய்யுளை "மூன்று சூத்திரம்" எனவும் சேனவரையர் கூறியவாற்ருனு முணர்க.

சூத்திரங்களுக்குப் பொருளுரைக்குமிடத்து, அதற்குவேண்டும் சொற்களில்லையாயின் முன்னும் பின்னுமுள்ள சூத்திரங்களிற் பொருள் பயந்து தொடர்ந்து வந்தியையுஞ் சொற்களை யதிகாரத்தாற் கொணர்ந்து கூட்டி யொருதொடராக்கிப் பொருளுரைக்கவேண்டும்.

முற்சூத்திரங்களினின்றும் வேண்டுஞ் சொற்களைப் பிற்சூத்திரங்களிற் கொண்டுகூட்டிமுடித்தலை "உத்கர்ஷாநுவர்த்தி" என்றும், பிற்சூத்திரங்களினின்றும் முற்சூத்திரங்களுக்கு வேண்டும் சொற்களைக் கொண்டுகூட்டி முடித்தலை "அபகர்ஷாநுவர்த்தி" என்றும் கூறுவர் வடநூலார். இவ்விரண்டினையும் அதிகாரத்துளடக்குவர் தமிழ்நூலார். உபதேசத்தானும் ஊகத்தானும் அதிகாரச்சொற்களறியத்தக்கன. ஊகம் - ஞாபகவுணர்வு. இக்காரிகையும், அடுத்தகாரிகையும் தொடையிலக்கணங்களையே யுணர்த்துவன. "இருசீர்மிசை" யென்னும் காரிகையே தொடை விகற்ப விலக்கண முணர்த்துவதாம்.

இங்கெடுத்துக்கொண்ட காரிகையிலுள்ள முதற் சூத்திரம் "எழுவாயெழுத்தொன்றின் மோனை." என்பதாம். இதற்கு இக்காரிகையிலுள்ள இறுதிச் சூத்திரமாகிய "அடிதோறு முதன் மொழிக் கணழியாதள பெடுத்தொன்றுவதாகுமள பெடை" என்பதினின்றும் "அடிதோறும்" என்னும் சொல் முற்சூத்திரங்கடோறும் சென்றியைந்து பொருள்பயக்குமா றதிகரிக்கப்படும். படவே, "அடிதோறும் எழுவா யெழுத்தொன்றின் மோனை" என வொருதொடராக்கிப் பொருளுரைக்கு மாறுகாண்க.

இனி, "இறுதியியைபு." என்பதே இரண்டாவது சூத்திரம். இதனால் இயைபுத்தொடை யிலக்கண முரைக்கப்படும். இதன்பொருள் என்னவென்பதே இங்குஆராயத்தக்கது. இச்சூத்திரத்துள் "இறுதி, இயைபு" என இரண்டுசொல்லே யுள்ளன. இவற்றுள் இறுதி யென்னும் சொற்பொருள் நிலம், நீர், தீ, கால், என்பனபோல்வதொரு தனிப்பொருளாகாது யாதேனுமொன்றனைப் பற்றிநிற்கும் சினைப் பொருளா யிருத்தலால் அதன்பற்றுக்கோடாகிய பொருட்பெயரின்றி வழங்கிப் பொருள்தோன்றுமைபால், அப்பெயரின்றி வழங்குதல் கூடாது.

அப்பெயர் யாதெனில்? இச்செய்யுளினிறுதிச் சூத்திரத்தி னின்று முதற் சூத்திரங்காறும் அதிகரிக்கப்படும் "அடிதோறும்" என்பதே. அதனையதிகரித்துக்கூட்டி இறுதி யென்பதற்கு அடை யாக்கி விசேடிக்கவேண்டும்; விசேடிக்கவே, "அடிதோறுமிறுதி" எனவொருதொடராய், அடிகளினிறுதியாகிய சினையெனப் பொருள் படும். அச்சினையும் எவனென வுற்றுநோக்கின் எழுத்து, சொல் என்னு மிரண்டுமெனப் புலப்படும். அவற்றுள் இங்குக் கொள்ளப் படுவதியாதெனில்? அடியிறுதி யெழுத்தென்றேனும், அடியிறுதிச் சொல்லென்றேனும் விதந்தோதாமையால் அவ்விரண்டுமே அடியிறு தியாகக் கொள்ளப்படும் என்க. அடிக்கு அசை, சீர்களு முறுப்பாத லாலவற்றையுங் கொள்ளல் வேண்டு மன்றோ வெனின்? இச்சூத்திர முள்ள செய்யுளி லெடுத்தாளப்பட்டன எழுத்தும், சொல்லுமேயாத லால் அவைகிட்டியனவாம்; ஏனை அசையும், சீரும் இங்கு எடுத்தா ளப்படாமையால் அவைகிட்டாதனவாம். "கிட்டியது, கிட்டாததென் னுமிரண்டனுள் கிட்டியதே கொள்ளத்தகும்" என்னும் வழக்குப் பற்றி இங்கு அசை சீர் முதலிய வுறுப்பைக் கொள்ளாது எழுத்து, சொல் என்னு முறுப்பையே கொள்ளல்வேண்டும். இங்ஙனங்கொள் ளுதலே முறையென்பதை 'உபஸ்திதா நுபஸ்திதயோருபஸ்திதஸ்யைவ க்ருஹணம்' எனவும் "ஸஹசரிதாஸஹசரிதயோஸ்ஸஹசரிதஸ்யைவ க்ருஹணம்" எனவும் வழங்கும் வடநூல் வழக்கானும் உணர்க.

இங்ஙனங் கூறியவாற்றால் இச்சூத்திரத்துள்ள "இறுதி" என் னும் சொல்லுக்கு அடிகளினிறுதியுறுப்பாகிய எழுத்து, சொல் என்னு மிரண்டுமே பொருளாகுமென வுணர்க.

இனி இயை பென்னுஞ் சொல்லை ஆராயின், சொல்லின் முடிவி னப்பொருண்முடித்த லென்னுந் தந்திரவுத்தி கொண்டு, இயை தலுடையது இயைபு என்னும் பொருள் தோன்ற வைத்தமையால் இயை பிலக்கணத்துக்கு வேண்டும் இயைதல் என்னும் பொருள் தானே பெறப்படும். ஆதலால், ஒன்றின் என்பது அதிகரிக்கவேண் டாதாயிற்று. இயைதல், ஒன்றல், ஒத்தல் என்பன ஒருபொருட் சொற்கள். மேலைச் செய்யுளினின்றும் "தொடை நாமம் பெறும்" என்னும் தொடரை அதிகரித்து இறுதியிற் கூட்டி, அடிதோறும்

இறுதி யெழுத்தேனும் சொல்லேனுமியைவது இயைபுத்தொடை யென்னும் பெயர் பெறும்” என்பதே சூத்திரப்பொருளாம்.

இனி இங்ஙனமன்றி “எழுவாயெழுத்தொன்றின்மோனை” என் பதினின்றும் எழுத்தொன்றின் என்பதை அதிகரித்து ‘இறுதி’யென் பதன் பின்கூட்டி, அடிதோறும் இறுதி யெழுத்தியையின் இயைபு. என எளிதிற் பொருள்கொள்ளிற்படுமிழுக்கென்னையெனின்? எழுத் தொன்றின் எனவே, ஒன்றுதற்கு எழுத்து அடையாய் நிற்றலால் அது பிறிதினியைபு நீக்கி நிற்கும். நீக்கவே, இறுதிமொழியொன் றல் இலக்கணமின்றாய்முடியும்; முடியவே அவ்வியாத்தி என்னும் குற்றமாம். அடைமொழி பிறிதினியைபுநீக்கத் தகுதியில்லாத விடத் தே தன்னோ டியைபின்மைநீக்கிநிற்ப தல்லது, தகுதியுள்ளவிட த்தும் அதனை நீக்காதிராது. ஆதலால் இறுதிச்சொல்லையும் நிமித்த மாகக்கொள்ளும் ஆசிரியர்கருத்தொடு மாறுபடுமென்பதைப் பின் வரும் ஞாபகத்தாலுமுணர்க.

“எழுத்தொன்றின் என்பது” இயைபுத்தொடைச் சூத்திரத் துக்கு அதிகரிக்கப்படாதென்பதை யுணர்த்துதற்கே அடுத்த எது கைத்தொடைச் சூத்திரத்துள் எழுத்தொன்றின் என ஆசிரியர் மறித் து மெடுத்தோதுவாராயினர். அதிகாரமுளதேல் வேண்டாது அதனை மறித்து மெடுத்தோதமாட்டார்; வேண்டாதிருப்பவும், மறித்து மெ டுத்தோதியதே இயைபுத்தொடைச் சூத்திரத்துக்கு எழுத்தொன் றின் என்பதன் அதிகாரமில்லையென்பதற்கு ஞாபகமாமெனவுணர்க.

இனி “அடிதோறும் முதன்மொழிக்கண்” என்னும் இறுதிச் சூத்திரத்திலுள்ள மொழியென்பதை அதிகரித்துரைப்பினும் முற் கூறிய குற்றந்தங்கும்; ஆதலால் அதற்கும் இதில் அதிகாரமில்லையென விலக்குக.

மோனை முதலிய வேனைத் தொடைகளை முன்னும் பின்னும் எழுவாயுறுப்புப்பற்றியே விதித்து, அதற்கு மறுதலையாகிய இறுதி யுறுப்புப்பற்றி இயைபுத்தொடை விதிக்கப்பட்டமையால் அதன்றொ டைவிகற்பங்களும் ஏனைத் தொடைவிகற்பங்களி னிலைக்களத்தின் மறுதலை நிலைக்களமே பெற்று விபரீதப்பட்டிருக்குமென்பது சொல்

லாமலே பெறப்படும். இங்கு விபரீதமாவது இறுதிச்சீர் முதலும் முதற்சீர் இறுதியுமாகவைத் தெண்ணப்படுதல்.

இதுவன்றியும், இருசீர்மிசையென்னும் காரிகையுரையுள், "சீர் முழுது மொன்றின் முற்றுமென்னுது, வருசீரென்று சிறப்பித்தவத ளுல் இணைமோனை முதலிய முப்பத்தைந்து தொடைவிகற்பமும் அளவடிக்கண்ணே வழங்கப்படுமென்பதூஉம், இணையியைபு முதலா கிய ஏழுவிகற்பமும் இறுதிச்சீரே முதற்சீராகக்கொண்டு வழங்கப்படும் என்பதூஉம் அறிவித்தற்கெனக் கொள்க." என்றுரைத்திருப்பதும் இங்கு நோக்கத்தக்கது.

அடியியைபு என்பதற்கு முதற்கண்வருமியைபென்பது பொரு ளன்று; அடிகளைப் பற்றுக்கோடாகப் பற்றிவரு மியைபு என்பதே பொருளாகும். அடிமோனை, அடியெதுகை முதலிய வேனைத்தொ டைகளுக்கு மிவ்வாறே பொருளுரைக்கவேண்டும்; அவையும் அடி தோறும் என்று விசேடிக்கப்பட்ட இலக்கணம்பெற்று அடிகளைப் பற்றுக்கோடாகப் பற்றியிருப்பது கண்டுகொள்க. இன்னும், தொடை விகற்ப வகைக்குத் தொடைவகை பிரதானமாதலால் அப்பொருள் கருதி அடியென்னும் அடை கொடுக்கப்பட்டதெனினும் அமையும். பிரதானம் - முதன்மையுடையது. இதனுல் இயைபுத்தொடையுட் பிரதானம் யாது? அது அடியியைபு. என அடியியைபுக்குப் பொரு ளுரைக்கப்படும். ஏனைத் தொடைகளுக்கும் இப்பொருள் பொருந் தும். இவ்வாறு பொருளுரைக்கவே, அடியியைபு ஏனைத் தொ டைபோல முதற்கண்வருதல் கூடாதா? வென்னும் ஐயுறவும் தானே அழியும்.

இன்னும், முரண்டொடைச் சூத்திரத்துக்கு இறுதிச் சூத்தி ரத்தினின்றும் முதல் என்பதையும் அதிகரித்து, "அடிதோறும் முதல் மறுதலைத்த மொழியான்வரினு முரண்" எனக்கூட்டிப்பொருளு ரைத்தலால் முரண்டொடைக்கு முதன்மொழியே நிலைக்களமென் பது பெறப்பட்டது; அவ்வாறே யியைபுத்தொடைச் சூத்திரத்துக் கும் முதற்கண் என்பதனை அதிகரித்துக் கூட்டியுரைக்கிற் படுமிழுக் கென்னையெனின்? அதனுல் முதன்மொழியிறுதியே நிமித்தமாகு மல்லது முதற்சீரினிறுதி நிமித்தமாகமாட்டாது. ஆகவே ஓரெழுத்

தொருமொழி முதன்மொழியானவிடத்து இலக்கணத்துக்கு மோனைத்தொடையில் அதிவியாத்தியும், ஏனையிடத்து எதுகைத்தொடையில் அதிவியாத்தியும் வருமாதலால் அது பொருந்தாது. அன்றியும் அவ்வா றதிகரிக்கக் கூடாதென்பதற்கு ஞாபகமாகவே முதற்கண் என்பதை அதிகரிக்க வேண்டாத எதுகைத்தொடைச் சூத்திரத்துக்கு முன்வைத்ததெனவுணர்க.

இதன் றூற்பரிய மென்னவெனில், எழுத்தே நிமித்தமாகும் மோனையெதுகை யிலக்கணத்துக்கும், மொழியே நிமித்தமாகும் முரணிலக்கணத்துக்கும் இடையே சிங்கநோக்காகவன்றே? எழுத்தும் மொழியும் நிமித்தமாகும் இயைபுத்தொடையிலக்கண மிருக்கற்பாலது; அதனை அம்முறை வைப்பின், அடுத்த முரணிலக்கணத்துக்கு அதிகரிக்கப்பட்ட முதற்கணென்பது இதற்கும் அதிகரிக்கக்கூடும்; அதனை அதிகரித்துக் கூட்டாதொழிக்கவேண்டும்; என்பதையுணர்த்துதற்கே அவ்வதிகாரம் வேண்டாத எதுகை மோனைத் தொடையிலக்கணங்களுக்கிடையே இயைபிலக்கணத்தை முறைபிறழவைத்து மறைத்தனர் என்பதாம்.

ஆசிரியர் ஏனைத்தொடைகள்போல இயைபுத்தொடைக்கும் அடிமுதலைப்பற்றி முதற்சீரை நிலைக்களமாக எளிதிற்கொண்டு, அடியிறுதியைக் கடையியைபுக்கு நிலைக்களமாக்காது, விபரீதமாக அடியிறுதியே அடியியைபுக்கு நிலைக்களமாமாறு வலிந்து சூத்திரஞ்செய்யக் காரணமென்னவெனில்? தொல்லாசிரியர் துணிபுபற்றியதென்க.

தொல்லாசிரியர்தமக்குமே அத்துணிவுபிறக்கக் காரணமென்னவெனில்? இது நன்கு வினவுதலாம். தொடை, தொடைவிகற்பமென்னு மிருவகையுள், தொடை முதன்மையுள்ளதாயும், தொடைவிகற்பம் முதன்மையில்லதாயுமிருத்தலால் அவற்றின் வேறுபாடு தோன்றத் தனித்தனி பொதுவிலக்கணமுள்ளதாகவேண்டும். அவ்விலக்கணம் கூறுங்கால், அடியைநிமித்தமாகப் பற்றிவருவது தொடையென்றும், சீரை நிமித்தமாகப்பற்றிவருவது தொடைவிகற்பமென்றும் கூறி, இருவேறு வகையாகப் பகுக்கப்படும். படவே, மோனை எதுகை முரண் அளபெடை என்னும் நான்குதொடைக்கும் சீர்

நிமித்தமாதலின்று; அடிமுதலே நிமித்தமாகின்றது. அவ்வாறு இயைபுத்தொடைக்கும் அடிமுதலே நிமித்தமாகக்கொள்ளின் மோனைத் தொடையாய் முடியும். மோனையின் வேறுக்குதற்கு முதற் சீரினிறுதியை நிமித்தமாகக் கொள்ளவேண்டும். கொள்ளவே சீர்பற்றி வரும் தொடைவிகற்பத்தின் பாற்படுவதல்லது, சீர்பற்றாது அடிபற்றியே வரும் தொடைவகைப்பாற்படுவதின்றாம். ஆதலால் அடிமுதற் சீரையொழித்து, சீர் என்று கருதல்வேண்டாத அடியிறுதியே அடியியைபுத்தொடைக்கேற்ற நிலைக்களமாகு மென்பது கருதியே தொல்லாசிரியர் இலக்கணங்கூறத் துணிந்தனரென்க. இதனானே அடிகளின் முதற்சீரினிறுதிபற்றிப் பிறக்கும் இயைபினைக் கடையியைபெனத் தொடைவிகற்பத்தின்பாற் படுத்தமையுங் கண்டுகொள்க.

அடியிறுதியும் சீரிறுதியன்றோவெனின்? அது சீரிறுதியுமாயினுமாக; அடியிறுதியென்னத் தடையில்லை. அடியிறுதியாயிருத்தலே இங்கு இலக்கணத்துக்கு நிமித்தம். அது சீரிறுதியின்றாயொழியினுமொழிக; இலக்கணத்துக் கிழுக்கின்று. ஆதலால், சீரென்பது கருதாதுவைத்தே, அடிதொறு முதலெழுத்தொன்றுவது மோனை; அடிதொறு மிரண்டாமெழுத்தொன்றுவ தெதுகை; அடிதொறு முதன்மொழி மறுதலைப்படுவது முரண்; அடிதொறு முதன்மொழியளபெடுப்ப தளபெடை. என மற்றைத்தொடைகளுக்கு இலக்கண முரைப்பதுபோல, அடிதொறுமிறுதியெழுத்தேனு மொழியேனு மியைவது இயைபு; என இயைபினிலக்கணமுமுரைத்தற் கியைபு மென்பது கருதியே தொல்லாசிரியர் அடியிறுதியையே இயைபுத் தொடைக்கு நிலைக்களமாகக் கொண்டனர் என்க.

இங்ஙனம் கொண்டமையால், ஏனைத்தொடைவிகற்பங்களேபோல இயைபுத்தொடை விகற்பமும், தம்முள் தலைமைவாய்ந்த இயைபுத் தொடை பிறக்குமிடமாகிய அடியிறுதிச்சீரை முதலாகவும், அதன் மறுமுனையை யிறுதியாகவும் கொண்டே அடைவேதோன்று மென்பதாம்.

ஆதலால் இயைபுத் தொடைக்கு அடிமுதற்சீர் நிலைக்களமாகாதெனவும், இறுதிச்சீரே நிலைக்களமாமெனவும், மற்றைத்தொடை

யின் விபரீதநடை யுடைமையால் "முகிலே பொழிலே" என்பது இணையியைபுக்குப் பொருந்தியவுதாரணமெனவும், அது கடையிணை யியைபாகாதெனவும், "வில்லேநுதலே வேற்கண் கயலே" என்பதே பாடமாதலால் அது இணையியைபுக்கிலக்கியமன்றெனவும், மேற்கதுவா யியைபாமெனவும். "மொய்த்துடன்றவழும் முகிலே பொழிலே" என்பதே பிணையியைபாமெனவும், கடையிணையியைபுக்கு இலக்கியம் பிள்ளையவர்கள்காட்டிய "தம்மை யிகழ்ந்தமை" என்பது பொருந்து மெனவும், "தொய்யிலும் பொன்னே சாயலும் மயிலே" என்பதைப் பின்னியைபுக் கிலக்கியமாகக் காட்டுதல் கூடுமெனவும், கொள்ளக் குறையில்லை.

பிள்ளையவர்கள் இயைபுத்தொடைக்கும், அதன் விகற்பவகைக் கும் இறுதியை முதலாகவைத்து ஏனைத்தொடைகளினுந் தொடை விகற்பங்களினும் விபரீதமாக வுதாரணங்களை விளங்கக் காட்டியது மிகத் தெளிவுடையது. யாப்பருங்கல முதலிய நூல்களின்றுற்பரிய மும் அன்னதே.

கடையியைபு முதலியவற்றிற்குப் பின்வரும் யாப்பருங்கல வுதா ரணங்களும் காண்க.

"மாமலர்நெடுங்கண்மானேக்கினவே
பொன்மலர்வேங்கைப்புணர்முலைச்சுணங்கே
நறுமலர்க்கூந்தலுமறலே
செறுமலர்க்கமலமலைத்ததுமுகமே"

"இது கடையியைபு" எனவும்

"புயலும்போலும்பூங்குழற்பிழம்பே (கடையிணை இயைபு)
தொய்யிலும்பொன்னேசாயலுமயிலே (பின்னியைபு)
சிலையேநுதலுமுறுவலுமணியே (இடைப்புணரியைபு)

குயிலும்பாலுமாம்பலுமொழியே (கடைக்கூழையியைப்பு)
அரிமதர் நெடுங்கணுமயிலே (அடியியைப்பு)
வரிவளைத்தோளிமுகமுமோர்மதியே'' (இதுவுமது)

"இதினுள் கடையிணையியைபு முதலாகிய நான்கும் வந்தவாறுகண்டு கொள்க" எனவும், இவை யாப்பருங்கல விருத்தியுட் கண்டன. இவற்றையும் பிள்ளையவர்கள் காட்டிய உதாரணங்களுடன்கூட்டி, இயைபுத்தொடை விகற்பங்கள் எழும், ஐந்தும் எஞ்சாதுவந்தவாறு கண்டுகொள்க.

இனி, மறவி பொச்சாப்பு என்னுமிரண்டற்கும் மறத்தல் பொருளாம் என்பது எல்லோர்க்கு மொப்பமுடிந்ததேயாதலாற் பரிமேலழகருரை புரைபடுவதன்று. நன்னூலுட் கூறும் பொச்சாப்புக்கே வேறுபொருள் வேண்டும். அது உயிர்க்குணமாகவும் வேண்டும். பிங்கலந்தை சொல்லும் "குற்றம்" என்பதைக் கொள்ளின், அஃதுயிரைப் பற்றி நிற்பதொரு தனிக்குணமாகாது அழுக்காறு, மறவி வெகுளி முதலிய விழிகுணத்துளொன்றும். அவை . யெடுத்தோதப்பட்டமையால் அப்பொருளை யொழித்து, "தொல்" மெய்ப்பா, 26 சொல்லும் கடைப்பிடியின்றி நெகிழ்ந்திருத்தல் (உபேக்ஷை) என்னும் உயிர்க்குணமே பொச்சாப்பென்னும் சொல்லுக்குப் பொருளாகக்கொண்டு கூறினர் நன்னூலார் என்பது பொருந்தும். ஆதலாற் பரிமேலழகருரைக்கும், பவணந்தி முனிவருரைக்கும் விரோதமில்லையென வுணர்க.

திரு. நாராயணையங்கார்,

பத்திராதிபர்.



உ

# தமிழ்மொழியும் சிவநெறியும்.

13-10-12 மாலை $4\frac{1}{2}$ மணிமுதல் $6\frac{1}{2}$ மணிவரை.



திருவநந்தபுரம் புத்தன் சந்தையிலுள்ள சைவப்பிரகாசசபைக் கட்டிடத்தில் திருவாங்கூர் பென்ஷன் ஹைக்கோர்ட்டு ஜட்ஜி திவான் பகதூர் கனம் A. கோவிந்தப்பிள்ளை யவர்கள் B. A. B. L. F. M. U. அக்கிராசனத்தின் கீழ்ச் சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜத்தின் கௌரவப்பிரசங்கியாகிய மறைத்திருவன். சுவாமி. விருதை. சிவஞான யோகிகள் "தமிழ்மொழியும் சிவநெறியும்" என்ற விஷயமாய் ஒரு அரிய பிரசங்கமியற்றினர். அதன் சாரம்.

## (தமிழ்மறை வரலாறு.)

ஆங்கில நூலாசிரியரிற் பெரும்பாலார் இந்துமகாசமுத்திரத்தினுள்முழுகியிருக்கும் பூமியில் (Submerged land = Lemuria) தான் முதற்கண் மக்கட்பகுப்பார் தோன்றினரென்று கூறுகின்றனர். அதற்கேற்ப மக்கள் முதற்கண் ஒலிக்கக்கூடிய இயல் ஒலிகளே தமிழ் மொழியிலிருக்கின்றன. முன்னர் வடக்கட்குமரியாற்றுக்கும் தெற்கெல்லையாகிய பஃறுளியாற்றுக்கும் இடையே கிழமேல் நீண்டுகிடந்த 7000மைற் பரப்புள்ள நிலம் தமிழகம் என்னப்பட்டிருந்தது. அதில் தென்பகுதியில் தென்மதுரையிருந்தது. அதில் தலைச்சங்கம் கி. மு. 9990 முதல் 5550 வரையும், இடைச்சங்கம் கி. மு. 5550 முதல் 1850 வரையும், கடைச்சங்கம் கி. மு. 1850 முதல் கி. பி. 10 வரையும் இருந்ததாய்க்குறிக்கப்படுகின்றன. கி. பி. 90வரை இருந்ததாய்க் குறிப்பாருமுளர்.

மக்கள் தோன்றிய காலமுதற்றோன்றி வளர்ந்து நிலைபெற்றிருந்த தமிழ் மிகச்சீர்தேற்றமடைந்த தலைச்சங்க காலத்தில் அகத்தியர் தம்பெயரால் ஒரு பேரிலக்கண நூலியற்றினர். அக்கருத்தைக் கம்பராமாயணம் அகத்தியப்படலம் "என்றுமுள தென்றமிழியம்பி

யிசை கொண்டான் ” என்றகவி விளக்குகின்றது. ஆகவே இற்றைக்கு 11900 ஆண்டுகட்குமுன்னரே தமிழ் மிகச் சிர்தேற்றமடைந்திருந்ததாய்ப் புலப்படுகின்றது. டாக்டர் ஆப்பர்ட் (Dr. Oppert) புரொபசர், இ. எச். சேஸ் (Prof, E. H. Sayce) முதலிய ஆங்கில சரித்திராசிரியர் சின்ன ஆசியாவில் (Asia Minor) எருதூர் (Ur of Erudu) ஆட்சி கி. மு. 8000 ஆண்டுகட்கு நெடுநாள் முன்னரிருந்ததாயும், பின்னர் சாலடியூர் அல்லது சாலடியரூர் (Ur of Chaladea) ஆட்சி இருந்ததாயும், அதன்பின் அங்காடியர் (Accadians) பாபிலோனியர் (Babylonians) ஆட்சிகள் இருந்ததாயும் கூறுகின்றனர். எருதூர் சாலடியூர் என்ற பெயர்கள் தமிழாயிருத்தலானும், சாலடியர் அங்காடியர் மொழிகளில் தமிழ்ச்சொற்கள் மிகக்கலந்திருப்பதானும், இன்னும் பற்பல ஆதாரவுகளாலும் 10000 ஆண்டுகட்குமுன்னரே தமிழ்மொழி மெசபட்டோமியா என்ற சின்ன ஆசியாவிலும் பரவியிருந்ததாய் உறுதிப்படுகின்றது.

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரிகள் தமிழ்மொழியின் வரலாற்றில் 8000 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ்க்கல்வெட்டைப்பற்றியெழுதியிருக்கின்றனர்.

வடமொழி வான்மீகராமாயணத்தில் சிதையைப்பார்க்க அனுப்பப்பட்ட அநுமாருக்குத் தெற்கிலுள்ள பாண்டியன் ஆண்டிருந்த கவாடபுரத்தைப்பற்றிக் கூறப்பட்டிருத்தலானும், அக்காலத்திலிருந்த ஜமதக்கினி முனிவருக்குப் பரசுராமர், திரணதூமாக்கினி என் றிருமக்களிருந்தனர் என்றும், அவருள் திரணதூமாக்கினி என்ற தொல்காப்பியர் தொல்காப்பியமென்ற இலக்கண நூலியற்றினர் என்றும் பல சரித்திரங்கள் கூறலானும், இடைச்சங்கத்தின் பிற்பகுதியில் தொல்காப்பியர் இருந்ததாய்ப் புலப்படுகின்றது. ஜமதக்கினிமுனிவர்காலத்தை வேதகாலம் (Vedic Era) என்ற ஆங்கிலநூல் இற்றைக்கு 3558 ஆண்டு என்றும் வேறுசிலர் 4000 என்றும் கூறுகின்றனர்.

வைவசுவதமனு காலத்தில் ஒரு பிரளயமுண்டானதாயும், அவர் இட்டதெய்வம் மீன்வடிவாய் வந்து கூறியபடி கப்பலில் ஏறியிருந்து நீர்ப்பெருக்குக் குறைந்தபின் பிறங்கி வைகையாற்றின் கரையில் புது

நகர் இயற்றி ஆண்டதாயும், அவன் திராவிட அரசனென்றும், சுக்ல யஜுர்வேதத்தில் சதபதப்பிராமணம் அதன் உபப்பிரம்மணங்களாகிய பாரதம் பாகவதம் லிங்கபுராணம் முதலியவற்றால் வெளிப்படுகின்றது. அது இடைச்சங்கமிருந்த கவாடபுரம் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த மீனக் கொடியுடைய முடத்திருமாறன் கடைச்சங்கமிருந்த மதுரை கண்ட சரித்திரமென்று கருதத்தக்கதாகின்றது. தலைச்சங்க இடைச்சங்கச் செய்திகள் இறையனார் அகப்பொருளுரை சிலப்பதிகாரவுரைகளிற் கூறப்பட்டுள்ளன.

மேற்கூறிப் போந்தவற்றால் 12000 ஆண்டுகளாய்த் தமிழ்நாடு சீர்தேற்றமடைந்திருந்ததாகத் தீர்மானப்படுகிறது.

தலைச்சங்கத்தில் மக்கட்குறுதிபயக்கும் நூல்களைத் திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும் குன்றமெறிந்த முருகவேளும் அவர் மாணுக்கராகிய அகத்தியனார் கௌதமனார் வான்மீகனார் மார்க்கண்டனார் முதலிய சங்கப்புலவர்களும் இயற்றியருளினர். அவை இருக்கு எசுர் சாமம்போன்ற தலையாய வேதத்துக்கள் எனத் தொல்காப்பியம் "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்ற சூத்திர உரையில் நச்சினார்க்கினியர் கூறியுள்ளார். முதலூழியில் தலைச்சங்கம் இருந்த தென்மதுரை கடல்கொள்ளப் பட்டமையால் இப்பொழுது முதற் சங்க நூல்களிற் சில சூத்திரங்களும் பாக்களும் ஆங்காங்கு உரைகளிற் காணப்படுகின்றன. இடைச்சங்க நூல்களும் பாக்களும் சிற்சில இன்னும் காணப்படுகின்றன. முற்காலத்து ஐந்திணை மாக்களும் அவ்வத்திணைக்குரிய புத்தேள்களின் வணக்கமும் அனைவர்க்கும் பொதுவாம் சிவவணக்கமும் இருந்து வந்தன. முற்காலத் திருவிடருள் சாதிவேற்றுமை இருக்கவில்லை. ஆனால் ஒப்பு அரும்பொருள் வினை யாழோர்கூட்டம் என மூன்றுவேட்டல்க ளிருந்தன.

1. ஒப்பு=பெண்கோடற் குலத்தான் வேண்டக் கொடுத்தல்.

2. அரும்பொருள்வினை=தலைவன் வல்லமை தெரிந்து எல்லவரு மறியத் தலைவி விரும்பி மாலையிடல். (இதுவே சுவயம் வரம்)

3. யாழோர் கூட்டம்=தலைவன் தலைவி இருவர் ஒத்தார் தாமே கூடுங் கூட்டம். (இதுவே காந்தர்வமணம்)

பிராமணாதி நான்கு வருணங்களும் ஆரிட முதலிய மணங்களும் ஆரியர் இந்நாட்டிற்கு வந்தபின் பவராற் கற்பிக்கப்பட்டன. அக்கருத்துக்களைக் கபிலரகவல் "நாற்குலச் சாதிஇந் நாட்டினீர் நாட்டினீர்" தொல்காப்பியம் "பொய்யும் பிசியும் புகுந்த பின்னை, யையர் வகுத்தனர் ஆரிட மென்ப" என்ற மேற்கோள்க ளுணர்த்தி நிற்கின்றன. வடமொழி ஆகமங்களில் சைவமறையோர்க்கு முன்னோராகிய அகத்தியர் கௌதமர் கௌசிகர் காசிபர் பரத்துவாசர் ஐவர்க்கும் சிவனார் சதாசிவமூர்த்தமாய் இருந்து சிவாகமங்களை உரைத்தனர். அவர் உலகுக் குரைத்தனர் என்று கூறப்படுவதையும், முதற் சங்கத்தில் சிவன் அகத்தியர் முதலியர்பால் தமிழ்த் தலையாயவோத்துக்கள் தோன்றினவென்பதையும் திருமந்திரம் "சதாசிவந் தத்துவ முத்தமிழ்வேதம்" என்று கூறினமையையும், வடமொழியாகமங்கள் பூஜாகாலங்களில் திருவிடகானஞ் செய்யத்தக்கது; விழாக்காலத்தில் திக்குப்பலியில் தமிழ்ப்பண்கள் ஓதத்தக்கன என்று கூறப்படுவதையும், அவ்வாறே இன்றும் தமிழ்மறைகள் ஓதப்படுவதையுங் கருதி நோக்கில் தமிழ்மறைகள் (ஆகமங்கள்) முதற்சங்ககால முதலிருந்து பண்களோடு ஓதப்பெற்று வந்தனவென்று நன்கு விளங்கும். தமிழ்மறை நீண்டகாலமாயுளது. தமிழ்நாட்டில் நட்பமான மனவிரிவும் தத்துவநூல்களும் சிவஞானமும் என்று முள்ளன. சிவக்கடவுள் உலகனைத்துக்கும் பொதுவாந் தெய்வமேயாயினும் அவனை அறியுநெறியும், அவன் வணக்கமும் தமிழகத்தும் எனைத் தமிழ்நாட்டினுமே தொன்றுதொட் டுண்மையால் சிவன் "தென்னாடுடையான்" "பாண்டிநாடே பழம்பதியாகவும்" என்று சிறப்பித்துக் கூறப்படுகின்றன. ஆதலால் சிவநெறி என்னப்படும் சுத்தாத்வைத சைவ சித்தாந்தம் தமிழ்நாட்டுக்கும் அதில் வழங்கும் தமிழ்மொழிக்கும்ம தொன்றுதொட்டுரியது. இப்பொழுது அது தமிழினின்று ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படுவதுபோல முற்காலத்தில் பிறமொழிகளி லெழுதப்பட்டதன்றி அம்மொழிகளினே தோன்றியதன்று. இக் கருத்துக்களை உமாபதி சிவாசாரியர் திருமறைகண்ட புராணத்தில் "அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடு மதுபோலன் றிது வென்று முளதாம்" இது=தமிழ்மறை. கம்பநாட்டாழ்வார் இராமாயணம் அகத்தியப்படலத்தில்,

உழக்குமன்றநாலினுமுயர்ந்துலகமோதும்
வழக்கினுமதிக்கவினிலும்மரபினூடி
நிழற்பொலிகணிச்சியணிநெற்றியுமிழ்செங்கட்
டழற்புரைசுடர்க்கடவுடந்ததமிழ்தந்தான்.

என்று தமிழ்மறையின் தொன்மையும் மேன்மையும் வழியுங் கூறப்பட்டன.

திருமந்திரம். அருளுடைமையின் ஞானம் வருதல். 2.

அவிழுமனமும்மாதியறிவுந்
தமிழ்மண்டலமைந்துந்தத்துவமாமே.

திருவாசகம் அகவல் 4-165.

"எந்நாட்டவர்க்கு மிறைவா போற்றி"

திருவாசகம். அகவல் 4-164.

"தென்னாடுடைய சிவனே போற்றி"

திருவா. அகவல் 2-90.

"தென்பாண்டி நாட்டானே"

திருவா. 2-118.

"பாண்டிநாடேபழம்பதியாகவும் பத்திசெய்யடியரைப் பரம்பரத்துய்ப்பவன்"

திருவா. திருவம்மானை 8-10.

"தண்ணார்தமிழளிக்குந்தண்பாண்டிநாட்டானை"

என்று எல்லாம்வல்ல பரம்பொருளைச் சிவன் என்ற பெயரால் வணங்கும் சைவநெறி தோன்றிய பழம்பதி பாண்டிநாடென்றும், அதில் நுட்பமான கருத்துகளும் தத்துவநூல்களும் தேவதேவன் ஞானமும் உளவென்றும் விளக்கப்பட்டது. இக்கருத்தை டாக்டர். ஜி. யூ. போப்பையர் (Dr. G. U. Pope. M. R. D. D.) அவர்கள் "சைவ சித்தாந்தநூல் திருவிடர் அறிவின் சிறந்த விளைவு" = (The Saiva Siddhanta Philosophy is the choicest product of the Dravidian Intellect) என்று கூறிவற்புறுத்தினர்.

சிவன் என்ற சொல்லுக்குத் தமிழ்ப்பகுதி கூறில் வளர் என்ற பகுதி அத்தன்மையைக் குறிக்குங்கால் வளம் என்றும் அதையுடையானைக் குறிக்கும்பொழுது வளன் என்றும் ஆவதுபோலச் சிவண் என்ற பகுதி = பொருந்து என்ற பொருளுடைமையால் எங்கும் பொருந்தியிருத்தல் = (வியாபித்திருத்தல்)தன்மை சிவம் எனப் படுகின்றது. எங்கும் பொருந்தியிருப்பான் (சருவ வியாபகனுகிய பரமாத்மா) சிவன் என்று கூறப்படுகின்றனன்.

சுவேதாசுவதரம் 3-11 "ஸர்வகதஃஸிவ:" "எங்கும் அடைந்துள்ளவன் சிவன்"

திருவாசகம் அகவல் 3-28. "அனைத்தனைத்தவ்வயினடைந்தோன்"

தலைச்சங்கத்துத் தோன்றிய தலையாய வோத்துக்கள் தென்மதுரை கடல்கொள்ளப்பட்ட முதலூழியிலும், எஞ்சியிருந்தவை இடைச்சங்கமிருந்த கவாடபுரம் கடல் கொள்ளப்பட்ட இரண்டாவதூழியிலும் கடலுண் முழுகினமையால், இப்போதுள்ள தமிழ்மறையாகிய தேவார திருவாசகமும் திருமந்திரமும் அவதாரமூர்த்திகள் வாயிலாய்வெளிப்போந்தன. அவற்றுள் தேவாரம் திருமுறைகண்ட அபயகுலசேகரசோழன் சிதம்பரந் திருமதிலுள் வைக்கப்பட்டிருந்தமை கண்டு பெரும்பகுதி கரையானுண்டிறந்தமைக்கு வருந்த "இக்காலத்துக்கு வேண்டியனவே எஞ்சியிருக்கின்றன" என்றெழுந்த வானி முல் மொழி இக்காலமனிதர்க்கறியற்பாலன வல்லாத பொருளுடையன கரையானலுண்ணப்பட்டன வென்றுணர்த்தி நிற்கின்றன. அதுவே முதற்சங்க காலத்துத்தோன்றிய தலையாயவோத்துக்கள் கடல் கொள்ளப்பட்டமைக்குக் காரண மென்றுணரக் கிடந்தமை யோர்க.

வடமொழிமறை பலராற்கவரப்பட்டமையும், விண்டுமச்சாவதார மெடுத்துக்கொணர்ந்தமையும்,வேதங்கள் திரயியென்னப்பட்டுப் பின்னர் நான்காயினமையும் "அநந்தாவைவேதா:" "மறைகள் அளவில" என்னப்பட இப்பொழுது நான்கே யுண்மையையும், கற்பங்கள் தோறும் மீண்டு மீண்டும் மறைகள் தோன்றுமென்ற உபநிடதங்களின் கருத்தையும் உற்று நோக்கில் பிரளயத்தில் தமிழ்மறை வேறுபட்டமை யியல்பெனத் தோன்றும். திருமந்திரத்தில் சதாசிவ மூர்த்தமாயிருந்து சிவன் தமிழ் வேதத்தை யுணர்த்தினர். என்றும்

("சதாசிவந்தத்துவ முத்தமிழ்வேதம்") சிவன் உமையார்க் கருளினர் என்றும், அதை நான்சொல்கின்றேன் என்றும் ("நீலாங்கமேனி நேரிழையாளொடு, மூலாங்கமாக மொழிந்த திருக்கூத்தின், சீலாங்கவேதத்தைச் செப்பவந்தேனே") மலரவன், இந்திரன் முதலிய தேவர்களும் தமிழ்மறைபாடி யாடினர் என்றும் (திரு. நா. தே. "நாவார்ந்த மறைபாடி நட்டமாடி நான்முகனு மிந்திரனு மாலும் போற்ற") நந்திகேசுரர் முதலிய சிவகணநாதரும் தமிழ்மறை கூறியதாயும், திருமூலரோடு நந்திப்புத்தேளிடம் தமிழ் மறைகற்று அருள்பெற்ற உடன் மாணுக்கர் சிவயோகமாமுனி, பதஞ்சலி, புலிக்காலர், முன்னையர் எழுவர் என்றும், திருமூலர்பாற் றமிழ்மறைகற்ற மாணுக்கர் மாலாங்கன் இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன் காலாங்கி கங்கமலைச் சித்தர் என்ற எழுவர் என்றும், தமிழ் மறை யாசிரியரும் வழியும் அதுகற்ற மாணுக்கரும் ஆங்காங்குக் குறிக்கப்படுகின்றனர். மகேந்திரமலையில் சிவனர் ஆகமங்களை அருளிச்செய்தனர் என்று திருவாசகம், அகவல் 2. 9—10. "மன்னு மாமலை மகேந்திர மதனிற் சொன்ன வாகமந்தோற்று வித்தருளியும்" என்ற சுருதிவிளக்குகின்றது. மகேந்திரம் தமிழோங்கிவளர்ந்து வழங்கிய முதற் கழகமிருந்த நாட்டின் கண்ணுளதாதலால் அவண்டோன்றிய ஆகமமும் (சிவனர் அம்மைக் குரைத்த தமிழ் ஆகமத்தை யான் கூறுகின்றேனென்று திருமூலதேவர் குறித்தபடி) தமிழென்பதொருதலை.

அம்மலை கவாடபுரத்துக்குத் தெற்கிலுண்மையும், முதலூழியில் தென்மதுரை கடல்கொள்ளப்பட்டமையால் அநுமார் சென்றபொழுது அதன் ஒருபகுதியும் கடலுண் மூழ்கியிருந்தமையும் வான்மீகராமாயணம் கிட்கிந்தாகாண்டத்திற் கூறப்பட்டுள்ளது. தேவார திருவாசகத் தமிழ்மறையை உரைத்தோர் முருகக்கடவுள் அவதாரமாகிய திருஞானசம்பந்தர் நந்திகேசுரர் அவதாரமாகிய மாணிக்கவாசகர் முதலிய நால்வர். அத் தமிழ்மறையைச் சிவாலயமுனிவர் நாடோறும் ஓதத் திரட்டித் தந்தவர் அகத்தியனர்.

திருமூலநாயனர் சிவனர் அடியார்க் கறிவுறுத்தருளிய சிவாகமங்கள் அளவிறந்தனவென்றும், அவற்றுட்சிறந்தன இருபத்தெண் கோடி நூறுயிரம் என்றும், அவற்றின் பொருளைச்சுருக்கி யான் 3000

திருமந்திரங்களாகக் கூறுகின்றேன் என்றுஞ் சொல்லியிருக்கின்றனர். அவற்றின் சுருக்கம் இருபத்தெட் டாகமங்கள். இப்போதுள்ள காமிகாகமத்தில் முதற்கண் ஒவ்வோராகமத்தின் பாத்தொகை இஃதென்று கூறப்பட்டுளது. அக்கணக்கின்படி அக்காமிகாகமத்திலாவது வேறு ஆகமங்களிலாவது பாக்களிருக்கக் காண்கிலம். ஆதலால் அவை முன்னிருந்த தமிழ் ஆகமங்களின் தொகை என்றும், அவை வடமொழியி லெழுதப்பட்டபொழுது சுருக்கி யெழுதப்பட்டனவென்றும் கருதத்தக்கதாகின்றது. வடமொழி யாகமங்கள் திக்குப்பலியினும் நித்திய பூஜாதிகளிலும் தமிழ்ப்பாக்களையும் தமிழ்ப் பண்களையும் ஓதப்பணித்தமையும் வடமொழி யாகமங்களில் ஆகமம் முதலிய சொற்களுக்கு ஆ = பசு, க = பதி, ம = பாசம், ஆதலால் பசுபதி பாசங்களை யுணர்த்தும் நூல் ஆகமம் எனப்படும்; என்றிவ்வாறு தமிழ்ப்பகுதிப்பொருள் கூறப்படலும், இக்கருத்தை நிலையுறுத்தும்.

இந்தியாவில் 8000, 10000 ஆண்டுகட்கு முந்திய பல சிவாலயங்களிருக்கின்றன. நெடுநாள் முந்தியிருந்து மண்ணுண் மறைந்திருந்த சிவாலயங்களும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. அவை வடமொழி யாரியர் இந்நாட்டுக்கு வருதற்கு முந்தியகாலத்திற் கட்டப்பட்டனவென்பது தெளிவு; ஆதலால் அப்பொழுது சிவத்தளிக ளியற்றல் வழிபடல் முதலியன தமிழாகமங்களின் வழித்தாய்ச் செய்யப்பட்டன வென்பதூஉந் தெளிவே. வேதம் ஆகமம் என்பன ஒரு பொருட் கிளவிகளாதலால் திருமூலதேவர் முன்னர்ச் "சிலாங்கவேதத்தைச் செப்பவந்தேனே" என்று சொல்லிப் பின்னர்ச் "சிந்தை செய்தாகமஞ் செப்பலுற்றேனே" என்று கூறினர்.

மேற்கூறிய கருத்தை,

அஞ்சனமேனி யரிவையோர் பாகத்தன்
எண்ணிலிருபத்தெண் கோடிநூறாயிரம்
விண்ணவரீசன் விழுப்பமுரைத்தனர்
எண்ணிநின்றப்பொருளேத்துவனானே.

என்ற திருமந்திரம் விளக்கினமைகாண்க.

இந்துமகாசமுத்திரத்தில் மூழ்கிய இடத்திற் றோன்றியிருந்து பல்கிப்பெருகிய மனிதரி லொருதொகுதி மெசபட்டோமியாவிற் சென்றிருந்து பெருகிப் பல பகுதிகள் வெவ்வேறிடங்களிற் செல்ல மற்றொருபகுதி இலத்தின் கிரீக்கு, எபிரேயம் பகுதிகளாய்ப் பிரிந்து போக எஞ்சிய வடமொழி யாரியர் மத்திய ஆசியா மேற்குப்பகுதி யிலுள்ள துருக்கித்தானத்திற் றங்கிப் பின்னர்க் கைபர்க் கணவாய் வழியாய் இந்தியாவுட் புகுந்தனர்.

அவர் இந்தியாவுக்கு வந்து 5000 ஆண்டுகளாகின்றனவென்று ஆங்கில ஆசிரியர் பலர் கூறுகின்றனர். வேறுசிலர் சில நூற்றாண்டுக ளுயர்த்திக் கூறுகின்றனர். மற்றொருவர் 6000 ஆண்டுகளென்று கணக்கிடுகின்றனர். இருக்கு முதலிய மூன்று வேதங்கள் கி. மு. 3101 முதற்றொடங்கிப் பல இருடிகளால் 2500 ஆண்டுவரை யெழு தப்பட்டனவென வேதகாலம் (The Vedic Era) முதலிய நூல்கள் கூறுகின்றன. புரோபசர் எச். ஜாகோபி (Pro. H. Jacobi) என்பவர் வேதத்திற் குறிக்கப்படும் கிரஹநிலைபை ஆதரவாய்க்கொண்டு கி. மு. 4500க்கும் 2500க்கும் இடையிற்றோன்றிய தென்கின்றனர். புரோப சர் பா. க. திலகரும் அவ்வாறே கூறுகின்றனர். தமிழ் அறிவு நூல் களின் கருத்துக்களையும் சிவன்காதைகளையும் தமிழர் ஒழுக்க வழக்கங் களையும் தமிழ்நாட்டுக் காதைகளையும் ஓர்ந்த வடமொழிவல்ல அறி ஞர் வடமொழிவேதம் ஆகமம் புராணம் இதிகாசங்களை வரைந்தனர். அன்னவர் மெய்ஞ்ஞானமும் சிவானுபூதியுமுடைய உத்தமராதலின் அவைகளுஞ்சிறந்த பிரமாணங்களேயாயின. பின்னர்த்தோன்றிய திருஞானசம்பந்தர் முதலிய சமயகுரவர் நால்வரும் வடமொழிவேதம் ஆகமம் தமிழ்மறையாகமங்கள் ஆகிய இருபகுதிகளையும் தழுவிய சமரசஞான சித்தாந்திகளாதலால் அவர்கள் சித்தாந்தம் வைதிக சுத் தாத்வைத சைவசித்தாந்த மெனப்படுகிறது. நாமும் அதைத் தழு வினவர்களாதலால் நமக்கும் வடமொழி தென்மொழி வேதாகமங்கள் அளவைகளாயின. தமிழகத்தில் தொன்று தொட்டுள்ள முல்லைத் திணைத்தெய்வமாகிய திருமால்மீது ஆழ்வார்களியற்றிய நாலாயிரப் பிரபந்தமாகிய தமிழ்வேதமும் ஸ்ரீ வைஷ்ணவப் பிராமணராலோதப் பெற்று வருகின்றது. தேவாரம்—"அரியலாற்றேவியில்லை யையனை யாறனார்க்கே"என்றபடி வைஷ்ணவம் தேவி விஷயமாமன்றி உண்மை

யில் வேறுபட்டதன்று சிவசத்திகளுக்கு வேற்றுமையின்மையால். விள்ளல்=மலர்தல்=விரிதல் ஆதலால் விண்டு என்பது விள் என்ற பகுதிபடியாய்ப் பிறந்து எங்கும் பரவி (விரிந்து) உள்ளபொருளைக் குறித்து நிற்கின்றது. சிவன் விண்டு என்ற சொற்கள் பொருளானு மொற்றுமையுடைமை காண்க.

சாந்தோக்கியம் பிரபா. 5. கண்டம் 3.

"யதேயம் ந ப்ராக் த்வத்த꞉ புரா வித்யா ப்ராஹ்மணான் கச்சதி"

என்ற சுருதி முன்னர் ஆரியப்பிராமணர் அறியாதிருந்த ஞானத்தைப் பாஞ்சாலநாடாண்டிருந்த தமிழரசனாகிய பிரவாகநசைவலி கௌதமருக் குபதேசித்தனனென்றுணர்த்தலும், வடமொழி வேதங்களில் தமிழ்முனியாகிய அகத்தியர் சரித்திரம் மிகக்காணப்படலும், அகத்தியர் மனைவி வேதத்திற் சில பகுதிக்கு ஆக்கியாளாயிருத்தலும், பிரபளங்கூறும் வேதம் சதசதப் பிராமணத்திலும், அதற்கு பப்பிருமணமாகிய பாரதம், பாகவதம், லிங்கபுரான முதலியவற்றிலும் கூறப்படும் மநு திராவிடராஜன் என்னப்படலும், "மநுமொழிந் ததெல்லாமருந்து" = (யத்வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்) என்று வேதத்தில் கூறப்படலும், மனலூர் புரம் முதலிய தமிழ்ப்பெயர்கள் வடமொழிப்பாரத முதலிய நூல்களில் காணப்படலும், மந்திரபாகங்களில் தமிழ்க்குரிய ளகரங் காணப்படலும், வடவாரியர்க்குச் சொந்தமான எழுத்தின்மையால் அவர் இந்தியாவுக்கு வந்தபின்பியற்றிய நூல்கள் நெடுநாள் எழுதா மறை எனப்பட்டுப் பின்னர்த் தமிழ்ப் பழைய எழுத்தாகிய வட்டவெழுத்திலிருந்து நாகரவெழுத்தையும், புதிய எழுத்தாகிய தமிழெழுத்திலிருந்து கிரந்த எழுத்தையும் படைத்து அவற்றில் வடமொழி நூல்களை எழுதியிருத்தலும் தமிழ்நூற் றொன்மையையும் மேன்மையையும் நன்குவிளக்கும்.

தமிழ்த் தொன்மையைப்பற்றி இந்திய புத்தசரித்திரம் (Buddhist India) என்ற ஆங்கில நூலாசிரியர் கூறியனவும், வி.கோ. சூரியநாராயண சாஸ்திரிகள் தமிழ்மொழிவரலாற்றில் வடமொழிக்கலப்பு என்ற அதிகாரத்தில் பல அரிய நுண்பொருள்கள் தென்மொழியி

னின்று வடமொழிக்கு வந்தமையைப்பற்றிக் கூறியிருத்தலும் இதனை யாதரிக்கும். சுமார் 3000-ஆண்டுகட்கு முன்னர்ப் பாஸமகாகவியா லியற்றப்பட்டதென்று கூறப்படும் நாடகங்களுள் முக்கியமான ஸ்வப்ன வாஸவதத்தம் என்பது தமிழரசனுகிய உதயணன்காதையை ஆதாரமாய்க்கொண்டு வத்ஸராஜன் என்ற பெயர்தந்தெழுதப்பட்டுளது. சங்கீதரத்னகரத்தில் தமிழ்த் தேவாரப்பண்கள் எடுக்கப்பட்டுள்ளன. தமிழ்ப் பெரியபுராணம் வடமொழியிற் பெயர்க்கப்பட்டுள்ளது. இவை முதலியன அவர் கூற்றுக்களுக் குதாரணங்களாம்.

திருமூலர். "செப்புஞ்சிவாகமமென் னுமப்பேர்பெற்று
அப்படிநல்குமருணந்திதாள்பெற்றுத்
தப்பிலாமன்றிற்றனிக்கூத்துக்கண்டபின்
ஒப்பிலெழுபதுகோடியுகமிருந்தேனே."

என்று கூறுகின்றனர். யுகத்தை ஒராண்டாகக் கொள்ளினும் எழுபது கோடி ஆண்டாகின்றன. ஆதலால் சிவநெறிமுதற்கண் ணுலகிற்றேன்றிய காலம் வரையறுக்கக்கூடாததாயிருக்கின்றது. மிகச் சுருங்கிய தற்காலக் கணக்கை வைத்துநோக்கில் மேற்கூறிப் போந்தவற்ருல் 12000-ஆண்டுகட்கு நெடுநாள் முன்னரே தமிழ் சீர்தேற்றமடைந்திருந்ததென்றும் தலைச்சங்ககாலந்துவக்கிச் சைவசமயமிருக்கிறதென்றும், சைவசமயத்துக்குப் பாண்டிநாடே பழம்பதியென்றும், இச்சைவம் தமிழினின்றே ஏனையமொழிகளுக்குச் சென்றதென்றும் விளங்குகின்றது.

முன்னர்ச் சென்னைக்கவர்னராயிருந்த சர் கிரான்ட்டப்பிரபு ஒருநாட் பிரசங்கத்தில் "தமிழின் தொன்மையின்முன் ஆரியர்களுடைய தொன்மை சற்றுநேரத்திற்குமுன் வந்த ரூட்டர்த்தந்தியொக்கும்." என்றதும் சென்னை ஐகோர்ட் ஜட்ஜ் திவான் பகதூர் பிர்ம ஸ்ரீ சதாசிவையரவர்கள் சென்னை மெய்கண்ட சந்தானசபையிற்செய்த பிரசங்கமும் இக்கருத்தை ஆதரிக்கும்.

## சைவசமயக்கருத்து.

நமது இந்திரியங்களுக்கும் அறிவுக்கும் புலப்படும் பொருள்கள் மண், நீர், தீ, காற்று, விண், கதிரவன், மதி, ஆவி, என எட்டுப்பொ

ருள்கள். அவற்றில்முன்னேழும் அசேதனமும் ஆவி சேதனமுமாம். எல்லா உலகங்களும் கதிர்மதிகளும்பௌதிகவடிவங்கள். உலகத்துள்ள இயங்கியற்பொருள் நிலையியற்பொருள்களின் வியப்பான அமைப்புகளையும், ஒன்றுக்கொன்று பயன்படு நலத்தையும் உற்று நோக்குவார்க்கு அவற்றை முற்றுமோர்ந்தியற்றுவா னொருவ னுள னென்று தோன்றுமற்போகாது. புகைகண்டுழி நெருப்புண்டென உணர்தல்போல அதிவிசித்திரமான உலகப்படைப்பை நோக்குழிப்படைப்பான் ஒருவன் உளன் என்றுகருதலளவையாற் கொள்ளப்படுகின்றது. ஆங்கிலதத்துவ சாத்திரியாகிய ஹெர்பர்ட் ஸ்பென்சரும் (Herbert Spencer)அறிவுள்ள மூலகாரணமொன்றுண்மை மெய் என்கின்றனர். கடவுள்எல்லாவல்லமையும் எல்லா அறிவுமுடையர் எங்கும்நிறைந்தவரென்பது கொஞ்சங்குறைய எல்லா ஆத்திகரு மொப்பிய வுண்மை. வியாப்பியப்பொருள்களில்லாவிடில் வியாபகனுங்கிடையாது. ஆதலால் சேதனு சேதனப்பிரபஞ்சங்கள் வியாப்பியமும் கடவுள் வியாபகனுமாம்.

எங்கும் நிறைந்தவனாகிய சிவன்பதி. அவனை அளவைகளானும் அறிவானும் அறியும் சேதனன் ஆன்மா. அவர் ஆணவம், மாயை, கன்மமென்னும் மும்மலங்களில் 1. 2. 3. மலங்களுடைமையால் முத்திறப்படுவர். ஆன்மாக்கள் கன்ம வேற்றுமையால் பற்பல பிறப்பிறப்புகளடைந்து சுழலுமெண்ணிறந்தவர். ஆவிகளின் கன்மங்களுக்கேற்பத் தனுகரண புவன போகங்களாயுதவுவது மாயை, அல்லது பாசம். அது, சுத்தமாயை அசுத்தமாயை என்றிருவகைப்படும். மேற்கூறிய கடவுள், ஆவி, மாயை, என்ற முப்பொருள்களும் அநாதி நித்யம். கடவுள் எல்லா ஞானமும் எல்லாவல்லமையும் எல்லா நல்ல பண்புகளும் இரக்கமும் உடையன். இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இன்பவடிவன். எங்கும் நிறைந்த ஒருவன். ஆன்மாக்கள் சேதனராயினும் செம்பிற் களிம்புபோன்றுள்ள ஆணவமலத்தால் இச்சாஞானக்கிரியாசத்திகள் மறைக்கப்பட்டு இருட்டுவீட்டிற் குருட்டுக் குழவிபோல அநாதி கேவலத்திற் கிடக்கின்றன. அவ் வான்மாக்களுக்கு இறைவன் அவற்றின் இச்சை கன்மங்களுக்குரிய தனுகரண புவன போகங்கள் தந்து அதனல் அறிவு முதிர்ந்து பரிபாகமெய்தி வீடு பெற்றுத் தன்னைப்போலப் பேரின்பநுகர்ந்திருக்கச் செய்கின்றனன்.

அவனொருவனே சர்வலோகங்களையும் படைத்தளித்தழிப்பவன். உலகில் இல்வழக்கினர் (நாத்திகர்) நான்கு பூதங்களின் சேர்க்கையானும் அவற்றின் மிகுதி குறைவானும் உலகம் தோற்றம், நிலை, இறுதியடைகின்றன வென்கின்றனர். பிரதான காரணவாதிகள் பிரதானமாகிய மாயையே ஜெகத்காரண மென்கின்றனர். காலவாதிகள், காலமே காரணமென்கின்றனர். சுபாவவாதிகள் இயற்கையே காரணமென்கின்றனர். அவையனைத்துஞ் சடமாகையால் அவற்றுக்கு அறிந்தியற்றுங் காரணத்தன்மை பொருந்தாது. அறிவுள்ள ஜீவான்மாவைக் காரணமென்பதும் தனக்கெனச் சுவாதீனமின்றிச் சுகதுக்கமடைதல், தன் எண்ணத்தாற் பிறப்பிறப்படையாமை, உலகிலொன்றைப் படைத்தல் காத்தல் அழித்தல் வன்மை தனக்கில்லாமை, சிற்றறிவு சிறுதொழில் சிறுதன்மையுடைமை முதலியவற்றானும் பிறவற்றானும் பொருந்தாது. சர்வ ஆன்மகோடிகளையும் அறிவுக்கு அறிவாய் நின்றறிவித்தியக்கும் அந்தரியாமியாகிய ஒருவனே தெய்வம். அவனைப் பற்பலமதத்தரும் மொழியாளரும் வெவ்வேறு பெயராற் கூறுகின்றனர். பகலைச்செய்யும் கதிரவனை வடமொழியார் சூரியனென்றும், ஆங்கிலேயர் சன் (Sun) என்றும், இந்துஸ்தானியர் சூராஜ் என்றும், இலத்தீனர் சோலர் (Solar) என்றும் இன்னும் பல மொழியாளர் பலவாறு கூறினும் குறிக்கப்படும் பொருளொன்றேயாவதுபோல எம்மதத்தவர் எப்பெயராற் றெய்வத்தைக் கூறினும் குறிக்கப்படுதெய்வ மொன்றேயாம். ஒரு பொருளின் ஒவ்வொரு பெயரும் அப்பொருளின் இயல்பிலொன்றையே குறிக்கின்றமைபோலக் கடவுள் ஒவ்வொரு நாமமும் அவன் கல்யாண குணங்களிலொன்றையே குறிக்கின்றது.

சுவே. 4. 19.

यस्य नाम महद्यशः । எவன் பெயர் (அவன்) பெரிய புகழ்.

கூர்மபுராணம்.

"[illegible] ।
[illegible] ॥

(இ - ள்.) எல்லாவற்றையும் அழிப்பதால் அரன் என்றும், வியாபிப்பதால் விஷ்ணுவென்றும், எல்லாவற்றையும் அறிவதால் சர்வக்ஞன் என்றும், ஓம்புதலால் ஓம் என்றும் கூறப்படுகின்றனன்.

பிள்ளைகள் நெடுங்கணக்குப்படித்துப் பின்னர் முதற்பாடம் இரண்டாம் பாடம் முதலிய ஏடுகள்படித்து மெட்ரிக்குலேஷன் பரீக்ஷைக்குரிய பாடங்கள் படித்துத் தேறிப் பின்னர் பி. ஏ. எம். ஏ. முதலிய பரீக்ஷைகளுக்குப் படித்துத்தேறி ஆசிரியராதல்போல வெவ்வேறு கிழ்ப்படி மதங்களைப்பற்றி அவ்வவற்றிற் பெறத்தக்க அறிவடைந்து பலஜன்மங்களில் சித்தசுத்தியடைந்து சிவஞானமெய்தி முக்தியடைவர்.

எம். ஏ. பரீக்ஷயிற் றேறுதற்கு ஒவ்வொரு வகுப்புப் பாடங்களும் எப்படித் தள்ளத்தகாத அத்தியாவசியமும் பயன்படத்தக்கனவுமாகுமோ அப்படியே ஒவ்வொரு மதங்களாகிய சோபான மார்க்கங்களும் தள்ளத்தகாத பயனுடையனவேயாம். ஆதலால் கன்மபரிபாகத்தால் பலதிறப்பட்ட அநந்தகோடி ஜீவர்களுக்குபயோகமாம்படி உலகிற் பல்லாயிர மதங்களிருக்கப்பரமன் கற்பித்திருக்கின்றனன். ஆதலால் ஒருமதமும் எள்ளத்தக்கதன்றென்று கருதி அறிவதே அறிஞர் முடிவு. சைவசித்தாந்தத்தின் உண்மைத்துணிவுமஃதே.

திரு. நா. தேவாரம்.

விரிவிலாஅறிவினார்கள்வேறொருசமயஞ்செய்தே
எரிவினாற்சொன்னாரேனுமெம்பிராற்கேற்றதாகும்.

சிவஞானசித்தியார்.

யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகியாங்கே
மாதொருபாகனாரேவந்தருள்புரிவர்.

சாந்தோக்கியம்.

"யதாயதோபாஸதே ததேவ பவதி" "எப்படி எப்படி யுபாசிக்கின்றனன் அப்படியே ஆகின்றனன்."

திருவாய்மொழி "தமருவந்த தெவ்வுருவவ் வுருவந்தானுய்த்—தமருவந்ததெப்பே ரப்பேர்—தமருவந்த—தெவ்வண்ணஞ் சிந்திப்பதியை யாதிருப்பரேல்—அவ்வண்ண மகிழ்வோனும்."

என்ற சுருதிகளுமவ்வுண்மையை வற்புறுத்துகின்றன. ஆதலால் மதத்துவேஷங்களை யொழித்தல் நமதுகடமையேயாம்.

எக்காலத்தும் எவ்விடத்தும் எந்தத்தொழில் செய்யும் பொழுதும் பரமேசுரனைத் தியானித்தலும் எல்லா உயிர்களையும் தன்னுயிர் போலெண்ணி அவைகட்கு நன்மைபுரிதலும் தீமைசெய்யாமையும் சைவர்க்கு இன்றியமையாத செயல்களாம். படித்தவர்களும் பெரிய உத்தியோகமுஞ் செல்வமு முடையவர்களுந்தாம் கடவுளை வணங்கலாம் எளியவர்களுக்குப் போதுமான அவகாசமின்மையால் அவர் கடவுள் தியானஞ்செய்ய முடியாதென்றெண்ணற்க. மனஉழைப்புடையரைக்காட்டிலும் தேக உழைப்புடைய வேலைக்காரர்க்கு அவகாசமுண்டு. உதாரணமாக மூட்டை சுமப்பவன் எனது பாவச்சுமை, அஞ்ஞானச்சுமைகளை ஒழித்தருளவேண்டுமென்று தியானித்துக்கொண்டு செல்லலாம்: அதனால் தெய்வபக்தியுண்டாவதோடு பாரந்தெரியாமையுமுண்டாம். மண்வெட்டுபவன் இவ்வாறு என் ஆணவம் தீயகன்மங்களை வெட்டியொழிக்கவேண்டுமென்று தியானித்துக்கொண்டு வெட்டலாம். குப்பைதூர்க்கிறவன் இவ்வாறு என் பாசக்குப்பைகளை விலக்கவேண்டுமென்றும், கரிச்சட்டிகழுவுபவன் இவ்வாறு என் அஞ்ஞானக் கரியைக் கழுவவேண்டு மென்றும் கடவுளைத் தியானிக்கலாம். மன உழைப்புடையவன் அவன் தொழிலை நிறுத்தி யொருதியானத்தில் மனதைச் செலுத்தவேண்டும். உடல்வேலைசெய்பவன் வேலைசெய்யும் பொழுதே மனதில் கடவுளைத்தியானிக்கலாம்.

சிவன் எல்லா உயிர்களினும் நிறைந்த அந்தரியாமியாதலால் உயிர்களனைத்தும் அவன்கோவில் ஆதலால் அவன் வீற்றிருக்குங் கோவிலுக்கு எவ்வாற்றானும் இடுக்கண் விளைத்தல்கூடாது. இக்கருத்தானே பிறவுயிர்கொன் றான்தின்னலைச் சைவநெறிமறுக்கின்றது.

## திருநீறு.

திருநீறு, கண்டி இரண்டும் சிவசின்னங்களென்னப்படுகின்றன. சர்வபிரபஞ்சங்களையும் இறுதியில் சங்கரித்து எல்லாமொடுங்கிய காலத்தில் எஞ்சிநிற்பவன் சிவன் ஒருவனே.

ஆதலால் திருநீறு சர்வசங்காரக்கடவுளை நினைப்பூட்டுகின்றது. திரிபுண்டரமாகத் திருநீறிடும்பொழுது மும்மலங்களையும் நீற்றி யிவ்வாறு நீறுக்கவேண்டுமென்று நினைந்து ஐந்தெழுத்தை யோதி முறைப்படி திருநீறிடவேண்டும்.

திருநீறு மும்மலங்களையு மொழித்து ஆயுளும் செல்வமும் அறிவும் கொடுக்குந்தன்மையுடையது. வைத்தியமுறையாய் நோக்கில் விபூதி உத்தூளநம், அவகுண்டநம், (நீர்கலந்து உடலிற் பூசல்) திரிபுண்டரம் என்ற தாரணங்கள் உடம்பிற்படும் நோய்ச்சிற்றுயிர் தொற்றுநோய்ச்சிற்றுயிர்களையும் கொல்லும். உட்கொள்ளும் பூதி வாயினுட் சென்ற புழுக்களைக்கொல்லும், புழுக்களால் உண்டாம் நோய்கள்வாராமற்காக்கும். உதாரணமாக வித்துக்கள் புழுக்காமல் அல்லது உளுக்காமல் சாம்பல் சேர்த்துவைத்தலும் புழு அசுகணி உண்டாகிய அவரை, புடல், பீர்க்கு முதலிய படர்கொடிகளில் சாம்பல் தெளித்தலும் அவை நீங்கி நல்லபலன்றரலும், வாராமற் காத்தற்கும், வந்தபின் நீக்கற்கும் சான்றுகளாம்.

கண்டிகை.

ருத்திராக்ஷம் மகா உருத்திரனது கண்போன்றது. அவற்றை யணிந்துகொள்வதுநம்பால்அவனருட்கண் பெறவேண்டுமென்பதைக் குறிக்கின்றது. கண்டியின் தாரணத்தால் தேகசுகமும் நல்லறிவும் செல்வமும் சிவனருளுமுண்டாம். வைத்திய முறையாகநோக்கில் கண்டியில் உயிர்ச்சாரசக்தி (Human Magnetism) உளதால் அதை அணிவார்க்கு உயிர்ச்சாரசக்தி மிகுத்து தேகத்துக்கும் மூளைக்கும் பலமுண்டாகி ஆயுளும் நீளும்; இரத்தசுத்தியும் நோய்நீக்கமும் உண்டாம். உதாரணமாகப் பலவிடங்களில் மகம்மதியரும், கிறித்தவரும் கூடச் சிலநோய்கள் வாராமற்காத்தற்கும் நீக்கற்கும் ருத்திராக்ஷத்தை ரக்ஷாபந்தனம்போலக் குழந்தைகளுக்குக் கட்டிவருகின்றனர்: நல்லபலனையுமடைகின்றனர். வைத்தியர் ஜன்னி நாவறட்சி மயக்க முதலியவைகளுக்கு அதனால் கண்டாவிழ்தஞ்செய்து கொடுத்து நல்லகுணங் காண்கின்றனர்.

இவ்விரு தாரணங்களுடையாரைக் காணுந்தோறும் அவற்றைத் தரிக்கும் தோறும் தெய்வநினைப்புண்டாவதும் பாராட்டத்தக்கதே.

## ஐந்தெழுத்து.

இச்சைவசமயம் ஒரு ஜாதியார் அல்லது தேசத்தாருக்குரிய தன்று. மனித ஜாதியார் அனைவர்க்கும் பொது. அருபத்து மூன்று நாயன்மார்களின் வகுப்புக்களைக் கருதினால் அவ்வுண்மை விளங்கும். கடவுளை அடையும் நன்னெறிகள் சிலர்க்குரியன வென்றும் சிலர்க் குரியனவன்றென்றும் கூறல் எவ்வளவறியாமை. கடவுட்குரிய அள வில் பெயர்களில் சிவன் என்பது எங்கும் நிறைந்தவன் என்று குறிக் கின்றது.

அது நெடுநாட் பலரால் தழுவப்படலாலும் தென்மொழி வட மொழி மறையாகமங்களிலும், வழக்கிலும் சிறந்து வழங்கப்படுகின் றது. பிற்காலத்து நமச்சிவாயன் என்ற பெயரும் வழங்கியது. அப் பெயர்களிரண்டும் ஐந்தெழுத்தென்றே கொள்ளப்படுகின்றன.

### தேவாரம்.

"பாத்திரஞ்சிவமென்று பணிதிரேல்"
"வேதநான்கினு மெய்ப்பொருளாவது
நாத னும நமச்சிவாயவே"

என்ற சுருதிகள் அக்கருத்தை விளக்குகின்றன.

## அடியர்வணக்கம்.

மக்கள் அனைவரும் சிவபிரான் பிள்ளைகள் ஆதலா லவ்வனைவரை யும் நாம் உடன் பிறந்தாராய்க் கொள்ளல் வேண்டும். அவருள்ளும் சிவபக்தர் யாவராயினும் அவர்பால் நாம் மிக்க அன்புசெலுத்த வேண் டும். இக்கருத்தை,

### திரு. நா. தேவாரம்.

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
　　　　தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ
　　　　மாதேவர்க் கேகாந்த ரல்லராகின்

அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயரா
யாவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராயி
னவர்கண்டீர் யாம்வணங்குங் கடவுளாரே.

முண்டகோபநிஷத்.

"சண்டாலோபி யதி சிவ இதி வாசம் வதேத்
தேந ஸஹ ஸம்வதேத் தேந ஸஹ ஸம்வஸேத்
தேந ஸஹ புஞ்ஜீத"

(இதன் பொருள்) சண்டாளனாயினும் சிவனென்ற சொல்லைச் சொல்வானானால் அவனோடு பேசுக. அவனோடு இருப்பாயாக. அவனோடு உண்பாயாக. என்றல் முதலிய சுருதிகள் விளக்குகின்றன.

இதுகாறுங் கூறியவாற்றால் சைவசமயம் தமிழ் நாட்டில் 12000 ஆண்டுகட்கு முன்னரே தோன்றியுளதென்றும், அது எல்லாருக்கும் பொதுவாம் ஞானமதமென்றும், உலகு உயிர் தெய்வம் என்று முப் பொருள்களுள, உயிர்கள் ஜாதி மத வேற்றுமையின்றி அவர் புரியும் நன்மை தீமை உபாசனைகளுக்குரிய பலனை அடைவர், நாம் கடவுளை நம்பி நன்னெறியிலொழுகி அவனை வழிபடல் வேண்டும், தன்னுயிர்போ லெவ்வுயிரினிடத்தும் அன்புசெலுத்தவேண்டும், விபூதி ருத்திராக்ஷ தாரணம் பஞ்சாக்ஷரஜெபம் ஜீவகாருண்யம் சைவத்துக்கு முக்கிய சாதனங்கள் என்றும் நன்கு விளங்குகின்றது.

இன்று சிவபிரான் பிரபாவங்களை யான் சொல்லவும் நீங்கள் கேட்கவும் அருளிய திருவருளைப் பன்முறை வணங்குகின்றேன்.

நம:பார்வதீபதயே

இங்ஙனம்

ஒருசைவன்.



ஸ்ரீ:

# *வெள்ளூர்ச் சாசநங்கள்

——:o:——

## I. "மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 8-வது வருஷம்"

சுவாமி ஆழியங்கைப்பெருமாள் கர்ப்பகிருகம் மேல்பக்கம்

மேற்றட்டுப் பட்டியல்.

ஸ்வஸ்திஸ்ரீ॥ சி கோமாரவந்மரான திரிபுவனச சககரவததிகள சி குலசேகரதேவறகு யாணடு அ-வது ஜெஷ நாயறறு உய்கவ யும வ-ஆறவ பகக (தது) ஷஷி (யு) ம வெ (ள) ளிககிளமையும பெறற பூசததுநாள திருவழுதிவளநாடடு திருககுருகூா திருசசஙகணிததுறை (இனித் தென்புறம் மேல்தட்டு மேல்வரி:)........................ எமபெருமானுறககு அததியன பிராகளாக நெடடூருடையான........ மூவரான உடையாா காலிஙகராயா வைதத அகரம ஸ்ரீராமாநுச சது வெ-திமஙகலததில படடாகள பேர இருபதது நாலுககு இறையிலி ..............டடு வேளூரான மதுரோதயபுர+மழவராயநலலூா...... மடவா. (மேல்பக்கம் 2-வது வரி) லபபுரவு நிலம பதினைஞசுமாவு மிபபாடடததிலுள மரஙகளுமிப படடாகளுககு இறையிலியாக வரி யில கழிதது கலலிலும செமபிலும வெடடிககுடுபபடதெனறு பி (ர) சாதஞ செ (ய) தருளிய திருமுக (ப) படி நிலம பதினைஞசுமாவும திருநகரியில பொலிஞசுநினறபிரான கோயிலில உடையாா (தென்புறம் மேல்தட்டு 2-வது வரி) உகநதருள பணணிந நாசசியாறகு திருவுடை யாடடமாக திருமுகபபடி குள (ப) புரவு முககாணி—ஹூறு அசசும பாடு நி (?) கலமஞசுபிரவும திருமுகபபடியும நியோகபபடிபிலேயும கரஙகளும..........ஙக வறககததாரும....................யஜஜ ராந இறையிலியாக இநில........ ...ந ஸ்லேவ்யாதிகளுமனுபவிபபா ராகக கலலில வெடடிககுடுததோம உளராரோம.

---

* இவ்வூர் ஆழ்வார் திருநகரிக்கு மேற்கே 4 மைல் தூரத்திலுள்ளது. புத்தர்கள் இருந்த விடமாகத் தெரிகிறது. இவ்வூரிலிருந்த புத்த விக்கிரகமொன்று இப்போது சென்னைக் காட்சிச்சாலையிலிருக்கிறது. இவ்வூர் வேளூர் எனவும் வழங்கும்.

## II. தென்புறம் கீழ்த்தட்டு

### ஜடாவர்மன் குலசேகர தேவர்க்கு 13-வது ஸு

1. ஸ்வஸ்திஸ்ரீ கோசசடைய பனமான திரிபுவன சககரவததி கள ஸ்ரீ குலசேகரதேவறகு யாணடு ௰௩ எதிா பனனிரணடாவது திருவழுதிநாடடு வெளளூரான மதுரோதயபுரதது கமபிததுண (?) விணணகா எமபெருமான ஆழியஙகைப பெருமாளுககு இனனகரதது வேளானபபனனதிருக.........................................
2. குருகூா விழுபபரையனேன இநத எமபெருமானுககு உகந தருளிவிதத ஸ்ரீ பூமிபபிராடடிககு திருபபடி மாறறு சநதிராதிதத பகற செலவதாக நகரததாா பககல நான விலைகொணடு ஸ்ரீ பூமிப பிராடடிககு நீரவாததுககுடுதத நிலமாவது. பெருமபுளிபபணணைக கடுககை சூழவயகலும ஸ்ரீ சடகோவபபேரேரி உடைபபுவயககலும இவவிரணடு பறறுககும நகரததாா நாடடின எலலைததிருவாழிககல லுககுளபபட்ட நிலததுககுக கடமை இறையறுதியாக நகரததாா திருபபடி மாறறுககு செலவதாக திருபபடியிலேய நீரவாதது சநதி ராதிததபகல செலவதாக எனககு நகரததாா விறறுததநதபடியே கலவெடடிககுடுதத இன நகரதது வெள்ளான அபபனனன திருக குருகூா விழுபபரையன எழுதது.

## III மேல்புறம் கீழ்த்தட்டு.

1. ஸ்வஸ்திஸ்ரீ எமமணடலமுங்கொணடருளிய ஸ்ரீகுலசேகரதே வறகு யாணடு ௰௪-வது ஆடிமாதம ௰௧ ஞதிருவழுதிவள நாடடு வேளூரான மதுரோ உதயபுரதது நகரததோம.........................
2. நமமூா உபைபபெறுகதியதிருடட (?) கரைதைசசதரததினபடி யும ஸ்ரீ சடகோபபபேரேரியில முககாணிககூறும...............பாடும தைசசதரததினபடியும சநதிராதிததவறறதுவே கரையாக நமமில மைநதமைககு

(இத்துடன் நின்றுவிட்டது.)

A. M. சடகோபராமாநுஜாசார்யன்,

திருச்சிராப்பள்ளி நாஷநல் ஹைஸ்கூல்.

---

# திருமந்திரம்.



தேவர்குறளுந்திருநான்மறைமுடிவும்
மூவர்தமிழும்முனிமொழியும்—கோவை
திருவாசகமுந்திருமூலர்சொல்லும்
ஒருவாசகமென்றுணர்.

என்று ஆன்றோரால் விதந்து கூறப்பட்ட நூல்களுள் ஒன்றாகிய திருமூலர் மந்திரம் முன்னும் பலரால் அச்சிட்டு வெளியிடப்பட்டதாயினும் அவர்பதிப்புக்களெல்லாம் சுத்த பாடமெனக் கொள்ளத்தகாதனவாயின.

திவ்வியாகமசாரமாகிய திருமந்திரம் சொரூபந்திரியின் அதனால் வரத்தக்க ஏதம் பெரிதாமன்றோ. அதனையுணர்ந்த தமிழ்ப்பண்டிதர் மாவை, வே. விசுவநாதபிள்ளையவர்கள் பல்லாண்டுகளாகப் பல பிரதிகள்தேடி அறிஞருதவி கொண்டராய்ந்து வழூக்களைந்து சுத்தபாடஞ் செய்து நல்லபதிப்பாக அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றார்கள். அவர்கள் செய்த இப்பரோபகாரம் தமிழ்நாடு எஞ்ஞான்றும் மறக்கற்பாலதன்று.

தமிழ்நாடுய்யுமாறு திருமூலர் வாயிலாகப் பரம கருணாநிதியாகிய சிவபெருமான் தமிழிலே ஆகமசாரத்தைத் திருமந்திரம் என்னும் பெயரினாலே அருளிச்செய்தனர். தமிழ்வேதத்தை நால்வர் வாயிலாக அருளிச்செய்தனர். தமிழிலே வேதாகமங்கள் இல்லையென்று தமிழ்நாடு எங்காவண்ணம் அருளிச்செய்யப்பட்ட நூல்களுளொன்றாகிய திருமந்திரம் முத்திசாதன நூலாகவும் அதனை இதுகாறுஞ் சுத்தப்பிரதிசெய்யாது வழங்கிய தமிழ்நாட்டாருக்கு இப்போது சுத்த பாடமாக்கிக் குறிப்புரையோடு அச்சிட்டு வெளியிட்ட பரோபகாரத்தினும் சிறந்த புண்ணியம் பிறிதில்லை யென்றே கூறல்வேண்டும்.

இந்நூலை இவ்வாறச்சிட்டு வெளியிடுதற்குத் திரவியோபகாரஞ் செய்த பிரபு சிகாமணிகளும் சிவஞானச் செல்வர்களுமாகிய திவான் பஹதூர், சர், எஸ். சுப்பிரமணிய ஐயவரவர்கள், ஸ்ரீமாந் கௌரவ: பொ. ராமநாதன் அவர்கள், ஸ்ரீமாந்: மெ. அரு. நா. ராமநாதச்செட்டியாரவர்கள், ஸ்ரீமாந்: மெ. அரு. அரு. அருணாசலச்செட்டியாரவர்கள், ராவ் பஹதூர்: கே. வைத்தியலிங்கம்பிள்ளை யவர்கள் முதலியோரது பெரு வண்மையும் வண்மையாக மதிக்கத்தக்கது.

மந்திரப் பாசுரங்கள் தோறுமுள்ள அரும்பதங்களுக்கும் புதை சொற்களுக்கும் பொருள் நன்றாகக் கூறப்பட்டிருக்கின்றன. சித்தாந்த பானுவாய்ப் பரசமய விருளகற்றத் திருமறைக்காட்டில் அவ

தரித்து விளங்கும் பிரமஸ்ரீ: ரமணசாஸ்திரிகள் M. A. அவர்கள் இந்நூலுக்கு எழுதியிருக்கும் நூன்முகத்தேயுள்ள விஷயங்கள் யாவருள்ளத்தையுங் கொள்ளை கொள்ளத்தக்கன.

இப்பதிப்புச் சிறப்பைத் தமிழ்த்தலைமைப் புலமை பூண்டு விளங்கும் பிரமஸ்ரீ: உ. வே. சுவாமிநாத ஐயரவர்கள் பாயிரத்தாற் பாராட்டியுள்ளா ரென்னில் நாம்புகழ்வது மிகையாம்.

இந்நூல் டெமி எட்டாகமடித்த 700 பக்கங்கொண்டது. அச்சுவனப்பும் கட்டுச்சிறப்பும் கண்ணைக்கவருமியல்பின விலை ரூ 3-8-0 வேண்டுவோர் சென்னை ரிப்பன் அச்சுச்சாலையிற் பெற்றுக்கொள்க.

யாழ்ப்பாணம்,
நாவலர்கோட்டம்.
20—1—13.

இங்ஙனம்,
ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.

௨

# புத்தக வரவு.

——:o:——

வியாசங்களும் உபந்நியாசங்களும்:—இப்புத்தகம் மகிபாலன் பட்டி ஸ்ரீமான் மு. சின்னையா செட்டியாரவர்களால் எழுதப்பட்டுப் பல பத்திரிகைகளில் வெளியிடப்பெற்ற வியாசங்களும், அவர்கள் பல சபைகளிற் பேசிய உபந்நியாசங்களும் அடங்கியுள்ளது.

இதனுள் கல்வி, ஆசாரச் சீர்திருத்தம், பொதுவான சிலநீதிகள் முதலிய உலக நடைக்கநுகூலமான பலவிஷயங்களும் தமிழ்மக்கள் எல்லோர்க்கும் விளங்கும்படி இனிமை வாய்ந்த தெளிவான தமிழ் நடையிலெழுதப்பட்டிருக்கின்றன. தொன்றுதொட்டு விதிவழியொழுகிவரும் சில வொழுக்கங்களையும் இக்காலத்துக்கிணங்க மாற்றிகொள்ளவேண்டுமென்பது பற்றி யெழுதியுள்ள சில வியாசங்களுமுள்ளன. அவை, ஒவ்வொரு வகுப்பினருள்ளும் கல்வி, அறிவு, ஒழுக்கம், குடிப்பிறப்பு, செல்வம், முதலிய பலவகையாலும் மேம்பட்ட பொதுக்கூட்டங்களின் அங்கிகாரத்தாற் பயன் பெறவேண்டுமாயினும், அக்கூட்டங்கள் கூடுதற்கும், அவர் பரியாலோசிப்பதற்கும் சாதகமாகுமென்பதிற் றடையில்லை. இத்தகைய புத்தகங்கள் இக்காலத்தில் மிகப்பயன்படத்தக்கன. இதன் விலை அணா 12.

☞ மேற்கண்டபுத்தகம் பாண்டியன் புத்தகசாலையில் வழக்கப்படி சேர்க்கப்பட்டது.

பத்திராதிபர்.

———

பூங்கமலக்கோயிலாள்புத்தமிர்தினுட்பிறந்தாள்
வீங்குதுணைமுலையாள்வெண்ணகையா—ளோங்குபுனற்
பொன்னிநடுவுட்பொருண்மார்பகத்தாளென்
சென்னிபிரியாத்திரு. (120)

இது மகடூஉப் பொருட்டன்மை. இதனுள் பொன்னிநடுவுட் பொருள் என்ற தீண் டாற்றிடைக் கண்வளர்ந்த நம்பெருமாள். திணை - இதுவுமது. துறை - பெண்பாற்கடவுள்வாழ்த்து.

முப்புரிநூன்மார்பினன்முக்கோல்கைக்கொண்டுளான்
பொய்ப்புலனைவென்றபொறையுடையான்—மெய்ப்பொருளைச்
சேவிக்குநண்ணுணர்வான்சிநிவாதன்றமியே
னுவிக்கருள்புரிந்தாள்வான். (121)

இது ஆடூஉ மக்கட்டன்மை. ஆவியை என்பது ஆவிக்கென இரண் டாவது நாலாவதாயிற்று. திணை - வாகை. துறை - தாபதவாகை; என்னை? "பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாம, லொருவழிப் படுப்பது தொகைநிலைப் புறனே" "மனத்தினை யொருவழி நிறுப்பது போறையே" "நிறுத்திய மனத்தினை நிலைதிரி யாமற், குறித்த பொரு ளொடு கொளுத்துத லினைவே" என்ற முறையே தொகைநிலை பொ றைநிலை நினைதலென்னு மூன்று மிப்பாட்டினுள்ளேகூறினமையான் "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்னுஞ் சூத்திரத்துள் நாலிருவழக்கிற் றாபதபக்கமு மென்னு மெட்டனுள் தவஞ்செய்து யோகம் பயில்வார்க்குரிய விம்மூன்றும் வந்தமையா லெனக்கொள்க.

கூரெயிற்றுருண்கண்ணூர்கொம்மையிளமுலையார்
வார்புருவத்தார்திலகவாணுதலார்—காரகத்தெம்
மால்வரையாரெண்ணிறந்தமாதருணின்றூற்குறித்த
கோல்வளையாராரிறைவகூறு. (122)

இது மகடூஉமக்கட்டன்மை. கூரெயிறு - கூரியபல். உண்கண்- மையுண்கண். கொம்மை - திரட்சி. இளமை - மேனிவனப்பு. வார் புருவம் - நீண்டபுருவம். கோல்வளை - திரண்டவளை. வாணுதல் - ஒளிபொருந்திய நுதல். பகுதி - சேட்பபடை. துறை - அறியாள் போன் றவனினைவுகேட்டல்.

வள்ளுகிருந்தோலடியுஞ்செவ்வாயும்வார்சிறைகூர்
புள்ளியுமென்சூட்டுமுறுபொற்பினதா—மொள்ளியரை
மாறிவருவாதியரைவென்றமகிழ்மாறனு
ரேறிவருவெள்ளோதிமம். (123)

இது உயிருளதா யியங்குமஃறிணைத்தன்மை. வள் - கூர்மை. தோலடி - என்பில்லாத அடி. புள்ளி - பொறி. திணை - பாடாண் பொதுவியல். துறை - அன்னவாழ்த்து. என்னை? பாலறிமரபிற் பொருநர் கண்ணும் வாகைத்திணையுட் கூறிய சூத்திரம்போல வென்றி கூறுது அன்னத்தினது தன்மைகூறியதனுலும் வாழ்த்தெல்லாம் பாடாணுதலாலு முணர்க.

பரிபரைத்தாய்த்திணிவயிரம்பயின்றுநிலங்கிளைமுதற்ருய்
விரிசினைத்தாய்ப்பசுந்தழைத்தாய்விரைமலர்த்தாய்விழைகனித்தாய்ப்
பெரியகதிரவன்மறைந்தபிழம்பிருட்குமுறங்காது
வரிவளையூர்புனற்குருகூர்மகிழ்மாறர்திருப்புளியே. (124)

இது உயிருளதாகி யியங்கா வஃறிணைத்தன்மை. இவை யிரண்டுங் கடவுட்டன்மையுடைத்தாயினு முலகின்கட் டோன்றும் வடிவமஃறிணைத்தன்மைய வாதலி னிங்ஙனம் கூறுவதாயிற்று. திணை - இதுவு மது. துறை - தாவரவாழ்த்து. பா - தரவு கொச்சகக்கலிப்பா. இருள் - ஆகுபெயர்.

ஆதாரபீடத்தமர்ந்துயர்ந்தபாதசெடி
மீதாயமுந்தமிழித்துஙிமிர்தாட்டுணைத்தாய்த்
தாழ்ந்ததுதிக்கையினைத்தாவியிருகைபற்ற
வாழ்ந்தபகுவாயகத்தோங்குநாவின்
வளைபெயிற்றுக்கூர்ங்கோட்டுவான்பிடர்விழ்கற்றை
யுளைவனப்பிற்பாங்கருயர்செவித்தாயொண்கருக்கி
னுழொன்றியசிர்த்தொடேற்றமுறுமாளியின்மே
லாழங்குடைத்தாயதன்மேற்கொளாளியதாய்
நான்றதலைப்போதிகைத்தாநாவிறர்வண்புளிக்கீழ்த்
தோன்றுதிருக்காவணக்கற்றூண். (125)

இது உயிரிலஃறிணைத்தன்மை. இது பத்தடியான்வந்த பஃறொடைவெண்பா. திணை - இதுவுமது. துறை - மதலை வாழ்த்து.

நீண்டசெவியுறவினீள்புருவத்திம்பரொளி
கூண்டுபயநோக்கமுங்கைக்கொண்டதாம்—பாண்டவர்தந்
தேர்ப்பாகனனசிறுபுலியூரானுலகங்
காப்பான்றன்மால்வரையாள்கண். (126)

இது சினைத்தன்மை. உபயநோக்கம் - அருணோக்கமு மருணோக்கமும். பகுதி - சேட்படை. துறை - கண்ணயப்புரைத்தல்.

கைச்சிரத்தானுந்துதிப்பக்கன்றினராகந்திறந்து
பச்சிரத்தமுண்டுயிருண்பான்மைத்தே—வச்சிரத்தாற்
குன்றெறிந்தானும்பரவுங்கோயிலான்பாரதப்போர்க்
கன்றெறிந்தவன்சக்கரம். (127)

இது வினைத்தன்மை. ஆகம் - மார்பு. திறத்தல் - பிளத்தல். பச்சிரத்தம் - குளிர்ந்த ரத்தம். அன்று - முற்காலத்து. குவ் வுருபு மயக்கம். திணை - வாகை. துறை - திகிரிவென்றி.

பூரித்துடலம்புளகித்திடப்புலமை
சீரித்துயிர்தளிர்ப்பச்சேர்ந்துருகும்—பாரித்த
முத்தமிழ்மாறன்ஞானமுத்திரைக்கைகண்டுதொழு
முத்தமராய்வாழ்வாருளம். (128)

இது பண்புத்தன்மை. பூரித்தல் - தடித்தல். புளகித்தல் உரோமஞ்சிலிர்த்தல். புலமை - அறிவின்றன்மை. சீரித்தல் - இடைவிடாமற் பழகுதல். தளிர்த்தல் - தழைத்தல். சேர்ந்துருகுதல் - பரத்துவ சொரூபத்தை யோகித்துக் குழைதல். பாரித்தல் - விரித்துரைத்தல். முத்தமிழ்-சித் தசித் தீச்சுர மூன்றுங் கூறுந் தமிழ்; அது திருவாய்மொழி. உளம் - ஆன்மஞானம். முத்தமிழ்மாறன் ஞானமுத்திரைத் திருக்கையைக் கண்ணினாற் கண்டுங் கையினாற்றொழுது முத்தமராய் வாழ்வாரது ஆன்மஞானமான துடலந் தடித் துரோமஞ்சிலிர்ப்பப் பரத்துவஞானத்தோடும் பயின்ற பரத்துவ சொரூபத்தை யோகித்துக் குழையுமெனக் கூட்டுக. திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப்பரவல்.

உற்றபரமேட்டிமுதலோங்கியவைம்பூதநிலை
பெற்றுளதாய்ச்சோதிப்பிழம்பதாம்—பற்றிலர்பே
ரானந்தமெய்துவதாமாதியிடையென்பவுடன்
ருனந்தமில்லான்றலம். (129)

இது இடத்தன்மை. பரமேட்டி முதலாய வைம்பூதமாவன:— பரமேட்டி, புமான், விச்சுவம், நிவிர்த்தி, சருவன். இது பரமபத மாகிய இடத்தன்மை. திணை - பாடான்பொதுவியல். துறை - புலவ ரேத்தும் புத்தேளுடுவாழ்த்து. புலவர் - நித்தியசூரியர்.

ஏழாவரணமிசைந்தீர்ந்தண்புனற்பொன்னி
சூழாமணிமாடஞ்சூழ்ந்துளதா—வாழ்மறையோர்
வேதவொலியும்விழாவொலியுங்கூர்தகைத்தா
நாதனரங்கநகர். (130)

இதுவு மிடத்தன்மை. திணை - இதுவுமது. துறை - நகர் வாழ்த்து.

தேவும்புவனமுந்திரண்டமன்னுயிர்
யாவும்பாவருமிறந்தொடுங்கியஞான்
றொருபெருந்திருமாலுந்தியங்கமலத்
தருள்பகிரண்டகோடிகளெனுமவற்று
ளொன்றபனுலகாதியாயவீரேழி
னயனிலைமேருநடுக்கொள்பூலோக
நவகண்டமதாநாவலந்தீவொடு
முவரொன்றியநீருடைக்கருங்கடலொடு
மேழ்பெருந்தீவுமேழ்பெருங்கடலும்
வாழ்வுடைத்தாகியும்வானவர்வைகு
மேமபூதலமிடையிடுதிகிரிக்
காமர்மால்வரைகடந்தகன்னிருளா
யண்டபித்திபினகத்தண்டகோளகைக்கீழ்
மண்மொழ்புனற்குமேல்வடக்கொடுகுணக்கெதி
ரைம்பதுகோடியோசனைத்தெனவளவை
யும்பரோடிப்பருமுனார்வுறவுணர்வான்

நீதருபான்மையிற்றெருட்டும்
போதமுற்றோங்கியபுராணசித்தமதே. (131)

இதுவும் இடத்தன்மை. திணை - இதுவுமது. துறை - பேரண்ட வாழ்த்து. இதனுள், தே என்றது அன்னியதெய்வங்கள். புவனம்- இருநூற்றொருபத்துநாலு புவனமும். யாவும் யாவரும் - அஃறிணை களும் உயர்திணைகளும். மேருநடுக்கொள்பூலோகம் - மேருவைத் தனது மத்திமத்தே தாங்கிக்கொண்ட பூலோகம். வானவர் வைகு மேமபூதல மிடையிடுதிகிரிக் காமர்மால்வரை - கடவுளர் அரமகளி ரோடு மின்பமெய்திவைகும் ஏமபூதலத்தை நல்லதண்ணீர்க்கடற்குந் தனக்கும் நடுவாகவைத்த சக்கரவாளகிரி யென்னு மழகிய பெரிய மலை. மண்டுமொழ்புனல் - கெற்போதகம். வடக்கோடு குணக்கெதிர் என்பது வடதிசைக்குங் கீழ்த்திசைக்கு மவற்றிற் கெதிரான தென் றிசைக்கு மேற்றிசைக்கு மென்பதாம். புராணசித்தம் - ஆகுபெயர். ஒழிந்த அகலமு முரையிற்கொள்க. பா - நேரிசையாசிரியம். எனவு மென்னு மும்மை யெச்சவும்மையாதலாற் காலத்தன்மையு முள.

நித்தமாய்மூன்றுநெறித்தாயிலவமுதல்
வைத்தபான்மைக்குரித்தாமாண்பிற்றே—யத்திகிரிச்
செங்கண்மாலுந்தியின்மேற்செங்கமலத்தோன்முதலா
மங்கண்ஞாலம்புகழ்காலம். (132)

இது காலத்தன்மை. இதனுண் மூன்று நெறியென்றது இறப் பெதிர்வு நிகழ்வு. இலவ முதலியனவும் முறையே பிரமகற்பமீறாக வுணர்ந்துகொள்க. திணை - பொதுவியல். துறை - பருவவாழ்த்து. தன்மையலங்கார முற்றும். (௬)

92. உவமையின்வகையேயுணருங்காலை
வினைபயனுருப்புருவென்றநான்கினுந்
தமிதமிநிகழ்ந்துதம்மின்விரவியுங்
காதல்சிறப்பேநலன்வலியுடனிழி
போதியவைந்துமுறுநிலைக்களனு
யிருதிணையைம்பாலிவற்றோடுமயங்கிபு
முதலொடுசினைகளின்முறைமையிற்பிறழ்ந்து

முதல்சினைவினைகுணமின்றியுமுயர்ந்தும்
பெருமையுஞ்சிறுமையும்பெற்றியிற்சிறந்து
மெண்மெய்ப்பாட்டினெழில்பெறமரீஇ
யகத்தினும்புறத்தினுமமர்தருநெறித்தா
யுரனுடையுரவோருளங்கொளமுதனூல்
வரன்முறைபுணர்க்குமாண்பிற்றாகும்.

(எ - ன்.) வைத்தமுறையானே உவமையென்னு மலங்காரத்தி னது பொதுவிலக்கண முணர்—ற்று.

(இ - ள்.) உவமையென்னு மலங்காரத்தினது கூறுபாட்டை யாராயுமிடத்து வினையும் பயனு முறுப்பு முருவு மென்னு நான்குங் காரணமாகத் தோன்றுவனவாகியும், அங்ஙனந் தோன்றுவன வொரு பொருளோ டொருபொரு ளுவமஞ் செய்யும்வழி யொன்றேயன்றி யிரண்டு மூன்று விரவுவனவாகியுங், காதலுஞ் சிறப்பு நலனும் வலியு மவற்றோடுங் கிழக்கிடும்பொருளுமாகிய வைந்துந் தமக்கு நிலைக்களனாகியும், உயர் திணைக் குயர் திணையு முயர் திணைக் கஃறிணையு மஃறிணைக் கஃறிணையு மஃறிணைக் குயர்திணையு மாண்பாற் காண்பாலு மாண்பாற்குப் பெண்பாலும் பெண்பாற்குப் பெண்பாலும் பெண்பாற் காண்பாலும் ஒருமைப்பாற் கொருமைப்பாலு மொருமைப்பாற்குப் பன்மைப்பாலும் பன்மைப்பாற்குப் பன்மைப்பாலும் பன்மைப்பாற் கொருமைப்பாலு மயங்காதும் மயங்கியும், முற்கு முதலும் முதற்குச் சினையும் சினைக்குச் சினையுஞ் சினைக்கு முதலுமாகப் பிறழாதும் பிறழ்ந்தும், முதலுஞ் சினையும் வினையுங் குணனு மின்றியு முவமங் கூறுவனவாகியும், பொருளினு முவம முயர்ந்த மிறப்பவுயர்வு மிறப்ப விழிபு முவமிக்குங்கா லின்னாவாகச் செய்யாது கேட்போர் மனங் கொள்ளும்படி சிறப்பிற்றிராவாகிச் சேர்தலியல்புசிறந்தும், எட்டு மெய்ப்பாட்டினோடுங் கூடி யழகுபெறுநிலைமைத்தாகி, அகப்பொருளி னும் புறப்பொருளினுஞ் சென்று பொருந்துநெறியையுடைத்தாய்க் கற்றுவல்ல அறிவுடையோ ரறிவிற்குப் பொருந்த முதனூல் வர லாற்று முறைமையிற்றிரியாது சேர்க்கப்பெறும் பெருமையை யுடைத்தென்றவாறு. இதனுள் நான்கினுமென்ற வும்மை யெச்சவும்மை யாகலா னவை நான்குமே காரணமாகி யவற்றோடுஞ் சொற்பொருள்

காரணமாகவு முவமை பிறக்குமென்றவாறு. அவை மேற் கூறப் படும். மயங்கியும் பிறழ்ந்து மென்பது எதிரதுபோற்று மெச்ச வும்மை. அகத்தினும் புறத்தினுமென்பது எதிரதுபோற்றுந் தந்திர வுத்தி. இவற்றிற்கெல்லாம் உதாரணம் உரைநடையானுஞ் செய்யு ணடையானும் வருமாறு:—

புலியன்ன மறவனென்பது வினையுவமம். மாரியன்ன வண்மை யென்பது பயனுவமம். துடியன்ன விடையென்பது உறுப்புவமம். செவ்வானன்ன மேனியென்பது உருவுவமம். செவ்வானன்னமேனி யென்பது வண்ணமொன்றுமே பற்றி யுவமஞ்சென்றது. "ஊர்ந்த தேரேசேர்ந்தோளுமையே, செவ்வானன்னமேனியவ்வா, னிலங்கு பிறைபன்னவிலங்குவால்வையெயிற்" றென்பது வண்ணத்தோடு வடி வும் பற்றி யுவமஞ் சென்றது.

வள்ளைக்கொடிமிசைபாய்மைக்கயல்போல்வர்குழையி
னுள்புக்குலாவருமையுண்கண்ணாய்— புள்ளார்
வகுளாம்புயன்வரைமேல்வான்பிறைக்குன்செங்கை
முகுளாததென்னோமொழி. (133)

இதனுள் வினையு முருவு முறுப்புமாகிய மூன்றுவமையு மொரு பொருட்கண்ணே பிறிதொருபொருளுங்கூடி வந்தவாறு காண்க. இவை விரவுவமை. பகுதி - நாணநாடல். துறை - பிறைதொழு கென்றல்.

பாவையன்ன பலராய மாண்கவின் எ - து. மகள்கட்சென்ற காதலுவமைக்கு நிலைக்களனாயிற்று. என் யானை யென்பது மது. "முரசமுழங்குதானை மூவருங்கூடி, யரசவையிருந்த தோற்றம்போ லப், பாடல்பற்றிய பயனுடையெழாஅற், கோடியர்தலைவகொண்ட தறிந" எ - து சிறப்பினாற்பெற்ற வுவமமாதலிற் சிறப்பு நிலைக்களனா யிற்று. உலகத்து ளியல்புவகையானன்றி விகாரவகையாற் பெறுஞ் சிறப்பு 'ஓவத்தன்ன விடனுடைவரைப்பின்' என்புழி அந்நகரின் செயற்கைநலந் தோன்றக்கூறினமையின் நல னிலைக்களனாயிற்று. நலனென்பது அழகு. "அரிமாவன்னவணங்குடைத்துப்பிற், றிரு மாவளவன்றெவ்வர்க்"கென ஒருவன் வலிநிலைக்களனாயிற்று. "அரவு நுங்குமதியி னுதலொளிகரப்ப" என்றது ஒன்றினிழிபுதோன்ற வுவ மித்தலி னிழிபுநிலைக்களனாயிற்று.

குமரனனையா னுங்குறமகளன்னாரு
மமரர்குழாமெனக்கூண்டனர்—தமரனங்கே
நின்றிறைஞ்சுமாயோனேநின்றவூரங்கிதன்முன்
சென்றிறைஞ்சுவார்நீதிரும்பு. (134)

இதனு ளுயர்திணைக் குயர்திணையும் ஒருமைப்பாற் கொருமைப் பாலும் பன்மைப்பாற்குப் பன்மைப்பாலும் ஆண்பாலுக் காண்பாலும் பெண்பாற்குப் பெண்பாலும் வந்து திணையும் பாலு மயங்கா துவமை யாயிற்று. பகுதி - உடன்போக்கு. துறை - இயைபெடுத்துரைத் தல். நகாடைந்தமை கூறலுமாம்.

"மகிழ்வார்க்கு மல்லார்க்குந், தாயாகித் தலையளிக்குந்தண்டுறை யூரனி," "கலங்கவிழ்ந்தாய்கன்போற் களைதுணைபிறிதின்றிப், புலம்பு மென் னிலைகண்டுப் போகலனே யென்றியால்" என்பனவிவை யாண் பாற்குப் பெண்பாலும் பெண்பாற் காண்பாலு மயங்கிவந் துவமையா யிற்று.

அரிக்குழாமன்னவடலரக்கர்வாவும்
பரிக்குழாந்தேர்க்குழாம்பாயுங்—கரிக்குழா
மோர்வாளிபட்டுருள்வானேக்குசிலைக்கால்வளைகைக்
கார்வானமாலிமையோர்கண். எனவும் (135)

பிறைபுரைவெண்கோட்டுப்பிணர்த்தடக்கைவேழத்
திறைபுரந்தபொன்னகருக்கிப்பா—ருறைதருவான்
பூணவாவற்றெனமால்பொற்புருடையாட்கிரங்கும்
வேணவாநெஞ்சேவிடு. எனவும் (136)

வருமிவற்றுள் உயர்திணை யாண்பாற்பன்மைக் கஃறிணையாண்பாற் பன்மையும் அஃறிணைப் பன்மைச்சினைக் குயர்திணை யொருமை முத லும் மயங்கிவந் துவமையாயிற்று. வேழத்தையுடையவிறை - ஈண் டிந்திரன். அற்றென - அதுபோலுமென. பூணவா - மனத்துட் பூண்ட ஆசை. வேணவா - வேட்கைப்பெருக்கம். இவ் விரண்டி னுள் முன்னது திணை - வாகைப்பொதுவியல். துறை - வில்வென்றி; அல்லது திணை—பாடாண். துறை - கடவுள்வாழ்த்துமாம். பின் னது பகுதி - இரவுக்குறி. துறை - அருமைகேட்டழிதல்.

முத்தநகைவெம்முலைபோன்மலைகொடியே
யெய்த்தவிடைநுதலுக்கேந்திழா—யொத்தது தா
னேற்றுருவங்கொண்டநிலாத்தளிரேகூற்றுருவம்
வேற்றுருவங்கொண்டனையாண்மெய். (137)

இதனுள் பன்மைச்சினைக்குப் பன்மைச்சினையும் பன்மைச்சினைக் கொருமைமுதலும் ஒருமைச்சினைக் கொருமைமுதலும் ஒருமைச் சினைக்கு ஒருமைச்சினையும் பெண்பாற் கான்பாலும் மயங்காதும் மயங்கியும்வந் துவமையாயிற்று. இதனுண் முத்தமும் நகையும் முலையும் சாதியேகவசனம். பகுதி - சேட்படை. துறை - தலைவ்ன் பாங்கிக் கவயவங்கூறல்.

கருஞாயிறன்னன், விசும்புதோ லுரிப்பனபோல, மலைநடந்தனைய, அமிர்துபுளித்தாங்கு இவை முதலுஞ் சினையும் வினையுங் குணமு மில் லாதன வுவமையாயின.

"கடல்கண்டன்னகண்ணகன்பரப்பின்," "மாரியன்னவண் மைத்,தேர்வேளாயைக்காணிய," "தெள்ளமிர்தென்னத்திருந்தியதே மொழி," "ஏறுபோற்பீடுநடை" என்பன உவமையினதுயர்ச்சியாற் பொருட்குயர்ச்சியாயின.

"அவாப்போலகன்ற வல்குன்மேற்சான்றோ, ருசாப்போலவுண் டேமருங்கு" லென்பன கழிய பெரியவாயினுங் கழியசிறியவாயினுஞ் சிறப்பிற்றீராவுவமையாயின. சிறப்பிற் றீர்வனவு முவமவொழிபிற் கூறுப. எண்மெய்ப்பாட்டினும் அகத்தினும் புறத்தினும் வருவன முந்துநூல்களுட் கண்டுகொள்க. அஃதாக இதன் முதனூல் செய்த தெண்டியாசிரியர் பண்புமுதலாகக் காரண மூன்றென்ப துணர்ந்து மிந்நூலுடையா ருருப்பினைக்கூட்டிக் காரண நாலென்பதூஉ நிலைக் கள னைந்தென்பதூஉ மிகைபடக்கூறலென்னுங் குற்ற மாமாலோ வெனின்? ஆகாது ; என்னை? தெண்டியாசிரியர் "வடிவி னளவின் வண்ணத்தின்வரூஉ" மென்னுஞ் சூத்திரநோக்கி வடிவும் பண்பினு ளடங்குமென் றுட்கொண்டாரேனு மிந்நூலுடையார், உற்றுணரும் பண்புங் கட்புலனும்பண்பு மெனப் பண்பினை வேறுபடக் கொண் டார், அங்ஙனங்கோடல் வடிவுபற்றிய பண்பு இருளின் கண்ணும்

16

உற்றுணரப்படும்; வண்ணமாகிய கட்புலனும் பண்பு அவ்வாறுணரப் படாதாதலால் வடிவினைக்கூட்டி நாலென்றார். அன்றியும், "வினை பய மெய்யுரு வென்ற நான்கே, வகைபெறவந்த வுவமைத்தோற்றம்" எனவு மிக்கருத்தேபற்றி முதனூல்செய்த ஒல்காப்பெருமைத் தொல் காப்பியனாருங் கூறினர்; இதற் கதுவு முக்குநூலாகலின் அவர் கருத்தே யிந்நூலுடையாரும் உட்கொண்டாரென வுணர்க. அன்றி யும், "விரவியும் வரூஉ மரபின வென்ப" "சிறப்பே நலனே காதல்வலி யோ, டந்நாற் சொல்லு நிலைக்கள னென்ப" "கிழக்கிடும் பொருளோ டைந்து மாகும்" "முதலுஞ் சினையுமென் றாயிருபொருட்கு, நுதலிய மரபினுரியவையுரிய" "உயர்ந்ததன்மேற்றேயுள்ளுங்காலை" பெருமை யுஞ்சிறுமையுஞ்சிறப்பிற்றிராக், குறிப்பின் வரூஉ நெறிப்பாடுடைய" "பெருமையுஞ் சிறுமையு மெய்ப்பாடெட்டன், வழிமருங்கறியத் தோன்றுமென்ப" எனவுங்கூறிய சூத்திரங்களானு மேனையவு முணர்க. (எ)

93. அதுவே,
நிறைவினுங்குறைவினுநிகழ்த்துதனெறித்தாய்த்
துறைதொறும்பழமையும்புதுமையுந்தோய்ந்து
விரியினுந்தொகையினும்விழுமிதினடைபெறும்.

(எ - ன்.) இதுவும் அவ் வுவமைக்காவதோர் பொதுவிலக்கண முணர்—ற்று.

(இ - ள்.) அதுவே—அவ்வகைப்பட்ட வுவமை யென்னுமது, நிறைவுவமை குறைவுவமை யெனப் புலவராற் கூறுதலைத் தனக் கிலக்கணநெறியாக வுடைத்தாய் வினைமுதலாய் நால்வகைப்பட்ட இடந்தோறு முந்துநூற் புலவராற் கூறப்பட்ட தொன்மைத்தாகியு மதன்பின்ன ரவ்வவ காலத்துப் புலவராற் புதுவது புதுவதாகக் கூறப் பட்டு வருவனவுமாகப் பொருத்தமுற்று விரியுவமை தொகையுவ மை யென இருதிறத்தினும் விழுமிதாக நடைபெறு மென்றவாறு. விழுமிதினென்று சிறப்பித்தவதனால் இவைநான்கும் இனிமேல்வரும் விரியுவமையனைத்திற்கும் பொதுவா மெனவும், இன்னுமவ் விலேசா னே அவற்றுள் விரியுவமையுந் தொகையுவமையும் வினைமுதலிய

நான்கினோடு மெட்டா மெனவுங் கொள்க; என்னை? "நாலிரண்டா கும் பாலுமாருண்டே" என்றாராகலின். (அ)

94. அவற்றுள்,

முக்கியப் பொருட்டிற முற்றுத னிறைவே.

(எ - ன்.) நிறைவுவமையின திலக்கண முணர்---ற்று.

(இ - ள்.) உவமேயத்தி னன்குகூறுபாடு முவமையினு முற்றக் காண்பன நிறைவுவமையா மென்றவாறு.

ஆராவமுதமளித்ததிருப்பாற்கடலு
ணாராயணனுகண்ணமீது—நேரிழா
யெப்படியேகண்வளராநின்றானெனுமரங்கத்
தப்படியேகண்வளர்வானும். (138)

இது நிறைவுவமை. இதனுள்,திருப்பாற்கடலுதனுவமை. ஆரிய ரிதனைப் பூரணவுவமை யென்ப. அங்ஙனமாதல் அவன் கண்வளரா நின்றதுபோல விவனுங் கண்வளராநின்றானென வினையுவமையும், அவன் திருமேனி யெப்படியே யிருக்குமென்னும் அப்படியே யிவன் திருமேனியு மிருக்கு மெனவே வடிவினோடு காந்தியாகிய பண்பும், அவனைச்சேவிப்பார்க் கச்சேவை காரணமாக முத்தியாகிய காரியம் பயக்கு மதுபோல விவனைச் சேவிப்பார்க்கு முத்தியாகிய காரியம் பயக்குமெனப் பயவுவமையு முவமையாகிய திருப்பாற்கடலிடத்தும் வினைமுதலிய நான்கும் பூரணமாகி யுவமை யுயர்ந்தபடியுங் காண்க. எப்படியே கண்வளராநின்றானெனு மென்பது பிரமன் முதலாயினோர் புராணங்களெப்படியே கூறுமென்பதாம். பயவுவமையென்பது ஒன் றன்றொழிலேதுவாகப் பிறக்குங்காரியம். அஃதெச்சமாயிற்று. நேரி ழா யென்பது மகடூஉமுன்னிலை. இரண்டாற்றிடையரங்கத்துத் திருமதிட்குப் பாற்கடனள்ளிடை யாவரண முவமை. திணை—பா டான். துறை - கண்படை வாழ்த்து.

பனிமதிக்கிரணம்வியன்களநடவெட்
பரந்துடல்கதுவுபோர்ப்பாய்மா
முனியுறப்பொழியுமிருண்மதமுடுக்க
முாணிழந்திரியல்போம்வேடர்

குனிதிரைத்திருப்பாற்கடலினைக்கடைநாட்
கொதித்தெழுங்கருவிடந்தொடரத்
தனிதனியுலக்கற்றறிவிழந்திரிந்த
தலைமைவானவரையொத்தனரே. (139)

இதுவுமது. இதனுள் திருப்பாற்கடலீன்ற கருவிடந் தொடர்ந்தது வெண்ணிலவு வியன்களஃடுவெட் பரந் துடல் கதுவிய போர்ப்பாய்மாப் பொழியு மிருண்மத முடுக்கினதற்குவமை. முரணிழந்திரியல்போம் வேடரென்பது தனித்தனி யொருவர்க்கொருவ ருதவாது ஓடின தலைமைவானவரை யொத்தன ரென்றவாறு. இருண்மத முடுக்கவெனவே பண்பும் வடிவும் வினையுவமையும், அறிவிழந்தென வே அதனாலாய காரிய மாதலாற் பயனுவமையுமாகிப் பூரணவுவமை யாயவாறு காண்க. (கூ)

95. ஒன்றூதியசில வொப்பது குறைவே.

(எ - ன்.) குறை வுவமை யாமா றுணர்—ற்று.

(இ - ள்.) உவமேயத்தின் வினைமுதலிய கூறுபாடு நான்கும் ஒவ்வாது அவற்றுள் ஒன்றுமுதன் மூன்றீறுப்பது குறைவுவமையாமென்றவாறு. இது "ஒரீஇக்கூறலு மரீஇயபண்பே" என்பதன் பாற்படும்.

வாவித்திருக்குருகூர்மாறநின்வண்டமிழென்
றூவிற்கினிமைநயப்பதாற்—றேவர்
மருந்துநிகரென்றேமதித்துரைப்பன்முற்றப்
பொருந்துவமற்றின்மையினிப்போது. (140)

இது ஒன்றேத்த குறை வுவமை.

வெள்ளைப்பிறைக்கோட்டுவெங்கரியைவென்றவிரற்
பிள்ளைப்பெருமான்றென்பேரைவாழ்—வள்ளைக்
குழையாரைத்தோய்ந்தகன்றகொற்றவனைக்காய்ந்த
பிழைபார்பொறுப்பார்பிறர். (141)

இது இரண்டுபெற்ற வுவமை.

பாயுங்கருங்கயல்போற்பாங்கியிவளென்றுமருங்
கேயும்படிதாவினதியற்பாத்—தோயும்
புவிநாவலர்புகழ்மால்புட்குழியாள்செவ்விக்
கவினனைத்துலவுங்கண். (142)

இது தொழில் பண்பு வடிவு மூன்றும்பெற் றொன்று குறைந்த வுவமை. "அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு" "மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்,காதலை வாழி மதி" என்பனவும் எடுத்துக்காட்டுவமை எனவும் ஒன்றொத்த குறைவுவமை எனவும் படும்.

செய்யகமலமுகஞ்செங்கனிவாய்முத்தநகை
வெய்யகளபமுலைமின்மருங்குன்—மொய்யிழாய்
பையரவப்பாயலான்பாடகத்தான்மால்வரைவாழ்
தையலடிமாந்தளிர். (143)

இதுவுமது. பகுதி - சேட்படை. துறை - தலைவன்பாங்கிக் கவயவங்கூறல். வடநூலார் உலுத்தவுவமை யென்பது மிது.

முந்துநூற் புலவராற் கூறப்பட்டுத் தொன்றுதொட்டுவரு முவமையாவன:—புலிபோற்பாயுமறவன், மாரியன்னவண்மை, துடிபோற் சுருங்கு மருங்குல், பவளம்போன்ற செவ்வாய், குறைபடுமதியந்தே யக்குறுமுயறேய்வதேபோல், நஞ்சமுந்தமுமேபோல, குணத்தகரு மணியம்பாலகத்துப்பதித்தன்ன, பொருகயற்கண் என்பன முதலியன.

அதன்பின்ன ராகுங் காலங்கடோறும் புலவராற் புதுவது புதுவதாகப் புணர்த்தவற்றுட் சில வருமாறு:—

கோழரையகாஞ்சிரைதாம்பழுத்தருகேநிற்பவற்றிற்
குறுகாதாங்குக்
காழிலவாங்கொழுங்கதலிக்கனிகளைச்சேட்சென்றருந்துங்
கவிகண்மார்க்க
மூழிலவாய்ப்படைத்தபொருள்பிறர்க்குதவாவுலுத்தரைநீத்
துசிதமான
வாழ்வுடையோர்பொன்மனைச்சென்றமிர்தருந்திப்பசிதணிவார்
மார்க்கமானும். (144)

வாசமொருசிறிதின்றுயிணரூழ்த்தசெம்மலர்தம்
மருங்காய்நிற்பப்
பூசல்வரிவண்டினங்கணிளிடைப்போய்வாலிதாம்
பூந்தேன்மாந்த
லாசறக்கற்றுணர்ந்தறியாரவைக்களநீத்தேசெலச்சொல்
பவராய்நன்னூல்
காசறக்கற்றவர்கழகத்தடைந்துநலனுணர்பவர்தங்
காட்சிமானும். (145)

உற்றவயக்களிற்றினெடும்பிடியினையாங்கொருபாந்த
ளொருவாய்க்கொள்ளக்
கற்றதுகண்டிருதலைப்புளவற்றிருகைகவர்ந்தெடுப்பக்
கௌவுகாலைப்
பற்குலமுக்கிடருழத்தறவினைவந்தடியிடுநாட்
பசையதாகப்
பெற்றபொருளினைப்பேணிமுதலுமிழந்திடருறுவோர்
பெற்றிமானும். (146)

உச்சவான்மலைச்சிகரத்துறுகொடிகள்படர்பாங்க
ருடையவாகும்
பச்சைவேய்ங்கழைத்தலையிற்சுழல்வனவாய்த்தோகைநடம்
பயினுநீர்மை
மொய்ச்சுலாங்குழற்கழைக்காரிகைபாசம்பூண்டகழை
முடிமேனின்றே
விச்சைமேதகப்பவுரிகாட்டுவதாமெனக்கவினும்
விளம்பின்மன்னோ. (147)

காவின்மேற்படுபலவின்கனிகவுவன்கொடுசினைதாழ்
காமர்வல்லி
மாவின்மேற்படர்ந்ததன்மேன்மந்திகடாம்வயிற்றிடையே
மகவைத்தாங்கித்
தாவினுற்றவருடைத்தாமெனவருவதொடுபோகுந்
தன்மைகூத்த
ரோவில்வான்கழைக்கயிற்றின்முழவுதழீஇயெதிர்நடப்ப
தொப்பதாமே. (148)

வெதிரெதிர்சென்றேபொரவிண்டுகுதழலவ்வெதிரினையும்
வெண்ணீறாக்கி
யெதிர்பொருதற்றிறனறியாச்சந்தனத்தேம்பொதும்பரையு
மெரித்தமார்க்கம்
பிதிரெனவாழ்ந்திடுசிறியார்விளைத்தசினமவர்திருவின்
பெற்றிதேய்த்துச்
சதிருடன்வாழ்ந்திடுதலைமைத்தமர்திருவுந்தொலைத்திடுமத்
தன்மைமானும். (149)

வீங்குபராரைக்கழைகண்முளிந்தனவாயுயிர்த்ததழன்
மிறைசெய்காலை
யோங்குபசுங்கழைக்குலங்கண்மழைக்குலங்கீண்டுகுபுனலா
லொழித்தபான்மை
தீங்குவிளைத்திடுமுதுவருறுமிடரையக்குலத்துட்
சிறுவர்மன்னர்
பாங்குபடைத்துளகருணைமுகத்தவராற்றணித்தருளப்
பான்மைமானும். (150)

கருநிறப்பலாவுக்காழ்க்களங்கனிவகுளக்காமர்தீங்
கனிகண்மாங்கனிகள்
பெருமிதப்பலவின்கனிசுவைத்ததன்பின்
பீடுலாங்காழிலாக்கனியை
யொருமுகப்படவுண்சுகமுறுசுகமாங்
குபயநூல்களைமுறைமுறையே
குருமுகத்துணர்ந்தபின்னர்நான்மறைதேர்
குறிப்பினர்சுகம்பொருவருமே. (151)

இவை எட்டும் குருகாமான்மியத்திற் கந்தமாதனச் சருக்கத்திற் பாட்டு. இவற்றுள் நால்வகைக்கும் புதுவதா மூவமை புணர்த்தவாறுகாண்க. (௧௦)

96. உவமையுமுருபுமேதுவும்பொருளுந்
தவலருஞ்சிறப்பிற்றும்விரிவனவிரி.

(எ - ன்.) வைத்தமுறையானே விரியுவமைக் கிலக்கண முணர்த்து.

(இ - ள்.) உவமையும், உவமவுருபும், வினை பய முறுப்புரு வென்ற நான்கினு ளொன்றும், உவமேயமும் என்னு நான்கும் ஒன் றற் குவமங் கூறுமிடத்துத் தொகாது விரிவன விரியுவமையா மென்ற வாறு. தவலருஞ் சிறப்பிற் றும்விரிவன வென்றதனால் பெயருமுறை யுந் தொகையுஞ் சிதையாமல் வருதல் சிறந்ததென் றுணர்க. அவை யாவன:—பவளம்போலச் செவ்வா யென்புழி, பவளம் உவமையென வும் உவமான மெனவும் படும். போலவென்பது உவமவுருபு. செம் மை யென்பது குணமாகியவேது. வாயென்றது உவமேய மெனப் படும். இப்பெயர்—பெயர், இம்முறை முறை, இத்தொகை தொகை யெனக்கொள்க.

கருங்குவளைபோற்கருங்கண்கன்னல்போலின்சொற்
சுருங்குதுடிபோற்சுருங்கு—மருங்குல்
பிடிபோலியங்குநடைப்பெய்வளையைக்கண்டாற்
குடிபோங்குடிபோங்குணம். (152)

இதனுள் உவமைமுதலிய நான்கும் முறையே வந்தவாறு காண்க. அன்றியும், வினை பய மெய்ப் புரு வென்ற நான்குவமையு மிதனகத்து வந்தவாறுங் கண்டுகொள்க. அடுக்குத் துணிவின்மேற்று. குணம் - அறிவு. குடிபோமென்றல் தன்னிலையி னீங்குமென்றல். பகுதி - பாங்கற்கூட்டம். துறை - தலைவன் வியத்தல்.

இலவிதழ்போற்செவ்வாயியற்றமிழ்போலின்சொல்
கலைநமன்போலவடுங்கண்க—டிலகப்
பிறைபோல்வளை நுதலிப்பெண்ணமிர்தைக்கண்டா
லறைபோமறைபோமறிவு. (153)

இதுவுமது. இதனுள்ளும் நான்குவமையும் வந்தவாறுகாண்க. துறை - இதுவுமது. இதன் கண் ணடுக்குத்துணிவின்மேற்று. அறை போதல் - கிழறுத்தல். (கக)

97. உரைத்தநான்கினுளொன்றிரண்டிடையன
யாப்பினுளிடைப்பட்டெஞ்சதுந்தொகையே.

(எ - ன்.) எனைத் தொகையுவமை யிலக்கணமுணர்—ற்று.

உ

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1912ஞூ டிசம்பர்மீ 1உ முதல் 31உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ. | அ. | ப. | செலவு | தொகை ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| செந்தமிழ்ச்சந்தா வகையில் வரவு ... | 29 | 8 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு சம்பளம் செல்லாக்கிய வகையிற் செலவு ... ரூ. | 373 | 13 | 6 |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு 373-7-0 | | | | | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக் கூலி வரவு ... 63-13-9 | | | | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு ஆகாராதி போஷணைக்குச் செல் ... ரூ. | 5 | 8 | 0 |
| | | | | பைண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச் செலவு ... 54—14—3 | | | |
| ஆக பிரிண்டிங் ஆபீசு வரவு ... | 437 | 4 | 9 | ஷை ஆபீஸ் ரயில்வே சார்ஜ் செலவு 0— 4—0 | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 87—5—0 | | | | ஷை ஆபீசு கண்டின்ஜன்சிச்செலவு 20—5—7 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... 10—8—0 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 75 | 7 | 10 |
| ஆக பைண்டிங் ஆபீஸ் வரவு ... | 97 | 13 | 0 | பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ... 95—4—3 | | | |
| புத்தக விற்பனை வரவு ரூ. ... | 78 | 9 | 0 | ஷை ஆபீஸ் ரயில்வே சார்ஜ் செலவு 1—0—0 | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| சங்கம் காலிசிலம் மாக்கடை வாடகை நானது பரிதாபி-ஞு கார்த்திகைமீத்துக்கு வரவு... | 55—0—0 | | | |
| விளம்பர சார்ஜ் வகையில் வரவு... | 8—2—0 | | | |
| தனித்தமிழ் பரீக்ஷை கட்டணம் வகையில் வரவு ... | 2—0—0 | | | |
| பிரின்டிங்பேபர் கலர் ராப்பர் காகிதம் விற்ற வகையில் வரவு... | 18—12—6 | | | |
| சங்கப்பதிப்பு புத்தக கிரயத்துக்கு அதிக வரவு வந்தது ... | 0—3—0 | | | |
| சங்கப்பதிப்பு புத்தகம் வி. பி. யனுப்பிய வகையில் வாபஸ் வந்ததற்கு போஸ்டேஜ் செலுத்திய தொகை வி. பி. யில் மறுபடியும் வரவு ரூ ... | 0—3—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ ... | | 84 | 4 | 6 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஷை ஆபீசு ஆயில் என்ஜின் சம்பந்தமாய் எண்ணெய்ச் செலவு | 10—0—0 | | | |
| ஷை ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு | 16—9—9 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 122 | 14 | 0 |
| போஸ்டேஜ் வகையிற் செலவு ... | | 20 | 0 | 0 |
| ரிப்பேர் வகையிற் செலவு ரூ | | 4 | 8 | 0 |
| சங்கஆபீசு கட்டிடத்துக்கு நவம்பர்மீ த்திய வாடகை ரூ 25-க்கு டிலவரிக்குச் செல்லாகிய ரூ 7-11-8-போக பாக்கி ஷை வாடகைக்காக செல் ரூ | | 17 | 4 | 4 |
| லைபிரரி உபயோகத்துக்கு புத்தகங்கள் வாங்கிய வகையிற் செலவு ரூ | | 2 | 2 | 0 |
| பிரின்டிங் ஆபீஸ் உபயோகத்துக்கு பிளாக் வாங்கிய வகையிற் செலவு ரூ | | 0 | 12 | 0 |
| சீமையிலிருந்து தருவித்த பிரின்டிங்பேப்பர் பேல்களுக்கு முதல்வாயிதாத்தொகை இன்ஷியூர்மூலம் அனுப்பியது ரூ | 110—7—0 | | | |
| ஷை பேல் கட்டுகளுக்கு ரயில்வே சார்ஜ் செலுத்தியது ரூ | 12—2—0 | | | |
| ஷை பேல்கட்டுகளுக்கு வண்டி வாடகை செலுத்தியது ரூ | 1—6—0 | | | |
| சேற்றூர் ஜமீந்தாரவர்களிடம் சந்தாத்தொகை வசூலிக்க போய்வந்த வகையிற் செலவ ரூ | 12—12—0 | | | |
| பிரின்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு எக்ஸ்டிரா கொடுத்தது ரூ | 8—8—0 | | | |

| | ரூ. | அ. | பை. | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|---|
| சங்கம் கௌரவ காரியதரிசி T. N. சுந்தரராஜ ஐயங்காரவர்களிடமிருந்து கைமாற்றுவகையில் வரவு ரூ | 75 | 0 | 0 | சங்கப்பதிப்புப் புத்தகம் வாபஸ் வந்ததற்கு போஸ்டேஜ் கொடுத்தது 0-2-0 | | | |
| | | | | ரசீதுலேபிள் வண்டிவாடகை V. P. புக் கிரயம் வகை செலவு 0—8—6 | | | |
| | | | | ஆபீஸ் ஸ்டேஷனரி கண்டின்ஜன்சிச் செலவு ரூ. ... 1--3—6 | | | |
| | | | | பிரிண்டிங் ஆபீஸ் பில்ப்படி சங்கம் ஆபீசு அச்சுக்கூலி வகைக்குச் செல் ரூ ... 63—13—9 | | | |
| | | | | ஷை ஆபீஸ் பில்ப்படி ஷை ஆபீஸ் பைண்டிங் வகைக்குச் செல் ரூ 10—8—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 221 | 6 | 9 |
| ஆக மொத்தம் வரவு ரூ | 802 | 7 | 3 | லேட் பிரசிடெண்டு டாஸ்டியவர்களிடமிருந்து கடன்வரவு ரூ 1000-த்தில் முன் செல்லாக்கிய தொகை ரூ. 600-போக நாளது டிசம்பர்மீ த்தில் செல் ... ... ரூ | 100 | 0 | 0 |
| சென்ற நவம்பர்மீ த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ரூ ... | 285 | 9 | 3 | ஆகமொத்தம்செலவு | 943 | 12 | 5 |
| | | | | போகபாக்கியிருப்பு* | 144 | 4 | 1 |
| ஆக மொத்தம் ... | 1088 | 0 | 6 | *By Pass Book 120—0—0<br>By cash on hand 24—4—1 | | | |
| ஆக மொத்தம் ரூ ... | 1088 | 0 | 6 | ஆக மொத்தம் ... | 1088 | 0 | 6 |

R. Rangaswami Aiyer,
*(Ag.) Manager.*
23—1—13.

*Audited and found Correct*
S. Gopalaswami Aiyengar,
25—1—13. *Auditor.*

உ

# அபிதானசிந்தாமணி.

இதுவரை தமிழில் வெளிவராத "அபிதானசிந்தாமணி" என்னும் அரிய பெயரகராதிப் புத்தகமானது மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் பதிப்பிக்கப்பெற்று முடிவடைந்திப்பொழுது கலிகோ பைண்டுசெய்து விற்பனைக்குச் சித்தப்படுத்தி வைக்கப்பெற்றிருக்கிறது. இதில் வடமொழி தென்மொழி நூல்களிலும், உலக வழக்கிலும் வழங்கிவரும் பிரசித்திபெற்ற தேவர், முனிவர், அரசர், புலவர் முதலிய பலர்களுடைய பெயரும், அவர்கள் சரித்திரச்சுருக்கமும், நதி, மலை, கடல், தேசம், நகரம் முதலிய பலவற்றின் பெயரும், அவற்றின் விவரணங்கள் பலவுமெழுதப்பெற்றிருக்கின்றன. ராயல் 8-பக்கம் கொண்ட பாரம் 131 உள்ளது. நல்லகாகிதத்திற் றெளிவான எழுத்திற் பதிப்பிக்கப்பெற்றது. இதன் விலை ரூ 7 (எழு) வேண்டுவோர் மதுரைத் தமிழ்ச்சங்கம் மானேஜருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

M. R. Srinivasa Iyer,

*Offg: Manager.*



உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக.] பரீதாபி ஹூ மாசிமீ [பகுதி-ச.

## பரிசோதனத்தொடர்.

(திருக்குறளின் பரிமேலழகருரை.)

௩௨௭. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

என்பது குறள். இதற்கு,

தன்னுயிர் நீப்பினும்,—அது செய்யாவழித் தன்னுயிர் உடம்பின் நீங்கிப்போமாயினும். தான் பிறிது இன்னுயிர் நீக்கும் வினை செய்யற்க—தான் பிறிதோரின்னுயிரை அதனுடம்பி னீக்குந்தொழிலைச் செய்யற்க. எ - று.

தன்னை அது கொல்லினுந் தான் அதனைக் கொல்லற்க வென்றது, பாவம் கொலையுண்டவழித் தேய்தலும் கொன்றவழி வளர்தலும் நோக்கி. இனித் தன்னுயிர் நீப்பினு மென்பதற்குச் சாந்தியாகச் செய்யாதவழித் தன்னுயிர் போமாயினு மென்றுரைப்பாரு முளர்; பிறர்செய்தலு மாகாமையின், அஃதுரையன்மை யறிக.
என உரை வரையப்பட்டிருக்கிறது.

இதனுள், சாந்தியாகச் செய்யாதவழி யென்று தொடங்கிப் பிறருரை கூறப்பட்டு, பிறர் செய்தலு மாகாமையின் அஃதுரையன்மை யறிக. என மறுக்கப்பட்டிருக்கிறது.

*

இப்பாடமே இதுவரை பதிக்கப்பட்ட பல புத்தகங்களிலும், பல ஏடுகளிலும் காணப்படுகிறது.

இப்பாடத்தில் பிற ருரையின் அநுவாத பாகத்திற்கும், அதன் மறுப்பிற்கும் பொருள் நன்கு விளங்குவதில்லையென்பது பற்றி மற்றொரு பதிப்பில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது.

அதில், “சாந்தியாக” வென்பதற்கு ‘தோஷநிவாரணமாக’ எனவும், “செய்யாதவழி” என்பதற்குத் ‘தன்னைக்கொல்லவரும் பிராணியைப் பிறரைக்கொண்டு கொலைசெய்வித்தல் முடியாதவிடத்து’ எனவும், “பிறர் செய்தலு மாகாமையின் அஃதுரையன்மையறிக” என்பதற்கு ‘பிறர் தன்னிமித்தம் பிறிதொன்றைக் கொலைசெய்தலும் துறவிக் காகாமையால் அஃதுரையல்லவென்றறிக’ எனவும் குறிப்புரையுள் விரித்துப் பொருளுரைக்கப்பட்டிருப்பதுடன், “தன்னைக்கொல்ல வரும் மிருகமாதிய வற்றைத் தான் கொன்றாற் பாவமேயன்றித் தன்னிமித்தம் பிறர் கொன்றால் தனக்குப் பாவமில்லை; ஆதலால் அவற்றைப் பிறரால் கொல்விக்கலாம்; அவ்வாறுசெய்தல் முடியாத விடத்துத் தன்னுயிர்போகுமானாலும் பிறிதொரு பிராணியைக் கொல்லலாகாது என்பது பிறருரையின் றாற்பரியம்.” எனப் பிறருரைக்குத் தாற்பரியமும், “தன்பொருட்டுப் பிறர்செய்யுங் கொலைப்பாவம் தனக்கே வருவதாயிருத்தலால் அவ்வுரைபொருந்தாது என்று மறுத்தார்” எனப் பரிமேலழகர் மறுத்ததற்குக் காரணமும் வரையப்பட் டிருக்கின்றன.

இவ்வாறு “பிறர் செய்தலுமாகாமையின்” என்ற பாடத்தில் விளங்காத பொருளை விரித்து விளக்கியிருப்பது மிகவும் அருமையுடையதாயினும் வலிந்து கொள்ளும் பொருளுடையதாகக் காணப்படுகிறது.

அன்றியும், அப்பாடம் பரிமேலழகர் எழுதியதா? அன்று என்னும் ஐயப்பாட்டிற்கும் இடனாயிருக்கிறது.

எனெனில், சாந்தியாகச்செய்யாதவழித் தன்னுயிர் போமாயினும் என்னுந்தொடர் பரிமேலழகர் மறுப்பதற் கெடுத்துக்கொண்ட பிற

ருரையின் அநுவாதமாம். இதனுள், தன்னுயிர் போமாயினும் என்ற பிற்பாகம் பரிமேலழகருரையினு முண்மையால், இருவருரையினும் மேற்சொல்லும் பொருள் தம்முள் விரோதமில்லை யென்பது தோன் றக் கூட்டியுரைக்கப் பட்டதென்பது பெறப்படும்; பெறவே, தம் முரையில் வேறுபட்டெஞ்சிநின்ற "சாந்தியாக" வென்பதே மறுக் கப்படும் பொருட் கூற்றெனக் கருதல் வேண்டும். கருதவே பிறரு ரையில், குறளால் மறுக்கப்படும் கொலையை விசேடித்துரைக்கும் சாந் தியாதலே பரிமேலழகருரையால் மறுக்கப்படும் பொருளாம். அதனை மறுத்தற்குப் பிறர்செய்தலு மாகாமையின் என ஏதுக் கூறப்பட்ட மையால், தன்பொருட்டுப் பிறர் கொலைசெய்தல் ஆகுமென்பது பிற ருரையின் றாற்பரியமெனப் பரிமேலழகர் கருதினரெனல் வேண்டு மே? அங்ஙனம் கருதுவதற்கேற்ற கருவியொன்று மின்று. சாந்தி யாக வென்றதனாற் பிறர்செய்தல் என்பது துணியப்படுமெனில்? சாந்தி பிறரே செய்யவேண்டும் என்னும் நியமம்வேண்டும்! அந் நியம மின்மையால் அது பொருந்தாது. நியமமுடையதாக வைத்துக் கொள்வோமாயினும், முன் "சாந்தியாகச் செய்யாதவழி" யெனச் சொல்லானுணர்த்திய பொருளைப் பின்பு மறுக்கப்புகுவார் அங்ஙனம் செய்தலு மாகாமையின் அஃ துரையன்மை யறிக வெனச்சுட்டா லுரைப்பதே முறையாகும். அம்முறையானன்றிப் பிறர்செய்தலு மாகாமையினெனப் பிறழக்கூறார்.

அன்றியும் "சாந்தியாகச் செய்யாதவழி" என்ற பிறருரையுள் "செய்யாதவழி" என்பதற்குச் செய்யின் என்னும் வினையெச்சத்தின் எதிர்மறைப் பொருளைவிட்டு வேறு பொருள் கொள்ளுதல் பொருந் தாது.

பரிமேலழகருரையினுள்ள "அது செய்யாதவழி"யென்பதற்குப் போலச் செய்யின் என்னும் வினையெச்சத்தின் எதிர்மறைப் பொருளே கொள்ளவேண்டும். கொள்ளவே சாந்தியாகச் செய்யாதவழித் தன் னுயிர் போமாயினு மென்று தொடங்கிய பிறருரைக்கு, சாந்தியாகச் செய்யாமை காரணமாகத் தன்னுயிர் போமாயினும் போகுக; உயிர் போகாதிருக்க வேண்டி அங்ஙனம் பிறிதின் னுயிர்நீக்கும் வினை செய் யற்க. என்பது பொருளாகும்.

ஆகவே, சாந்தியாகச்செய்தலைப் பிறர் செய்தலெனக் கொள்ளி னும் அது பிறருரையாலும் ஆகாதென விலக்கப்பட்டமையால் மறுப் பிற் கிலக்காதலின்று. மறுப்பிற் கிலக்காகாதவதனை மறுப்பான் புக்குப் பிறர்செய்தலு மாகாமையால் என ஏதுக் கூறுவது விருத்தம் என்னும் பொருந்தாக் கூற்றும்.

இவ்வாறுப முறைபிறழ்ந்த பொருந்தாக் கூற்றினை நுண்மாணு ழைபுலச் செல்வராகிய பரிமேழகர் கூற்றெனத் துணிதல் கூடாமை யால் ஐயப்பாட்டிற் கிடனுமென வுணர்க.

இனி, மதுரைத் தமிழ்ச் சங்கத்திலுள்ள திருக்குறளுரை ஏடுக ளில் ஒன்றில் "பிறசெய்தலு மாகாமையி னஃதுரையன்மை யறிக" என்றெழுதப்பட்டிருக்கிறது. இவ்வேடு சுத்தப் பிரதியாகவும், பண் டிதர்கள் பரம்பரையே படித்துவந்ததாகவுங் காணப்படுகிறது. இப் பாடம் மற்றொரு சிற்றெழுத்திற் பதிக்கப்பட்ட திருக்குறட் புத்தகத் திலும் "இந்நூல் அச்சிடப்பட்ட பின்பு கிடைத்தபாடம்" என்னும் தலைப்பின்கீழ்க் காட்டப்பட்டிருக்கிறது.

இப் பாடத்திற் சாந்திபாகச் செய்யாதவழி யென்றற் றொடக் கத்திற்குக் கிரகதோட முதலியவற்றாலுண்டாகும் அபமிருத்தியு நீங்குமாறு பலியாகக்கொடுக்கும் உயிர்க்கொலைபைச் செய்யாவிடின் தன்னுயிர் உடம்பினின்று நீங்குமாயினும் நீங்குக; தன்னுயிர் நீங்கா மைப் பொருட்டு அங்ஙனம் உயிர்க்கொலைசெய்யற்க. என்பது பிற ருரையின் றாற்பரியமெனக் கொண்டனரெனத் துணிதற் கிடனு ஙின்றது.

ஆகவே சாந்தியாக வுயிர்க்கொலைசெய்தல் ஒன்றே அவ் வுரை யால் விலக்கப்படுவதல்லது பிறவாற்றானும் செய்யு முயிர்க்கொலைகள் விலக்கப்படாவாம். இக் குறளால் அவைவு மாகாவென விலக்கற் கிலக்காதலால் அவை யொழியச் சாந்திபாகச்செய்தல் ஒன்றனையே விலக்கிற் கிலக்காக்கல் குன்றக்கூறல் என்னும் குற்றந் தங்குமென் பது கொண்டு, "பிறசெய்தலுமாகாமையின் அஃதுரையன்மையறிக" வெனப் பரிமேலழகர் மறுத்தனர் என்பது பொருந்துகின்றது. சாந்தி யாகச் செய்தல் முன்பு கூறப்பட்டிருத்தலால் அதனின் வேறாய பிற

வாற்றா னுயிர்க்கொலை செய்தலைப் பிறசெய்தலெனச் சுருங்கச்சொல்லி யொழிந்தனரெனக் கொள்ளுதல் பொருந்தும்.

ஆதலால் அவ் விரண்டு பாடங்களுள்ளும் பிறசெய்தலுமாகாமை யின் என்னும் பாடமே சுத்தபாடமாகக் காணப்படுகிறது.

ஆயின், தன்னை யதுகொல்லினும் தா னதனைக்கொல்லற்க வென்ற பரிமேலழகருரையுள்ளும் தன்னைக் கொல்லு மவற்றைக் கொலைசெய்தலொன்றே விலக்கப்பட்டமையாற் பிறருரைபோலப் பிற செய்தலுமாகாமையால் உரையன்றும் பிறவெனின்? தன்னையது கொல்லினும் என்னும் உயர்வு சிறப்பும்மையாற் பிறசெய்தலு மாகா தென்பது தழுவப்பட்டமையால் அக் குற்றம் வாராதென்க.

ஆதலாற் பிறசெய்தலு மாகாமையின் என்ற பாடமே எடெழுது வோர்க்கு நன்கு பொருள் புலப்படா தொழியப் பிறவென்னு மிடைச் சொல்லைப் பின்வரும் செய்தற்றொழிற்கு வினைமுதற் பெயரென நினைந்து அப் பெயராகிய பிறர் என்பதன் ரகரவொற்றைக் கூட்டியெ ழுதவே அது பிறர்செய்தலு மாகாமையின் எனப் பரவியதெனத் தோற்றுகின்றது.

திரு. நாராயணையங்கார்,
பத்திராதிபர்.

---

உ

# வினைப்பகுதிவேறுபடுகை.

வினைப்பகுதிகளை வியாகரணங்களிலன்றித் தனித்தனி கூறும் நூல்களும் வடமொழியிலே இருக்கின்றன. அங்ஙனங் கூறும் நூல்கள் தென்மொழியில் இல்லை. வடமொழி வையாகரணராகிய வோபதேவர் "கவிகற்பத்துருமம்" என்னும் நூலிலே வினைப்பகுதி களை ஈறுநோக்கி வகைசெய்து வேறுபாடுங் கூறி இன்ன இன்ன ஈற்றுப்பகுதிகள் இவ்வளவு இவ்வளவு என்று தொகையுங் கூறுகின் றனர். வடமொழியிலுள்ள ஊகாராந்த வினைப்பகுதிகள் கூறி இறு

தியிலே ஊகாராந்தப் பகுதிகள் பதின் மூன்று என்று தொகையுங் கூறினர். அது போலத் தென்மொழியிலுள்ள ஊகாரந்தப் பகுதி களுக்குத் தொகை கூறப்புகின் மூன்றெனமுடிக்கலாம். அவை கூ, பூ, மூ என்பன. பிறவற்றின் தொகை கூறலரிது.

கூ என்பது வகரவுகரம் விரியப்பெற்று கூவு, கூவுதல், கூவல், கூவி, கூவ, கூவின முதலியவாயும், யகரமெய் விரியப்பெற்றுக் கூய், கூயின முதலியனவாயும் வரும். கூய் என்பதனைக் கூவி என்பதன் விகாரம் என்பாருமுளர். அன்றிக் கூப்பிடல், கூப்பிடு, கூப்பிட்டு, கூப்பிட முதலியனவாயும் வரும். "திருத்தம்பயிலுஞ் சுனைகுடைந் தாடிச் சிலம்பெதிர்கூய்" (திருக்கோவை.) கூ என்பதினின்று கூகை, கூத்து, கூப்பிடு, கூவிடை முதலிய பெயர்கள் பிறக்கும். கூவிடை - கூப்பிடு. "ஐயிரண்டமைந்த - கூவிடைப் பொழிற் கப்புறங் கழிந்த பின்" (இராமா.)

பூ, மூ என்பன பூத்தல், பூத்து, பூத்த, மூத்து, மூத்த முதலிய னவாய் வரும். பூ என்பது தன்வினை, பிறவினை என்னும் இரு வினைக்கும் பொது. புதல், முதல் என்பன ஈண்டுத் தோன்றும் பெயரெனவுமமையும். முதல்—தலைவன். "மறைமுதலோர் தனி மாவினிழற்கீழ்" (கந்தபு.)

கூ, பூ என்பவற்றிற்கு வடமொழியிலுள்ள கூ-ஞ, ஊ-ஞ என் பன ஒப்பாதல் உணர்தற்பாலது. கூ-ஞ - ஒலித்தல். ஊ-ஞ - பிறத்தல்.

வே என்னும் பகுதி ககரவுகரம் விரியப் பெற்று வேகுதல், வேகுகை எனத் தொழிற் பெயராகும். இறந்த காலத்திலே முதல் குறுகி வெந்து, வெந்த, வெந்தான் முதலியனவாயும் மற்றைக் காலங் களிலே வேகின்று, வேகுது, வேக, வேவ முதலியனவாயும் வரும். வே என்பதினின்று வேங்கை, வேது, வேவை, வேனல், வெப்பர், வெய்யோன் முதலிய பெயர்கள் பிறக்கும். வேகுது - வேகின்றது. "வேகுதேதியதனில்" (பட்டினா.) வேங்கை - பொன். வடமொழி நிகண்டிலே பொன்னின் பெயராய் வரும் தபநீயம் என்பதும் இப் பொருட்டு. தப்+அநீயம் = தபநீயம். தப் - சுடுதல், எரித்தல். அநீய - ஒரு விகுதி. வேது - வெம்மை. "வேதுகொண்டு விழையு

நெறி விரும்பி" (சேது.) வேவை - வெந்தது. "பராரை வேவை பருகெனத்தண்டி" (பொருந.) வேனல் - கோடை. "வேனன்மல்கி வெண்டேர் சென்ற" (சிந்.) வெப்பர் - வெம்மை. "வெப்பராற் றட்பமாற்றி" (சிந்.) அர் என்பது போலி என்பாருமுளர். அன்றி வெச்செனவு என்பதும் இதன் பாற்று. வெச்செனவு - வெம்மை. "தண்ணெனவும் வெச்செனவுந் தந்து" (சேதுபு.)

மே என்பது வகரவுகரம் விரியப்பெற்று மேவு, மேவுதல், மேவி, மேவ, மேவினன் முதலியனவாயும், யகரம் விரியப்பெற்று மேய், மேயின முதலியனவாயும் வரும். மே என்பதினின்று மேவினர், மேவார் முதலிய பெயர்கள் பிறக்கும். மேவு என்பதே இயற்கை முதனிலையென்றும் மேய என்பது மேவிய என்பதன் விகாரம் என்றும் கூறுவாருமுளர். தொல்காப்பியச் சொல்லதிகார வுரையிலே நச்சினார்க்கினியர் உயிரீற்று வினைப்பகுதி பதினொன்றெனக் கூறி ஏகாரவீற்றுக்கு மே என்பதனைக் காட்டி "மேவினன்" என உதாரணமுங் காட்டினர். பொருந்துமாறு நோக்கி அறிக.

ஐகாரவீற்றுப் பகுதிகளுள்ளே சில பொருணோக்கி விகுதி இரட்டி முடியும். அவை வை, அசை, கரை முதலியன. வை என்பது சபித்தற் பொருளிலே விகுதியிரட்டாது வைதல், வைது, வைய, வைதான் முதலிய வாயும், செறித்தற் பொருளிலே விகுதி யிரட்டி வைத்தல், வைத்து, வைக்க, வைக்கிய முதலியனவாயும் வரும். "ஒருமேலொண்மணிச்சூட்டுவைக்கிய" (சிந்.) அசை முதலியன அசைதல், அசைத்தன் முதலியனவாய் வரும். அசைத்தல் - சார்த்துதல், (சேனாவரை.) கட்டுதல்.

பை என்பது வரல், எனல் என்னுந் துணைவினைகள் பெற்றுப் பைவரல், பைவந்து, பைவரா, பையெனல், பையென முதலியன வாய் வரும். "பையென வென்னை வினவுதி யாயின்." (புறநா.) பை என்பதினின்று பையல், பைதல், பையுள் முதலிய பெயர்கள் பிறக்கும். பைவரல் - மென்மையாதல், வருந்தல். பையுள் - துயர். வடமொழியிலே வெ என்னும் பகுதியும் இதுபோலவே மெலிதல், வாடுதல் என்றும் பொருள் பயக்கின்றது.

இரை என்பது இரைதல் இரைந்து, இரைக்க முதலியனவாய் வருதலன்றி ஈறுபோய் வேறுபட்டு இறற்ல், இற்று, இரட்டல், இரட்டு, இரங்கல், இரங்கு முதலியனவாயும் வரும். வடமொழியிலே வரும் வினைப்பகுதியாகிய ரெ என்பதும் ஒலித்தல் என்னும் பொருட்டாதல் அறிக. இற்று, இரட்டு முதலியன பெயராயும் நிற்கும். இரையும் வேறே! இற்று முதலியனவும் வேறே என்பாருமுளர்.

நிரை என்பது நிரைத்தல், நிரைந்து முதலியனவாய் வரலன்றி நிரல், நிரந்து, நிரம்பி, நிரம்பிய முதலியனவாயும் வரும். நிரம்பிய - நிரையான. "நிரம்பியமாடம்" (இரா.)

களை, தளை, கனை முதலியன ஈறு போய்க் கட்டல், கட்டு, கட்ப, கட்கும், தட்டல் தட்டு, தட்ப, தட்கும், கன்றல், கன்றி, கன்ற, கன்றும் முதலியனவாயும் வரும். "அடாதவான்களை கட்டனர்" (கந்தபு.) "தட்டோரம்ம விவட்டட்டோரே - தள்ளாதோரிவட்டள்ளாதோரே" (புற.) இங்கே உரைகாரர் "தட்டோர்" என்பதற்குத் "தளைத்தோர்" என்றும், "தள்ளாதோர்" என்பதற்குத் "தளையாதோர்" என்றும் உரைகூறுவர். "வான்றளை தட்டிசை தனதாகியும்" என்ற காரிகையையும் நோக்குக. களை, தளை என்பன பெயராயும் நிற்கும். கனை என்பதினின்று கன்னல், கனம் முதலிய பெயர்கள் பிறக்கும். கன்னல் - சருக்கரை. "செறிந்திடு கன்னல்." (கந்தபு.)

நொ என்னும் பகுதி நொவ்வு, நோதல் எனத் தொழிற் பெயராகும், இறந்த காலத்திலே நொந்து, நொந்த, நொந்தான் முதலியனவாய் வரும். மற்றைக் காலங்களிலே நோகின்ற, நோக, நோவ முதலியனவாய் வரும். நோவு எனப் பெயர் தோன்றும்.

து என்பது பகரம் விரியப்பெற்றுத் துய்த்தல், துய்த்து, துய்க்க முதலியனவாய் வரலன்றித் துவ்வல், துற்றல், துற்று, துற்றிய முதலியனவாயும் வரும். துற்றிய - தின்ற. "தூாய் துற்றிய துருவையும்" (பொருநா.) துற்று என்பது பெயராயும் நிற்கும். துற்று - உணவு. "முற்றுற்றுந்துற்றினை" (நாலடி.) துப்பு, துப்புரவு, துவ்வு, துற்றி முதலிய பெயர்களும் இதினின்று தோன்றும்.

போ என்பது போகல், போதரல், போய், போந்து, போதர, போத, போன, போந்த, போயின முதலியவாய் வரும். போ என்பதினின்று போகல், போக்கு முதலிய பெயர் பிறக்கும். போக்கு - குற்றம்.

தமிழ்மொழி கற்போருக்குப் பயன்படுமாறு சொல்லாற்றலும் பொருளாற்றலும் பெரிதமைய வாக்கியவடிவமாகப் பல நூல்கள் செய்து வெளிப்படுத்திய ஸ்ரீமான்-ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையவர்கள் இவ் வினைப்பகுதிகளின் வரலாறுகளையும் ஒரு புத்தகமாகச் செய்து வெளிப்படுத்துதலை விரும்பினர். அவர் விரும்பியவாறே செய்யப்பட்டு "வினைப்பகுபதவிளக்கம்" என்னும் பெயருடன் ஒன்று அச்சிடப்படுகின்றது. இங்கே அமையாத வினைப்பகுதிகள் பல அங்கே வரும். அங்கே அமையாதனவாய் இங்கேயுஞ் சிலவரும். இவைகளை முடிவறிந்து கூறல் அரிதாயினும் அறிந்தவரை கூறி முடிப்பது நன்று.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை,

சுன்னாகம்

---

## பிழைதிருத்தம்.

—:o:—

சென்ற மார்கழிமாதச் செந்தமிழிலே சஉ-வது பக்கத்தில் "வினைப்பகுதி வேறுபடுகை" என்னும் விடயத்திலே "ஹ்ரு - (ஹா - தாங்குதல்) என்னும் பகுதி" என்றதை, ஹ்ரு (ஹா—தாங்குதல்) என்பதனைப் பரி என்பதும் எனவும், சங-வது பக்கம் ச-வது பந்தியில் கொடு என்பதனைத் தொடு எனவுந் திருத்திக்கொள்க.

---

# தமிழ்-அகராதிவேலையின் விவரம்.



இந்த அகராதியில், தமிழ்ப்பாஷையில் வழங்கும் எல்லாச் சொற்களும், அவற்றின் எழுத்துச் சேர்க்கை, உற்பத்தி, வெவ்வேறான பொருள்களுடனும், பிரயோகங்களுடனும் ஆராய்ச்சி செய்யப்படும்.

விஷயங்களுக்கு விரிந்த விவரங்கள் காட்டிச்செல்வது, "என்ஸைக்லோபீடியா" போன்ற நூல் முறைக்கே உரியதாம். ஆதலால், பதப்பொருள்களையே பெரும்பான்மை விளக்குதற்குரிய அகராதி முறைக்கு அவ்விவரங்கள் ஏற்றன ஆகா.

இவ்வகராதி சித்தப்படுத்துவதில் எங்கள் நோக்கங்கள் அடியில் வருமாறு:—

(a) தற்காலத்தில் கிடைக்கக்கூடிய நூல்கள் முதலிய சாதனங்களை நன்கு ஆராய்ச்சிசெய்து அவற்றை உபயோகித்தல்.

(b) இதுவரை கிடைக்கப்பெறாத கைப்பெழுத்துப் பிரதிகளிற் கண்ட அருஞ்சொற்களைச் சேர்த்தல்.

(c) இதுகாறும் கவனிக்கப்படாதிருந்த பழைய உயர்தரக் காவியங்களினின்றும் பொருள்களை விளக்கிக்காட்டுதல்.

(d) தவறாகக்கண்ட பொருளமைதிகளைத் திருத்தஞ்செய்தல்.

(e) தமிழ் நாட்டாரது தற்காலப் பேச்சு வழக்கில் உள்ள புதிய பதங்களைச் சேர்த்துக்கொள்ளுதல் - என்பவைகளாம்.

மேற்கூறியவற்றைச் செய்துமுடிப்பதில் தமிழ்ப்பண்டிதர் அனைவரும், தமிழ்ப்பாஷையின் அபிவிர்த்திகருதி ஸ்தாபிக்கப்பட்டுள்ள சங்கங்களும் ஒத்துழைத்து, இவ்வரியபெரியகாரியத்தை நிறைவேற்றிவைக்க விரும்புகிறோம்.

இவ்வாறு உதவிவேண்டி, மதுரை, தஞ்சை, சிதம்பரம், சென்னை யாழ்ப்பாணம் - இந்நகரங்களிலுள்ள தமிழ்ச்சங்கங்களையும், பாளையங்கோட்டைச் சைவசபையையும், தத்தம்பக்கங்களில் வழங்கும்

கீழ்க்குறித்த விஷயங்கள் பற்றிய பதங்களை, அவற்றின் சரியான பொருள் விவரங்களுடன், சேகரித்து எங்கட்கு அனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறோம் அவ்விஷயங்களாவன:—

(1) ஜாதிகளும் அவற்றின் வெவ்வேறு உட்பிரிவுகளும், வழங்கும் விசேடபதங்கள்.

(2) குலாசாரங்கள், அவ்வவ் இடங்கட்குச் சிறப்பாகவுள்ள வழக்கங்கள்.

(3) தொழில்கள், ஆயுதவகைகள், பாத்திரங்கள் முதலியன.

(4) மருத்துவமுறைகள், மூலிகைகள் முதலியன.

(5) சங்கீத சம்பந்தமாகவும், ஏனைய சாஸ்திர சம்பந்தமாகவும் உள்ள விசேஷபதங்கள்.

(6) மதங்களின் பல்வகை விரதாநுஷ்டானங்கள், மதக்கொள்கைகள்.

(7) கையெழுத்துப் பிரதிகளிலும் மற்றவைகளிலும் கண்ட அகராதி அமைப்பிற்கு வேண்டிய ஏனைய சாதனங்கள் - என்பவைகளாம்.

இவற்றோடு, தமிழ்ப்பாண்டித்தியத்திற் சிறந்த வித்வான்கள் சிலரை, இக்கமிட்டியின் "கௌரவ - வித்வத் - அங்கத்தவர் ஆகத் தேர்ந்தெடுத்து, உரிய காலங்களில் அவர்களுடைய ஆலோசனையைக் கேட்டுக்கொள்ளவும் தீர்மானமாயிருக்கிறது.

இவ்வண்ணமாக, வின்ஸ்லோ, ராட்லர், போப், கதிரைவேற்பிள்ளை முதலிய பண்டிதர்களால் முன்னமே செய்யப்பட்டுள்ள பெரிய காரியங்களை மேலுந்தொடர்ந்து நடத்திச் சிறப்பிப்பதில், தமிழ் நாட்டார் எல்லாரும் தங்கட்குப் பாத்தியமுள்ளதாகவே எண்ணி வேண்டிய உதவி செய்வார்கள் என்று நம்புகிறோம்.

மதுரை,<br>13. Mar. 1913.

J. S. CHANDLER,<br>*Chairman.*

---

# வானசாஸ்திரம்.



(௬௬-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

இதற்கெட்டு உபக்கிரகங்க ளிருக்கின்றனவென்றோம். அவைகள் சுற்றுங்காலங்கள் பின்வருமாறு:—

| | பெயர். | சநியின் அர்த்தவிட்ட அளவையொப்ப. | சுற்றும்நாட்கள். நாள். ம. மி. ச. |
|---|---|---|---|
| 1. | மிமாஸ் | 3—360 | 0—22—37—23 |
| 2. | என்கேல்டஸ் | 4—312 | 1— 8—53— 7 |
| 3. | டேதிஸ் | 5—339 | 1—21—18—26 |
| 4. | டயோன் | 6—839 | 2—17—41 —9 |
| 5. | ரியா | 9—552 | 4—12—25—11 |
| 6. | டிடான் | 22—145 | 15—22—41—25 |
| 7. | ஹைபரியன் | 28—000 | 21— 7— 7—41 |
| 8. | ஜபேடஸ் | 64—359 | 79— 7—54—40 |

முதல் நான்கு கிரகங்களும் சநிக்குச் சமீபமாய்ச் சுற்றியோடுகின்றன. கடைசியான ஜபேடஸ் என்பது நமக்குஞ் சந்திரனுக்குமுள்ள தூரத்தைக்காட்டிலும் பதின்மடங் கதிகமானதூரத்திலிருக்கின்றது. இவ் வுபக்கிரகத்தின் பரிமாணமோ நமது பூமியிற் பாதியிருக்கின்றது. இது சநியைச் சுற்றிவருங்காலமும் அதிகமாகவேயிருக்கின்றது. இவைகளுட்சில சுலபத்திற் கண்டுபிடிக்கக் கூடியவாயும், சில பழகியவர்களே யறியக்கூடியனவாயு மிருக்கின்றனவாம். இவைகளைத் தவிர்த்து ஒன்பதாவதாக ஒன்று பிளாக்ஸடா என்னுமிடத்திலுள்ள பிக்கரிங்காசிரியராற் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

## பிரமந்தன், விமந்தன்.

உலகத்தாருக்கு அநாதிதொட்டுச் சூரியன், சந்திரன், பூமி, செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சநி, இராகு, கேது என்ற கிரகங்களைத் தவிர்த்தும், தாராகணங்களைத் தவிர்த்தும் வேறு கிரகங்களிருப்பதாகத் தெரியாது. இவைகளில் இராகு கேது விரண்டும் சாயாகிரகங்களென வராஹ மிஹிரர் முதலானோர் அநேக நூற்றாண்டுகட்கு முன்னரே தீர்மானித்துவிட்டனர். அதற்குப்பிறகு இன்னும் கிரகங்களிருக்கின்றனவென்று சொல்வாரொருவருமில்லை. சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்திற் பேர்போன வானசாஸ்திரியாகிய சர் உவில்லியம் ஹெர்ஷலென்பார் ஒருநா ளிரவு-1781-ஆ மார்ச்சுமீ 13வ சுமார் 10, 11-மணிக்கு மிதுனவிராசியைத் தமது தூரதிருஷ்டி கொண்டு சோதித்திருக்கையில் அதனிடை யொரு உருவின் கடைப்பாகம் தோற்றப்பட்டது. அதனையுற்று மறுபடிநோக்கிவருகையில் அது ஒரு கிரகமாயிருக்கவேண்டுமென்று கண்டனர். அதுமுதற் சோதித்துவருகையில், ஒரு பெரிய கிரகமாயிருந்ததோடு அதற்கு எட்டு உபகிரகங்களு மிருப்பதாகக் கண்டனர். ஆயினும் அவரைப் பின்னிட்டோர் அவைகளுள் நான்குதான் உபக்கிரகங்களென்றும், மற்றவை தாராகணங்களென்றுங் கண்டனர். இதற்கு ஆங்கிலத்தில் யூரனேஸ் என்று பெயரிட்டனர். இக் கிரகம் உருண்டை வடிவினதாயினும் இதன் சூரியவலயம் அண்டாகிருதியானது. இதன் சுழற்சியைக்கொண்டு இது ஒருதரம் ஆதித்தனைச் சுற்றிவர 84-வருடங்கள் பிடிக்குமெனக் கணக்கிட்டிருக்கின்றனர். இதன் வட்ட அளவு 33250, இது பூமியைவிட 74-மடங்கு பருமனுடையதாயினும், ஆகர்ஷண சக்திக் குறைவுடையதாயிருக்கின்றது. இதன் சுழற்சி மற்றவைகளைப்போலன்றி வக்கிரகதியுடையதாம். இதன்கதியைச் சோதித்துக் கணித்துக்கொண்டு வானத்தைத் தேடியபோது கிரகசஞ்சாரம் வேறு விதமாயிருந்தபடியால் வானசாஸ்திரிகள் பிரமித்தனர். ஆயினும் ஆடம்ஸ் என்ற ஆங்கில நிபுணரும், லேவரியே என்ற பிராஞ்சிய நிபுணரும் தனித்தனியே கணக்கிட்டு இதனை மற்றொரு கிரகம் தனது வலிமைகொண்டு இழுக்கிறதென்று சித்தாந்தப்படுத்தினர். இவர்கள் சித்தாந்தப்படுத்திக்காட்டியவிடம் ஒருவருக்கொருவர் ஒரு பாகை வித்தியாசத்திற்குள்ளிருந்தது. பிராஞ்சிய நிபுணர் தாம் கண்டு

பிடித்திருந்த இடத்தை ஜர்மன் நிபுணர்கட்கனுப்ப 1846-ம்வரு செப்டம்பர்மீ 26உ அன்று ஜர்மன் நிபுணர்களதனைப் பெற்று அன்றிரவே யதனைக்கண்டுவிட்டனர். இக்கிரகத்திற்குத்தான் நெப்தியூன் என்று பெயர் இதற்குமொரு உபக்கிரகமுண்டு. இந்தக்கிரகம் மணிபொன்றுக்கு 12000-மைல் விதம் ஆகாயவீதியிற் செல்லுகின்றதென்றால் மற்றவைகளைச் சொல்லுவானேன். நமது பூமியைவிட 105-மடங்கு பெரியதாயினும், தூரப் போகப்போகச் சலனகதி அதிகமென்னும் நியாயத்தாற்றான் வேகமதிகமாயிருக்கிறது. இவைகளின் அடி நனி அல்லது ஒரு சுழற்சியை ஒருவனே காணுதலரிதாம். ஒன்று 84-வருடமும், மற்றொன்று அதற்குமேலுஞ் செல்லுமாயின், ஒரு புருஷாயுசு பற்றாதன்றோ. இந்த நெப்தியூன் வெறுங் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. இவ்விரண்டு கிரகங்களையும் பற்றின விவரமொன்றும் இன்னும் நன்கு வெளிப்படவில்லை.

## நக்ஷத்திர மண்டலம்.

இதுவரையில் வானத்திற் றோன்றும் பெருங்கிரகங்களைப் பற்றிச் சொல்லப்பட்டது. பெருங்கிரகங்களைப் பற்றித் தெரிந்தவரையிற் சொல்லிமுடித்தோம் ஆகாசத்திற் றோன்றும் அநேக ஒளிப்பொருள்களில் எல்லாவற்றிற்கும் ஒருவழி சொல்லமுடியாவிடினும், எப்போதும் நிலைத்து நிற்பதும், சலிப்பற்றதுமான வனேக ஒளிப்பொருள்கட்கு உடுக்களென்றும் நக்ஷத்திரங்களென்றும் பெயரிட்டிருக்கின்றனர். அவற்றைப்பற்றிச் சிறிது சொல்லுவாம். அவைகளைச் சோதித்து அவைகள் இன்னவிதமா யிருக்கின்றனவெனச் சொல்லுதலெளிதலாத காரியமாம்.

சந்திரனுடைய கலாவிருத்தியைக்கொண்டு அவற்றின்கதி கணிக்கப்பட்டிருக்கிறது. சந்திரன் செல்லும்போது நக்ஷத்திர மண்டலத்திலுள்ள குறிப்பிட்ட இருபத்தேழு நக்ஷத்திரங்களிலோ, அவற்றினிடையிலோ புலப்படுகிறான். அதனை நமது பூர்வீகர்கள் கண்டு அதனதனிருப்பிட முதலியவற்றைக் குறிப்பிட்டிருக்கின்றனர். அவைகளுட் சில ஐரோப்பிய சித்தாந்தத்திற் பழகிவருகின்றனவாயினும், எல்லாம் பழகிவருவதில்லை. அவர்கள் கொண்டாடும் அநேக நக்ஷத்

திரங்களை நாம் கையாடுவதில்லையென்பதோடு அங்குத் தென்படுபவை களெல்லாம் அக்ஷாம்ச தேசாந்தர பேதத்தால் இங்குப் புலப்படுவது மில்லை. காஸ்மீரதேசம்சென்ற நமது தென்னிந்திய ஜ்யோதிஷ ரொரு வர் அங்குச் சப்தரிஷி மண்டலம் உச்சத்திற் செல்லக்கண்டன ரென் ருல் இதற்கு வேறு சாக்ஷியமும் வேண்டுமோ? இனி, தென்னிந்தி யாவிற் றெரியக்கூடிய ஐரோப்பிய இந்திய தாரைகளை மாத்திரம் குறிக்கப்படும்.

| நக்ஷத்திரம். | இத்தனை என்பது. | அக்ஷாம்சம் இரா-பா-கலை. | தேசாந்தரம் பாகை. | ஆங்கிலப்பெயர். |
|---|---|---|---|---|
| அசுவதி | 6 | 0—8—0 | 10வடபுறம் | ஆல்பாஏரிடிஸ் |
| பரணி | 3 | 0–20—0 | 12 வ | மூஸ்கா |
| கார்த்திகை | 6 | 1—7–30 | 5 வ | பிளேயாட்ஸ் |
| ரோகிணி | 12 | 1–19–30 | 5 வ | அல்டேபிரான் |
| மிருகசிரிடம் | 3 | 2—3—0 | 10 தென் பு. | எத்கா ஓரியனிஸ் |
| திருவாதிரை | 1 | 2—7–20 | 9 தெ | ஆல்பா ஓரியனிஸ் |
| புனர்வசு | 6 | 3—3—0 | 6 வ | பெதா-ஜிமினேரம் |
| பூசம் | 5 | 3–16—0 | 0 வ | டெல்டாகான்கிறீ |
| ஆயிலியம் | 4 | 3–19—0 | 7 தெ | கான்கிறீ |
| மகம் | 4 | 4—9—0 | 0 வ | லியோனிஸ் |
| பூரம் | 2 | 4–24—0 | 12 வ | ஷை |
| உத்திரம் | 2 | 5—5—0 | 13 வ | ஷை |
| அஸ்தம் | 6 | 5–20—0 | 11 தெ | கார்வி |
| சித்திரை | 3 | 6—0—0 | 2 தெ | ஸ்பைசா |
| சுவாதி | 1 | 6–19—0 | 37 வ | பூதிஸ் ஆர்க்தோரஸ் |
| விசாகம் | 6 | 7—3—0 | 1½ தெ | லிப்ரா |

| | | | | |
|---|---|---|---|---|
| அனுஷம் | 6 | 7–14—0 | 3 தெ | |
| கேட்டை | 4 | 7–19—0 | 4 தெ | |
| மூலம் | 4 | 8—1—0 | 9 தெ | |
| பூராடம் | 2 | 8–14—0 | 5½ தெ | |
| உத்திராடம் | 2 | 8–20—0 | 5 தெ | |
| திருவோணம் | 3 | 9–10—0 | 30 வ | அகுலி |
| அவிட்டம் (அளவிறந்த) | | 9–20—0 | 36 வ | டெல்பினி |
| சதயம் | 0 | 10–20—0 | 0.½ தெ | அக்டுவரி |
| பூரட்டாதி | 2 | 10–26—0 | 24 வ | பெகாஸி |
| உத்திரட்டாதி | 2 | 11—3—0 | 26 வ | ஆந்தரோமேடா |
| ரேவதி | 12 | 11–29—5 | 0 வ | ரெவடாபிஸியம். |

இவைகளேயன்றி அகஸ்தியரென ஒருபெரியநக்ஷத்திரம் அக்ஷாம்சம் 90-வது பாகையில் 80 பாகை தெற்காகத் தோன்றும். இந்நக்ஷத்திரம் புரட்டாசிமீ"த்தில் அதிகாலையிற் றென்புறமாகப் பார்க்கின் இரண்டுமூன்று பெருநக்ஷத்திரங்கள் தோன்றுவதில் அதிக தெற்கிற் றோற்றமாகும். ஆங்கிலேயர் ஆர்கோநாவிஸ் என்னும் ஆர்கோவின் கப்பல் என்பதில் முதற்றரவுடுவாகக் கொள்கின்றனர்.

மேற்கூறிய இரண்டுமூன்று பெரியநக்ஷத்திரங்களில், அகஸ்தியருக்குச் சற்று வடகிழக்காய்த் தோன்றுவதை மிருகவியாதனெனக் கூறுவர். இது மிதுனராசிக் குரித்தானதாகையால், 2 இராசி 20-வது பாகையில் 40 பாகை தெற்காகவிருக்கிறது. சாதாரணமாகப் புரட்டாசிமீ"த்தி லருணோதயத்திற் றோற்றுவது புனர்வசுவென்னுந்தாரை. இது தமிழ்ச் சாத்திரப்படி புனர்பூசமாறு மோடம்போல் என்றபடி. ஆறு பிரகாசமான வுடுக்கள் வானத்தின்மத்தியில் இரண்டிரண்டாக வடபுறமிருந்து தென்புறம்வரையிற் புலப்படும். இக் கூட்டத்திற் றென்புறம் பெரிதாகப் புலப்படுவதை மிருகவியாதனென்பர் வடநூலார். இதுவே ஒருக்கால் சிரியஸ் என்னும் நக்ஷத்திரமாயிருக்கக்

கூடுமென்பது பண்டித பாபுதேவசாஸ்திரி போன்ருேரபிப்பிராயம். ஆங்கிலத்திற் கானிஸ்மேஜர் அல்லது பெருநாய்கள் என்று சொல்லப் படுங் கூட்டத்திற் ருேன்றும் முதற்றரத் தாரையாகும். இது பூமிக் கதிக தூரத்திலிருப்பதால் சிறியதாகப் புலப்படினும் அதனொளி இராக்காலங்களிற் பிரகாசிக்கக் கூடியது. இதனைச் சூரியனுக்குச் சமானமாகக்கூடச் சொல்லலாமென்பது பூர்வகால யவனுசிரியர்களது அபிப்பிராயம். இது மற்ற சுவாதி, அநுஷம், உரோகிணி, திருவாதிரை, போல்லுயுக்ஸ் இவைகளோடு சிவந்த நிறமுடையதாக விருந்ததாகப் பூர்வயவனுசிரியர் குறித்திருக்கிருர். இப்பொழுதோ கிரகத்திற் சநி பகவானும், சுவாதியும் அநுஷமும் சிவந்த நிறமுடையனவாகவே யிருக்கின்றன. ஊற்ருற்போலிருக்கு முரோகிணியி னடியிலுள்ள பெரிய தாரை ரோஜாப்பூ வர்ணமுடையதாக (அதாவது வெண்மை கலந்த சிவப்புடையதாக) வின்றுங் காண்கிருேம். திருவாதிரையும் பொல்சாயுக்ஸூம் மஞ்சட்கலப்புடைய வெண்ணிறமாகத் தோற்று கின்றன. சிரியஸோ சுத்த வெண்ணிறமுடையதாகத் தோற்றுகிறது. இவைகட்கு முற்பாதமுண்டோவெனின் ? ஈசன் செயலே யாதென்று கூறுவது. 1572-ல் காஸியோபியாவில் சோதியினையுடைய நக்ஷத்திர மொன்று தோன்றிற்று. அதனையுற்றுப்பார்த்துவரும்போது அது வரவர நிறமாறிவரக்கண்டனர். அதுவன்றி இந் நக்ஷத்திரமண்டலங் களுஞ் சலனமுடையவெனக் கணிக்கப்பட்டாலு மவை யவ்வளவு வியக்தமாக விளங்காததோடு அதிக இடப்பெயற்சியுடையனவல்ல. இக்காரணங்காளா லிவைகளி னிற மாறக் காரணமுண்டென வூகிக்க லாம்.

அக்கினி, ப்ருஹ்ஹ்ருதயம், பிரஜாபதி என்பன மூன்று நக்ஷத் திரங்கள் முக்கியமானவை. இவைகள் ரிஷப ராசியிற் ருேற்று கின்றன. அக்கினி, பிரும்மஹ்ருதயம் இரண்டும் 52-வது பாகையில் முறையே 8, 30-பாகம் வடக்கே தோன்றும். இவைகட்குக் கீழ்புற மாய் 5-பாகையிலுள்ள பிரஜாபதி நக்ஷத்திரம். இவை கார்த்திகைக் கும், மிருகசிரம், திருவாதிரைக்கும் மத்தியில் வடபுறமாய்ப் புலப் படும். அக்கினிக்கு ஆங்கிலத்தில் பெதாதோரி என்றும், பிரும்மஹ்ரு தயத்திற்கு காபல்லா வென்றும், பிரஜாபதிக்கு ஒரிகே என்றும்

பெயர். ஐரோப்பியர்கட்கு ஓரிகாவென்பதே ஒரு நக்ஷத்திரக்கூட்டம். அரபிகளிவைகளைக் கார்த்திகையின் இரக்ஷகனெனச் சொல்வதுண்டு. படத்திலவைகள் ஒரு மனிதனொருகையில் ஆடொன்றையும், மற்றொரு கையில் இரண்டு ஆட்டுக்குட்டிகளையுந் தூக்கிக்கொண்டிருக்கும் பாவனையாகக் காட்டப்படுவதுண்டு. இந்த ஓரிசா என்பவன் இரதம் இன்னவிதமெனக்கண்டு துரகமோட்டுவதில் வல்லவனாயிருந்ததின்பொருட்டுத் தேவர்களிலொருவனானானென்றுமோர் கதை வழங்கும். இந்தக்கூட்டத்தில் பிரும்மஹ்ருதயமென்னும் காபெல்லா முக்கியமானது.

அபிஜித்தொன்று திருவோணத்திற்கு வடக்கிற்புலப்படும். இது இப்பொழுது ஜியோதிகள் பஞ்சாங்கம் முதலியவற்றில் இந் நக்ஷத்திரம் குறிக்கப்பட்டு வருகிறது. இது திருவோணத்திற்கு வடமேற்கில் நான்கு சிறு நக்ஷத்திரங்களின் உச்சியிற் பளிரெனத் தோன்றும். கீழிருக்கும் நான்கு நக்ஷத்திரங்களும் கோணலான நீண்ட சதுரப்பாடுடையதாய்த் (Romboid) தோன்றும். இதனக்ஷாம்சம் 8—26—40 வடக்கில் 60 பாகையிற்றோன்றும். இந்த நக்ஷத்திரத்திற்கு ஐரோப்பியர்கள் வேகா (Vega) எனப் பெயரிட்டிருக்கின்றனர். இக் கூட்டத்திற்கே லீரி எனப் பெயர். இந்த வேகா பிரகாசத்தில் அதிக மேன்மையுடையதென்றும் ஒரு காலத்தில் (சற்றேறக்குறைய 12000 வருடங்கட்குப் பிறகு) இதுவே துருவநக்ஷத்திரமாகத் தோற்றுமென்றும் மேல்நாட்டா ரபிப்பிராயப் படுகின்றனர். இதனைக் கண்டுபிடிப்பது அதி சுலபம். ஐப்பசிமீ"த்தில் சூரியாஸ்தமனமானவுடனுச்சியிற்றோற்றுவது மூளைக்கோல்போன்ற திருவோணமாம். இதன் மத்தியிற் பிரகாசிக்கும் யோகதாரகா நக்ஷத்திரம் சிகரமாயும், இதற்கு வடமேற்கிற் றோன்றும் அபிஜித்தை (வேகா) ஒரு காலாகவும் முன்னதற்கு நேர் வடகிழக்கிலும், பின்னதற்கு நேர் கிழக்கிலுந்தோற்றுமொரு ஒள்ளிய நக்ஷத்திர மற்றொரு காலாகவுங்காணலாகும். பின்னையதற்கு டெனப் என்று பெயர். இவைகளே நம் நாட்டில் முக்கியமாக வழங்குபவைகள்.

இவைகளுள் மேல்விதந்து கூறியவற்றைத் தவிர்த்து மற்றவைகளைப்பற்றி விரிவாகக் கூறுதும். அசுவினி ஆறு நக்ஷத்திரங்கள்

பளீரென நடு ஆகாயத்திற் குதிரைத்தலைபோற்றேன்றும். ஐரோப்பியர் இதனை மேஷராசியென்பர். நமக்கு மேஷவிராசிக்கு இரண்டு முழுநக்ஷத்திரங்களுண்டு. மற்றென்று பின்வரும் பரணியாம். இதுவும் ஐரோப்பியருக்குள்ள முல்காவாகும்.

கார்த்திகை ஆறு சிறுநக்ஷத்திரங்களஞ்சடுக்கு அலங்கார தீபமேற்றியதுபோல் மாலைப்போதில் தை மாசி மாதங்களில் மேற்கிலும் ஐப்பசி மாதத்தில் உச்சியிலும் ஆவணி மாதத்தில் வைகறையிலுந் தோன்றும்.

ஐரோப்பியரிதனைப் பிளயாட்ஸ் என்றும், இது பன்னிரண்டுடுக்கள் கொண்டதாயினும், ஆறேவெறுங் கண்ணுக்குப் புலப்படக் கூடியவென்றும், மற்றவை தூரதிருஷ்டிகொண்டே காணக்கூடியவென்றுங் கூறுவர்.

உரோகிணி கார்த்திகைக்குச் சற்றுத் தென்கிழக்காய் ஒருகவைவிரித்தது போற்றேற்றும். இதனுள் வெறுங் கண்ணுக்குப் பன்னிரண்டுக்குமேற் புலப்படுவதுண்டு. அதன்வடபுறமாக மேல்புறமாயிருப்பது ஒளியுடன்றேன்றும். அதனை ஐரோப்பியர் அல்டேபிரான் எனவழங்குவர்.

மிருகசீரிஷம் என்பது உரோகிணிக்குக் கிழக்கில் திருவாதிரைக்கு மேற்கிற்றேற்றுவது.

திருவாதிரை அதற்குப் பக்கத்திற்றேற்றும். ஆவணி புரட்டாசி மாதங்களில் வைகறையிற் கிழக்கிலும் தைமாதத்தில் மேற்கிலுந் தோன்றும். இதற்கு முரோகிணிக்கும் மேற்கில் ஒரு பிரகாசமுள்ள நக்ஷத்திரந்தோன்றும். இவைகட்குத் தெற்கே மத்தியில் 3 நக்ஷத்திரங்கள் பிரகாசத்தோடு தோன்றும். இவைகளைச் சேர்த்துப் பார்ப்போமாயின் இவைகட்குத் தெற்கிலும் முற்கூறிய திருவாதிரைக்கும் அதற்கடுத்ததற்கும் நேராயும் இரண்டுநக்ஷத்திரங்கள்புலப்படும். இவைகளெல்லாஞ் சேர்ந்து ஏரியனென்று சொல்லப்படும் இந்த நக்ஷத்திரக்கூட்டம் தோன்றுதசேசமில்லை.

புனர்பூசத்தைப்பற்றி முன் கொஞ்சம் சொல்லப்பட்டிருக்கிறது. மேலே ஏரியனில் மூன்று நக்ஷத்திரங்கள் மத்தியிலிருப்பதாகக் கூறியுள்ளோம். அவை முன்னமே சொல்லப்பட்ட மிருகவியாதனைப் புலப்படுத்தும். அதற்குக் கிழக்கே சமீபத்திலொன்று தோன்றும். அதோடு வடக்கிற் பார்ப்போமாயின் நடுவிலிரண்டு சுற்றுக்கிழக்காகத் தோன்றும், அவைகட்கு வடமேற்காகப் பார்ப்போமாயின் இரண்டு தோன்றும். அவைகளையே புனர்வசுவென்கின்றனர். மத்தியிற் றோன்றுவதற்குக் கானிஸ்மைனர் அல்லது சிறுநாய் என்றும், புனர்வசுவிற்றோற்றும் முதற்கு காஸ்டர் என்றும் கீழிருப்பதற்கு பொல்லிபூக்ஸ் என்றும்பெயர். இந்நட்சத்திரங்களாறும் சித்திரைமாதமுதலில் மேற்கில் சூரியாஸ்தமனமாகும் போதே வெகு தெளிவாய்ப் புலப்படும். புரட்டாசி மாதத்திற் காலையிற்றெளிவாய்த்தோற்றும். தை மாதத்தில் உச்சியில் அந்திக்காலத்திற்றோன்றும்.

பூசமிதற்குக்கீழ் அதிக ஒளியின்றித் தோற்றுவது. ஆயிலியம் நான்கு நக்ஷத்திரங்கள் அம்மிபோல் சதுரப்பாடுடையதாய்த் தோற்றும்.

மகம் நான்கு நக்ஷத்திரங்கள் படிப்படியாகத் தோற்றும். மாசி மாதத்திற் பூர்ணசந்திரன் இதனிடையே செல்லுகின்றது. சிம்மராசி ஆரம்பமாவதாலிதற்குச் சிம்மமென்றே ஐரோப்பியர் பெயரிட்டிருக்கின்றனர். இதனின் நடுவிற் பிரகாசிப்பதற்கு ரெகுலியஸ் என்று பெயர். இது சித்திரை மாதத்தில் அந்திக்காலத்தில் உச்சியிற் புலப்படும். இதற்குக் கீழ்புறம் உத்திரம் இரண்டிரண்டாகச் சமனாகக் கட்டிற்காற்போன்று தோன்றும். கீழ்த்தோன்றும் பிரகாசமான நக்ஷத்திரத்திற்கு டெனபோலாவென்று பெயர்.

இலக்கணவிளக்க பரம்பரை,

**திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.**

---

ஸ்ரீ:

# *வெள்ளூர்ச் சாசநங்கள்

## IV.

### நடு நக்கர் கோவில்

அம்மன் ஸந்நிதித் தெற்குச்சுவர் கீழோரம்.

ஜடாவர்மன் வீரபாண்டியனின் 3-வது ஸூ.

1. ஸ்வஸ்திஸ்ரீ। கோச்சடைய பன்மரான திரிபுவன சக்கரவர்த்தி கள் ஸ்ரீ வீரபாண்டிய தேவற்கு யாண்டு மூன்றாவது திரு வழுதி வள

2. நாட்டு வெள்ளூரான மதுரோதயபுரத்து நாயனார் நக் காண்டார் கோயில் சிவப்பிராமணரோம் காடுவெட்டிகள் அகம்படி

3. யிலதிஞகயன அகத்தி அ (முத) நாராயண விழுப்பரையனுக்கு பிடிபாடு பண்ணிக்குடுத்த பரிசாவது நாயநார் திரு நந்தவன திருப்பை ?

4. குடையில் நீர்க்குறை பூப்படாமல் இறைத்து பயிர் குறை வறச் செ (ய்து) கொடுப்போம் ஆகவும் இப்படி சம்மதித்து இவன் பக்க

5. ல் கொண்ட அச்சு ச—, இவ வச்சு பொலியூட்டு கொண்டு சன்திராதி (த்த) வர் (ரை) செல்வதாக பிடிபாடுபண்ணிக் குடுத்தோம்

6. சிவப்பிராமணரோம் அமன (?) நாராயண விழுப்பரையனுக்கு.

*N. B.* அச்சு—பாண்டியரது பொன் நாணயம்.

---

* எமது ஸ்நேகிதர் மகா-ா-ா-ஸ்ரீ T. A. கோபிநாதராயரவர்கள் அபிப்பிராயப்படி நெடில், ஒற்று அடையாளங்களிட்டுச் சுலபமாய் வாசிப்பதற் கநுகூலமாயிருக்கும்படி எழுதப்பட்டிருக்கிறது.

# V.

## ஷடி கோவில்—தாம்ர சாசநம்.

## வீரபாண்டியன் காலம்.

(இது ஒரு அடி நீளம் அரையடி யகலமுள்ள ஒரு கனத்த செப்புத் தகட்டி லெழுதப்பட்டுளது. தலைப்பக்கம் விமாநம்போன்ற அநேகம் வளைவுகளுள்ளது. கணபதி சிவலிங்கம், அம்பாள் ஆகிய மூன்றுருவங்கள் தலைப்பி லெழுதப்பெற்றுள்ளது. சாலிவாகந சகாப்தம் 855-க்கு மேல் செல்லாநின்ற கொல்லம் 109-ம் ஆண்டி லெழுதப்பட்டதாகக் காணப்பட்டிருக்கிறது. ஆகவே 979-வருஷங்களுக்கு முன்னெழுதப்பட்டதாகத் தெரிகிறது. இது மிகவும் அசம்பாவிதம். அதிலுள்ள எழுத்தைப் பார்க்கும்போது 200, 300-வருஷங்களுக்கு முற்பட்டதாயிராதென்று நிச்சயமாய்த் தெரிகிறது. ஆகவே ஏதோ காரியங்களை உத்தேசித்துக் கற்பிதமாய்ச் செய்துகொண்டதென்று தோன்றுகிறது. 'நமக்கு நித்யபூசைக்கு' என்று சுவாமியின் வாக்காக எழுதப்பட்டிருப்பதும் நோக்கத்தக்கது. ஆயினும் விவேகிகள் பகுத்தறிந்துகொள்ளும் பொருட்டுக் கீழே பதிப்பிக்கிறோம் இச்சாசநத்தை நமது பார்வைக்குத் தந்ததற்காக, தாலுக்போர்டுமெம்பரும், வேளூர் கிராமமுனிசீபும், ஷடி கோவில் தருமகர்த்தர் ஸ்தலத்தாரும், ஷடியூர் முதல்மரியாதைக்காரரும் நமது அன்பருமாகிய ம-ா-ா-ஸ்ரீ ஆ. சங்கரலிங்கம் கவிராயரவர்களுக்கு, நன்றியறிதலுள்ளவராயிருக்கிறோம்.)

### முன்பக்கம்.

(1) உ ஸிவகுருவெவெ எற்ற துலோக்கிய நிர்ஜாநவம் (2) ஸாற காரணன் ஸ்வஸ்திஸ்ரீ ஸாலிவாகன ச (3) காப்தம் ௮௱௫௰௫-க்கு மேல் செல்லாநின்ற கொல் (4) லம் ௱௯ ௵ விசைய ௵ தைமீ ௨௰௪ ஆதித்த (5) வாரமும் பூர்வபக்ஷத்து தசமியும் ஸ்வாதி நக்ஷத் (6) ரமும் ஸிவநாமயோகமும் ஸிம்மகரணமு(ம்) (7) ஸாஹயோம ஸாஹகரணமு(ம்) பெற்ற ஸாஹதி (8) னத்தில் ஸ்ரீசே திருவழுதி வளநாட்டில் ஸ்ருதா (9) ஜெதமா ந வேளூரில் நயினர்

உத்ரவதீஸ்வர (10) நயினார் சகாதனம் ஸ்ரீநு உமாஉண்ணெஷ்வ (11) ஙநு பாதாளவிபாடன் திசைவெட்டிகண்(12)டான் ஷாஙணஸீவாஙாநு வஙண்யாக நம (13) க்கு நித்ய பூசைக்கும் ஊாரை நடக்கும்படிக்கு (14) நமக்கு விட்டுத்தந்த தெஙமாவதா வேளூர் பெருண (15) ங் கெல்கையாவது கிழ் எல்கை தென்மடல் (16) லோடிய ஓடைக்கும் வெயிலுகந்த அய்யனர் (17) கோவிலுக்கு மேற்கு; தென் எல்கை அழகி (18) ய கூத்தர் திருவிளையாட்ட எல்கைக்கு வடக்கு; மே (19) ல் எல்கை காஙமெஙகாஙநாதர் எல்கை (20) க்கும் ஒழுகு பரும் புக்கும் கிழக்கு; வட எல்கை தாஜ (21) வணிக் நயிக்கும் தெக்கு ஆகப் பெருணங்கெல்கை (22) க்குள்ப் பட்ட அக (ப்) பத்தில் உள்க் கிடை ஈ (?) அன்பது (23) மா நிலமும் புனல்க்குளம் நஞ்சை புஞ் சை (24) சொன்ன ஆரு (?) பலபட்டடை தோட்டக்கடமை புகை(25) யிலைக கடமை கொழு (......) டு கடமை வெர (?) கடமை—(26) மகட் டுக் கடமை ஆயம் ஊத்தைப்பாட்டம் உலா (27) வு காட்சி ஈழுவர் ஆனிவட்டம் மார்களி (?) வட்டம் ப (28) ள் வரி சனவரி குளம்பாசி விலை சகலபல (29) வராத்தியில் உள்ள நெல்வகை பணவகை முதலாகி (30) ய முதலும் ஸஷதெராம தெஙஸ்வாசியமஜஙம யொ(31) கூ மாக ஜஜஷியாநு வீஙவாண்ஷியநு வஙண்ய (32) ஆகநித்யல் பூசை ஊாரைக்கும் விட்டுத்தந்தபடி (33) யினாலே ஜாஉஙம நப மெவுரி ஸிவ காஉஙம (34) ணரியாருக்கு கூஜிவணெஷ்வவராண (35) ஆக

பின்பக்கம்

வஙாஜிதராஜ உள்ளவரையும் இந்த (36) யஜஷித்தை சூ (ர்) ஒருதர் பரிபாலனம் பண்ணு (37) வார்கஜொ கூவர்கஜஙக்கு கஷஐஸ்வயஷ (38) ஸஙவத்து உண்டாவதாகவும் ஙஙஜஷ்ஷெ

A. M. சடகோபராமாநுஜாசார்யன்,

திருச்சிராப்பள்ளி நேஷநல் ஹைஸ்கூல்.

---

# பக்திவைபவம்.

(எ0-ஆம் பக்கத்தொடர்ச்சி)

இவ்விஷயத்தைப்பற்றி அத்வைத ஸித்தாந்த மஹாபாஷ்யகாரர் என்ன சொல்லுகிறார் என்று அறிய முயலுவோம். அத்வைத ஸித்தாந்தம் துவைதமத ஸித்தாந்தத்தின்படிக்குள்ள எல்லா அபிப்பிராயங்களையும், மேலான பதவியைப்பற்றி அடையும் சர்வாபீஷ்டங்களையும் உள்ளபடி ஒத்துக்கொள்வதோடுகூட தெய்விகமான புருஷர்கள் அடையும் உன்னத கதியை ஒத்துத் தன்னுடைய முடிவான தீர்மானத்தை எவ்விதம் காட்டுகிறதென்று பார்ப்போம். எவர்கள் மோக்ஷத்தை அடைந்தபிறகுங்கூட ஜீவாத்ம மனோ நிலைமையை வைத்துக்கொள்ள இச்சித்துப் பரமாத்மாவினின்றும் பிரத்தியேகமாக விருக்கும் மனோநிலைமையை விரும்புகிறார்களோ அவர்கள் தங்கள் அபீஷ்டத்தை யடையவும், ஸகுணப்பிரம்மத்தின் ஆநந்தத்தை யநுபவிக்கவும் சமயங்கள் வாய்க்க இடமுண்டு. இவர்கள்தான் பாகவதபுராணத்தில் அடியில் வருமாறு சொல்லப்படுகிறார்கள். "ஓ இராஜனே எவர்களுடைய இன்பம்பரமாத்வாளிடத்தில்தானே இருக்கிறதோ, எவர்களை விட்டு எல்லாப் பந்தங்களும் நீங்கினவோ அப்படிப்பட்ட ஞானிகள் கூடச் சர்வாந்தர்யாமியான பகவானை பக்தியின்பொருட்டேபக்திசெய்யும்படியானஅப்பேர்க்கொத்த மகிமையுள்ள குணங்கள் லோகநாதனுக்கும் உண்டு." இவர்கள்தான் இந்த ஜன்மத்தில் பிரகிருதியோடு பரிபூர்ணமானபிறகு மறு ஜன்மத்தில் லோகாதிபதிகளாகப் பிறக்கிறார்களென்று சாங்கியர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் இவர்கள் ஒருவரும் ஈசுவரனான பகவானுக்குச் சமானமாகிறார்களில்லை. எங்கு சிருஷ்டியாவது சிருஷ்டி வஸ்துவாவது, சிருஷ்டிக்கிறவனாவது இல்லையோ, எங்கு அறிவாவது, அறியப்படும் விஷயமாவது அறியப்படுகிறனாவது இல்லையோ எங்கு நானாவது நீயாவது அவனாவது இல்லையோ எங்குச் செய்பவனாவது, செய்யப்படும் வஸ்துவாவது சம்பந்தம் ஆவது இல்லையோ அப்படிப்பட்ட நிலைமையை அடைகிறவர்கள் அங்கு யார் யாரைப் பார்க்கிறது யார் யாரால் பார்க்கப்படுகிறான். அப்படிப்பட்ட புருஷர்கள் எல்லாவற்றையும் கடந்திருக்கிறார்கள். அவர்கள் மனம்

வாக்குக்கு அப்புறம் போயிருக்கிறார்கள். இதுவல்ல இதுவல்ல என்று கண்டுபிடிக்கும் சச்சிதானந்த நிலைமையை அடைகிறார்கள். ஆனால் இப்படிப்பட்ட நிலைமையை அடையமுடியாதென்றாவது, அடையமாட்டோம் என்றாவது சொல்லுகிறவர்கள் பிரகிருதி, ஜீவன் இவ்விரண்டிலும் அந்தர்யாமியான ஈசுவரன், என்ற மூவகைத்தோற்றங்கள் ஒன்றாயிருக்கிற பிர்ம்மத்தில் நின்று தோன்றும் என்பார்கள். ஆனால் பிரஹலாதாழ்வான் தன்னைத்தான் மறந்தபோது அவன் இந்தப் பிரபஞ்சத்தையாவது அதன் காரணத்தையாவது காணவில்லை. அவனுக்கு எல்லாம் நாம ரூபத்தினால் பேதிக்கப்படாத ஒரு அநந்தமான வஸ்துவாக இருந்தது. தான் பிரஹலாதன் என்ற ஞாபகம் வந்தவுடனே அவனுக்கு முன்னால் பிரபஞ்சமும் அநந்தானந்த குணங்களுக்கு எல்லாம் நிதியான பிரபஞ்ச நாயகனும் இருக்கக்கண்டான். பிரம்மானந்தத்தோடே கூடின கோபிகைகளும் அம்மாதிரியே இருந்தார்கள். அவர்கள் தங்கள் சரீரத்தையும் ஜீவாத்மாவையும் மறந்திருந்த பரியந்தம் அவர்கள் எல்லோரும் கிருஷ்ணனாக இருந்தார்கள். அவர்கள் மறுபடியும் அந்த ஒருவனை பூஜிப்பதற்கு நினைக்க ஆரம்பித்தவுடனே அவர்கள் மறுபடியும் கோபிகைகளாக ஆனார்கள். அந்த க்ஷணமே கோபிகை களுக்கு ஸாக்ஷாத் மன்மதனுக்கெல்லாம் மன்மதனான திவ்ய சரீரத்தோடே, பீதாம்பர வஸ்திரத்தோடே கழுத்தில் அலங்காரமான மாலையோடே புன்சிரிப்போடு கூடின செந்தாமரை முகத்தோடே கிருஷ்ணபகவான் பிரசன்னமானார் என்பதைக் கவனிக்க வேண்டும்.

இப்பொழுது சங்கரர் சொல்லுவதைக் கவனிப்போம். ஸகுணப்பிர்ம்மத்தைப் பூஜிப்பதனால் தங்கள் சொந்த ஜீவாத்ம மனோநிலையை வைத்துக்கொண்டு பரமாத்மாவுடன் சாயுஜ்யபதவியை அடைகிறவர்களின் மகிமை அநந்தமாயுள்ளதா இல்லாததா? இந்த சந்தேகம் ஏற்படுவதற்கு அடியிற்கண்ட ஒரு வாதம் சொல்லக்கேட்கிறோம். அவர்களின் மகிமை அநந்தமாயுள்ளனவாக இருக்கவேண்டும் ஏனெனில் "அவர்கள் தங்கள் சுவாராஜ்யத்தை அடைகிறார்கள். அவனுக்குச் சகல தேவதைகளும் பூஜைசெய்கிறார்கள். அவர்களுடைய அபீஷ்டங்கள் எல்லா உலகங்களிலும் பூர்த்திசெய்யப்படுகின்றன" என்கிற சுருதிவாக்கியங்கள் கூறுவதினால் ஆதரிக்கப்படுகிறது. இதற்குப்

பிரதியுத்தரமாக, "பிரபஞ்சபரிபாலன சக்தியைத்தவிர என்று" வியாசபகவான் எழுதுகிறார். பிரபஞ்சசிருஷ்டி முதலான சக்தி நீங்கலாக மற்ற அணிமா லகிமா முதலான அஷ்டசித்திகளைப் போன்ற சக்திகள் மோக்ஷத்தை யடைந்தவர்களால்அடையப்படுகின்றன. பிரபஞ்சபரிபாலன சக்திமட்டில் நித்தியமாயுள்ள பரிபூரணனான ஈசுவரனுக்கே சொந்தமானது. ஏன்? பிரபஞ்சசிருஷ்டி முதலான காரியங்கள் அவனுக்கே உரியதெனச் சுருதிகள் சொல்லுவதாலும் எந்தவிடத்திலும் மோக்ஷத்தையடைந்தவர்கள் பிரபஞ்சசிருஷ்டி சக்தியை அடைவதாகச் சொல்லப்படாதிருத்தலுமே சான்றாகும், பரமாத்மா மட்டிலும் பிரபஞ்சத்தைப் பரிபாலனஞ் செய்யுந் தொழிலுடையவன். சிருஷ்டி முதலான காரியங்களைச் சொல்லும் வேதவாக்கியங்கள் எல்லாம் அவனையே குறித்துக் காண்பிக்கின்றன. எப்பொழுதும் பரிபூரணமாயுள்ளவன் என்கிற விசேஷணமும் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அணிமா முதலான சித்திகளும் பகவானைத்தேடிக் கண்டுபிடித்த பிறகு தான் உண்டாவதாக வேதவாக்கியங்கள் சொல்லுகின்றன. ஆகையால் மோக்ஷத்தையடைந்தவர்களுக்கு பிரபஞ்சபரிபாலனசக்தியே இல்லை. இதுவுமல்லாமல் அவர்கள் தங்கள் ஜீவாத்மமனோ நிலைமையை வைத்துக்கொள்ளுகிற காரணத்தை முன்னிட்டே அவர்களின் மனோ இஷ்டங்கள் மாறக்கூடியதும் ஸாத்தியம். அதனால் ஒருவன் சிருஷ்டிக்கவேண்டு மென்கிற மனோ பீஷ்டத்தைக்கொண்டால் வேறொருவன் ஸங்காரம் செய்யவேண்டுமென்கிற மனோபீஷ்டத்தைக் கொள்ளுவதும் சாத்தியம். இவ்விதமாக மோக்ஷத்தையடைந்தவர்களின் ஜீவாத்ம மனோநிலைமை மாறுபட்டுக் கொண்டிருப்பதைப் போக்கடிக்கச் செய்யும் ஒரே வழி எதுவென்றால் எல்லாமனோபீஷ்டங்களையும் ஒன்றுக்குக் கீழ்ப்படுத்தி நடக்கும்படி செய்வதுதான். ஆகையால் மோக்ஷத்தை யடைந்தவர்களின் மனோபீஷ்டங்கள் பிரபஞ்சபரிபாலனஞ் செய்யும் ஏகநாயகனான பரமாத்மாவின் இஷ்டத்துக்குக்கீழ்ப்பட்டதாக அதாவது பரமாத்மாவின் ஆஞ்ஞையின் மேல் நடப்பதாகவிருக்கிறது என்பதுதான் முடிவான தீர்மானம்.

இச்சூத்திரத்திற்கு மஹாபாஷியகாரரான இராமாநுஜாசாரியர் வியாக்கியானம் செய்வதில் என்ன சொல்லுகிறார் என்று ஆராய்வோம். பந்தத்தில் நின்றும் விடுபட்டு மோக்ஷத்தையடைந்த ஜீவாத்மாக்கள்

அடையும் சக்திகளில் ஏகமாயிருக்கிற பரமாத்மாவின் ஒப்பில்லாத சக்தியாகிற இப்பிரபஞ்ச சிருஷ்டி முதலான காரியங்களை நடத்திச் சகல புவனங்களுக்கும் தனி நாயகனாக இருக்கும் சக்தியும் அடங்கியிருக்கிறதா? அல்லது அப்படிப்பட்ட சக்தியில்லாமல் மோக்ஷத்தை அடைந்த ஜீவாத்மாக்கள் அடையும் மஹிமையெல்லாம் பரமாத்மாவைப் பிரத்தியக்ஷத்திற்கண்டு ஆனந்திப்பதோடுமட்டும் அடங்கினதா? என்கிற சந்தேகம் ஏற்படுவதால் அதற்கு அடியிற் கண்டபடி ஒரு சம்வாதம் சொல்லக்கேட்கிறோம். "அவன் ஒன்றாயிருக்கிற பரிசுத்தமான பரமாத்மாவுடன் சாயுஜ்ஜிய பதவியை யடைகிறான்." என்று சுருதி சொல்லுகையாலே பந்தத்தில் நின்றும் விடுபட்டு மோக்ஷத்தை யடைந்தவன் இப்பிரபஞ்ச நாயகனாகவும் ஆகிறான் என்று காரண காரியத்தோடே நம்பும்படி இருக்கிறது. ஏனென்றால் சுருதிகள் சொல்லுகிறபடி அவன் சாயுஜ்பபதவியை யடைகிறதோடேகூடச் சர்வாபீஷ்டங்களையும் அடைந்தவனாகிறான். இன்னும் இதிலிருந்து பார்ப்போமானால் சாயுஜ்ய பதவியும், சர்வாபீஷ்டங்களை அடைந்திருக்கும் தன்மையும் பரமாத்மாவின் ஒப்பில்லாத சக்தியாகிற இப்பிரபஞ்ச பரிபாலகனாக இருக்கும் சக்தியில்லாமல் அடையப்படமாட்டா. ஆகையால் சர்வாபீஷ்டங்களையும் சாயுஜ்ய பதவியையும் பரமாத்மாவுடன் அடைவதற்கு இம்முழுப் பிரபஞ்ச பரிபாலன சக்தியையும், மோக்ஷத்தை அடைந்தவன் அடைகிறான் என்று நாம் எல்லோரும் ஒப்புக்கொள்ளவேண்டியது கட்டாயமாக விருக்கிறது என்று இவ்விதமாக வாதிப்பதற்கு எதிராக மோக்ஷத்தை யடைந்தவன் பிரபஞ்சபரிபாலன சக்தியைத் தவிர மற்றெல்லா சக்திகளையும் அடைகிறான் என்று நாம் (இராமாநுஜாசாரியர்) பதில் சொல்லுகிறோம். பிரபஞ்ச பரிபாலனம் என்பது பரமாத்மாவின் யதார்த்த சுபாவத்தை மறைக்கின்ற எல்லாவற்றில் நின்றும் விடுபட்டவர்களாய் பரப்பிர்ம்மத்தைச் சதாகாலமும் பிரத்தியக்ஷத்தில் சேவித்துக்கொண்டு பிர்மாநந்தத்தை யனுபவிக்கும் மோக்ஷத்தையடைந்தவர்களைத் தவிர மற்ற எல்லாச் சேதனு சேதன வஸ்துக்களின் ரூபம் ஜீவன் அபீஷ்டங்கள் இவைகளை நடத்துவதுதான். இது "எவனிடத்திருந்து சகல வஸ்துக்களும் உதித்து எவனால் ஜீவிக்கின்றனவோ வெவனிடத்திற்கு அவைகள் மறுபடியும் திரும்பிச் செல்கின்

றனவோ அப்படிப்பட்டவனே விசாரித்துப்பார். அவனே பிரப் பிரமம்" என்கிற சுருதி வாக்கியத்தினுல் ரூபிக்கப்படுகிறது. பிர பஞ்ச பரிபாலனஞ்செய்யும் இப்படிப்பட்ட குணம் மோக்ஷத்தை அடைந்தவர்களுக்கு சாதாரணமாய் உள்ள குணம் என்றால் பிரபஞ்ச பரிபாலனத்தின் மூலம் அவனே நிரூபித்துக்காட்டும் இந்தச் சுருதி வாக்கியம் பிரமத்தின் இலக்ஷணத்தை சொல்லுவதாக மாட்டாது. அசாதாரணமான வஸ்துவின் இலக்ஷணமட்டிலும் அன்றோ, விசே ஷித்துச் சொல்லவேண்டியிருக்கின்றது. ஆகையால், "என்னுடைய பிரியமுள்ள குழந்தாய்! ஆதியில் தனியே இரண்டற்றதான ஏக வஸ்து இருந்தது. அதுவே அநேகம் ஜீவராசிகளை உண்டுபண்ணக் காரணமாயிருக்க நிச்சயித்தது. அந்த ஒன்றிலிருந்து இப் பிரபஞ்ச விரிவு உண்டாயிற்று. அவன்பார்த்து உலகத்தை உண்டுபண்ணி ஞன். அவன் பிற்பாடு பிரபஞ்சத்தை வெளிப்படுத்தினன். நாரா யணன் மாத்திரமே ஆதியானவன். பிர்ம்மா, ஈசானன், பிருதிவி, நக்ஷத்திரங்கள், ஜலம், அக்கினி, சோமன், சூரியன் இவை முதலிய ஒன்றுமில்லை. அவன் தான்மட்டிலும் தனியேயிருப்பதால் இன்பம் அடையவில்லை. அவன் தன்னுடைய தியானத்திலிருந்து ஒரு புத் திரி தசேந்திரியங்கள் முதலானவற்றையுங் கண்டான். பூமியிலிருந்து கொண்டே பூமியிலிருந்தும் பிரத்தியேகமாய் இருக்கிறான்" என்று சொல்லும் இவைகளையொத்த சுருதிவாக்கியங்கள் பிரபஞ்சபரிபால னத் தொழிலுக்குக் காரணபூதன் பரமாத்மாவாக இருக்கிற ஏக வஸ்துவைச் சொல்லுகிறது. பிரபஞ்சபரிபாலன விவரங்களை விஸ் தாரமாக எடுத்துச்சொல்லும் சுருதிவாக்கியங்களில் பிரபஞ்ச பரி பாலன சக்தி மோக்ஷத்தைபடையும் ஜீவாத்மாவுக்கும் உண்டு என்று எங்கும் சொன்னதாகக் காணேம். பிரபஞ்ச பரிபாலன சக்தி மோக்ஷத்தை படையும் ஜீவாத்மாவுக்கும் உண்டு. என்று வேதப் பிரமாணங்கள் இருப்பதாக மேற்சொன்ன அபிப்பிராயத்திற்கு விரோ தமாகப் பிரத்தியக்ஷப் பிரமாணத்துடன் சொல்லும் பக்ஷத்தில் அப் பேர்க்கொத்த வேதவாக்கியங்கள் கீழ்ப்பட்ட ஜீவாத்மாக்களாகிற மோக்ஷத்தை யடைந்தவர்களின் மஹிமையைச் சொல்லுவதாக இருக் கிறது. என்று அடுத்த சூத்திர பாஷ்யத்தில் இராமாநுஜாசாரியர் சொல்லுகிறர். இதுவும் சுலபமாக வித்தியாசம் கண்டுபிடிக்க ஒரு

வழியேயாகும். இராமாநுஜாசாரியருடைய சித்தாந்தம், எல்லாம் ஒன்று என்று ஒப்புக்கொண்டாலும் அப்படி எல்லாம்சேர்ந்த ஒன்றினுள்ளே நித்தியமான பேதங்களும் இருக்கின்றன. ஆகையால் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் மிகவும் தெளிவாய் வித்தியாசம் சொல்லி நிரூபிக்க மிகவும் சுலபமாக இருந்தது.

மேற்கண்ட காரணகாரியத்தை முன்னிட்டு பிரமத்தினிடத்தில்

பக்தியை அவனுடைய சகுணரூபத்தில் மாத்திரம் செலுத்தமுடியும்

"அவ்யக்தாஹி கதிர்து:கம் தேஹவத்பிரவாப்யதே"

என்கிறபடி பரிபூரண வஸ்துவினிடத்தில் பற்றுதலுள்ள மனதையுடையவர்களுக்கு மார்க்கம் மிகவும் கஷ்டமாக இருக்குமா? நமது சுபாவமாகிற பிரவாகத்தில் பக்தி தடையில்லாமல் மிதந்து செல்லவேண்டியிருக்கிறது. மானிடஸ்வரூபகுணமில்லாத பரப்பிர்ம்மத்தை நெஞ்சினால் நினைக்கமுடியாது என்பது உண்மையேயாகும். ஆனால் நாம் அறிகிற ஒவ்வொரு வஸ்துவும் அவ்விதமாகவே இருக்கவேண்டுமென்பது உண்மையில்லை. மனோதத்துவ சாஸ்திரத்தில் மகா நிபுணரான பிரசித்திபெற்ற கபிலபகவானனவர்" அந்தர் முகமாயாவது, "பஹிர்முகமாயாவது (மனதினாலாவது, கண்களினாலாவது) பார்க்கப்படும் பதார்த்தங்களின் சேர்க்கை வஸ்துக்களில் மனிதனுடைய மனச்சாக்ஷியும் ஒன்று" என்று நிரூபித்துக் காட்டியிருக்கிறார். நமது சரீரம் முதல் கடவுள்வரை நாம் பார்க்கும் ஒவ்வொரு வஸ்துவினிடத்திலும் இந்த மனச்சாக்ஷியும் வேறொன்றும் சேர்ந்திருக்கிறதென்று நாம் காணலாம். இப்படிப்பட்ட இன்றியமையாத சேர்க்கையைத் தான் "நிஜமானது" என்று நாம் சாதாரணமாய்ச் சொல்லுகிறோம். மனிதனுடைய மனதினால் அறிய சாத்தியமுள்ள எல்லா உண்மைப்பொருளும் இந்த விதியின்படியே எப்பொழுதும் சத்தியமாக இருக்கிறது. ஆகையால் ஈசனை மானிட சுரூப குணமுள்ளவனாக இருக்கிற காரணத்தை முன்னிட்டுத் தத்துவப்பொருளல்ல என்று சொல்லுவது முழுமுடத்தனமேயாகும். உண்மை என்கிற பதத்தினால் வெளிப்படையாகவும் இரகசியமாகவும் கொள்ளப்படும் எல்லா அபிப்பிராயமும் ஈசுவரபாவத்தில் அடங்கியிருக்கிறது. பிர

பஞ்சத்திலுள்ள மற்றெல்லாவற்றையும்போல ஈசுவரனும் உண்மையே என்பதுதான். "நீ ஆண்டான் நான் அடிமை" என்னும் நிலையைப பின்பற்றி நிச்சலமாயும், நிர்மலமாயும், சாந்தமாயும் இருந்து பரிபக்குவம் அடையும் மனிதனுக்குப் பிர்ம்மசாக்ஷாத்காரம் கைகூடுகின்றது. ஆசையெனும் சண்டமாருதத்தால் இருதயாகாசம் மோதப்பட்டிருக்கிறவரையில் ஈசுவர பிரதிபிம்பமாவது ஈசுவர தரிசனமாவது உண்டாவது அசாத்தியம். நன்றாய் மலர்ந்த மலரின் நறுமணத்தைக் காற்றுக்கொண்டு நாற்றிசைகளிலும் வீசும்பொழுது தேனீ தானாகவே அம்மலரிடம் வருகின்றது. தித்திப்புப் பண்டங்கள் வைத்திருக்கும் இடத்திற்கு எறும்புகள் தாமாகவே வந்துசேர்கின்றன. தேனீயையாவது, எறும்பையாவது ஒருவரும் வருந்தி யழைக்கவில்லை. அதுபோலவே ஒருவன் பரிசுத்தனாகிப் பூரண நிலையடையும்பொழுது அவனது சீலத்தின் திவ்வியப் பிரபாவத்தினாலே பகவான் ஞாபகமும் பரலோக ஞாபகமும் உண்டாகின்றன. அரசவது தயவால் ஏழை தனிகனாவதுபோல் பகவானது திருவருளால் அஷ்டைசுவரியமும் நிறைந்த பேரின்ப மோக்ஷத்தையடைகின்றான்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு.

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்.

வி. தி. ஸ்ரீநிவாஸையங்கார்,

தமிழ்ப்பண்டிதர்.

---

# INSECT PESTS.

## பயிர்களுக்கு நஷ்டத்தை உண்டுபண்ணும் பூச்சிகளைப்பற்றி.

எல்லாவித பயிர்களும் பூச்சிகளால் பீடிக்கப்படக்கூடியவைகள். அப்பூச்சிகள் உருவத்தில் சிறியவைகளாகவிருந்தாலும் எண்ணிக்கையில் ஜாஸ்திபாயிருந்து பயிர்களுக்கு அதிக நஷ்டத்தை உண்டுபண்ணுகின்றன. மழையின் ஒரு துளி சிறியதேயாயினும், அநேக மழைத்துளிகள் சேர்ந்து பூமியில் விழும்போது வெள்ளம் தோன்றி அதிக நஷ்டத்தையும் உண்டுபண்ணும். பூச்சிகள் தோன்றும்போது அதுபோலவே நேரிடுகிறது ஒரு பூச்சியானது அதின் ஆயுள் முழுவதும் சில இலைகளைத்தான் தின்னும். ஆனால் ஒரு பயிரில் ஏராளமான பூச்சிகள் விழுமானால், பயிரின் ஒவ்வொரு இலையையும் தின்று மகசூலை நஷ்டமடையச் செய்யும். ஒவ்வொரு குடியானவனும் தன்னுடைய பயிர் பூச்சிகளினால் பீடிக்கப்பட்டு தான் நஷ்டமடைந்துபோவதை அறிந்திருப்பான். அவ்வித நஷ்டத்தை எவ்விதமாய் தடுப்பது என்பதை அறியவும் பலமுறை விரும்பியிருப்பான். பூச்சிகளில் எல்லா விதங்களைப்பற்றியும், முக்கியமாய் பயிர்களுக்கு கெடுதலையுண்டுபண்ணும் பூச்சிகளைப்பற்றியும், செவ்வையாய் ஆராய்ந்து பரிசோதனை செய்வதற்காக கவர்ன்மெண்டார் ஒரு உத்தியோகஸ்தரை நியமித்திருக்கிறார்கள். எந்த நிலச்சுவான்கள் அல்லது குடியானவர்களுடைய பயிர்கள் பூச்சிகளால் பீடிக்கக்கூடிய நிலைமையில் அல்லது நஷ்டப்படுத்தப்பட்டாவது இருக்குமானால் அப்போது அவர்கள் இந்த ஆபீசுக்கு எழுதி அவருடைய ஆலோசனையைக் கோரவேண்டும். ஒவ்வொரு விதப் பூச்சியையும் நிவர்த்திக்க முறைகள் சொல்லுவது இப்போது சாத்தியமில்லையென்றாலும், பூச்சிகளில் அநேகத்தை நிவர்த்திக்க மார்க்கங்கள் சொல்லக்கூடும். பயிர் ஜாஸ்தியாய் பீடிக்கப்பட்டிருந்தால், அந்த சந்தர்ப்பத்தில் பயிரையும் சாகுபடி முதலியவற்றையும் நேரில் பார்வையிடவும், அதன் பிறகு பூச்சியின் பாதையை நிவர்த்தி செய்யும்பொருட்டு விஷயம் தெரிந்த ஒரு ஆபீஸரை அனுப்பி உதவி செய்யக்கூடும். நஷ்டத்தை உண்டுபண்ணும் பூச்சிகளை நேரில் பார்வையிடாமல் பொதுவாய் ஆலோசனை சொல்லுவது அசாத்தியம். "என்னுடைய

நெல்பயிர் பூச்சிகளால் சேதப்படுத்தப்பட்டிருக்கிறது. தயவுசெய்து அதை நிவர்த்திக்க முறைகள் தெரியப்படுத்தப்படவேண்டும்” என்று எழுதுவது உபயோகமில்லை. ஏனெனில் நெல் பயிரை சேதப்படுத்தக்கூடிய பூச்சிகள் குறைந்தபட்சம் 12-தினுசுகள் இருப்பதாலும், அவைகளில் இன்னதுதான் இந்த சந்தர்ப்பத்தில் நஷ்டத்தை உண்டு பண்ணுகிறதென்பது தெரியாது. பூச்சி யின்னதென்பதை அறியாமல் ஆலோசனை கூறுவதும் அசாத்தியம்.

நஷ்டத்தை உண்டுபண்ணிக்கொண்டிருக்கிற அல்லது உண்டு பண்ணுவதாகத் தோன்றுகிற பூச்சிகளில் சிலவற்றை அனுப்ப வேண்டும். அப்போது எந்தப் பூச்சி நஷ்டத்தை உண்டுபண்ணுகிறதென்பதைக் கண்டுபிடித்து அதை நிவர்த்திப்பதற்கேற்ற முறைகள் சொல்லக்கூடும். அப்பூச்சிகளை உயிரோடிருக்கும்படி ஒரு தகரம் அல்லது மரப்பெட்டியில் கசக்கப்பட்ட காகிதம் அல்லது இலைச்சரகு முதலியவற்றோடும், ஆபீஸரிடம் வந்து சேரும் வரையில் வழியில் ஆகாரமாக உபயோகப்படும்படி அது தின்னக்கூடிய பச்சைத் தட்டை அல்லது தழையையும் கொஞ்சம்போட்டு (unregistered) அன்ரிஜிஸ்டர்ட் தபால்பார்சல் மார்க்கம் அனுப்பவேண்டும். தகரப் பெட்டி கிடைக்காவிட்டால் ஒருபுறம் கணுவுள்ள மூங்கில் குழாய் ஒன்றை தக்கை அல்லது மரத்தால் செய்யப்பட்ட அப்பினால் மூடி பூச்சிகளை உயிரோடு அனுப்பலாம். ஆனால் மூடி பலமாகப் போடப் பட்டிருக்கவேண்டும். அவ்விதம் அனுப்பப்படும் எல்லாப் பார்சல்களில் அனுப்புகிறவர்களுடைய பெயரும் முழுவிலாசமும் செவ்வையாய் எழுதப்பட்டிருப்பதுடன், எந்தப் பூச்சியைப்பற்றி ஆலோசனை கோரப்படுகிறதோ, அதைப்பற்றிய முழு விபரங்களடங்கிய ஒரு கடிதமும் இருக்கவேண்டும். அதாவது பிடிக்கப்பட்ட பயிர் நஷ்டத்தின் தன்மையையும் அளவையும், எப்போது முதல் தோன்றியதென்பதையும், முந்தின வருஷங்களில் அவ்விதமான பூச்சி தோன்றியிருக்கிறதா என்பதைப்பற்றியும் எழுதவேண்டும்.

பூச்சிகளைப்பற்றிய எல்லா பார்சல்களும் கடிதங்களும் கீழே குறிக்கப்பட்டிருக்கிற விலாசத்திற்கு அனுப்பவேண்டும்.

கவர்ன்மேண்ட் எண்டமாலோஜிஸ்ட், விவசாய காலேஜ்,
கோயம்புத்தூர்.

டி. பெயின்பிரிக்கி ப்ளெச்சர்,
கவர்ன்மேண்ட் எண்டமாலோஜிஸ்ட்.

முதிர மூன்று மாங்காயாகிய தநுத்திரயங்களின் சம்பந்த நீங்கப்பெற்றது. மூன்றுமடிக்கு - நீங்கிய அவ்விடத்து ஆராயுங்கால் ஒளியாகிய சிவத்தில் ஒடுங்கியிருந்தார்கள் பரைமுதலிய பஞ்சகன்னியர்களும். நான்காமடிக்கு - பூசைத்தானமாகிய விதையகமல மலரடி நடுவிலே (அச் சிவமாகிய பரமான்மா) விளங்கிநின்றுனென்றவாறு.

எனவே யதிற் கலப்புறுக வென்ப தெஞ்சிநின்றது. அக்கன் வலித்தல் விகாரமாயிற்று. அரி - ஒளி. ஆயில் - ஆராயில். நக்கு - விளங்கி. சிவத்திற் சத்தி யடங்கலால் அரியிற் கன்னிய ரடங்கினரென்றூர். பழுத்து பழுக்கவெனத் திரித்துரைக்க. அரிக்கு என்பதிற் குவ்வுருபு மணற்கீன்ற நாணற்கிழங்கின் முளையென்றது போனின்றது.()

கூகையும்பாம்புங்கிளியொடுபூனையு
நாகையும்புள்ளுநடுவிலுறைந்தன
நாகையைக்கூகைநணுகலுறதலுங்
கூகையைக்கண்டெலிகூப்பிடுமாறே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - கூகையாகிய வான்மாவும் பாம்பாகிய வாணவமுங் கிளியாகிய நல்வினையு மதனோடு பூனையாகிய தீவினையு நாகையாகிய சிற்றறிவும் புள்ளாகிய மநாதி யந்தக்கரணங்களுமாகியவிவைகள் மாயை யிடையிற் சந்தித்துறைந்தன. பின்னிரண்டடிக்கு-நாகையாகிய சிற்றறிவைக் கூகையாகிய வான்மாச்சேர்தலும் பந்தத்திலகப்பட்டுக் கூகையைக்கண்டுநடுங்கி யெலிகதறுமாறு துன்புற்றுப் புலம்புவனென்றவாறு.

ஓர் காலறிவு விளங்காமையு மோர்கால் விளங்கலு முடைமை பற்றி ஆன்மாவைக் கூகையென்றும், விடத்திற் பதிந்தவன் மயங்கிக் கிடப்பதுபோல ஆணவத்திலழுந்தி மயங்கிக்கிடத்தலால் அவ் வாணவத்தைப் பாம்பென்றும், மகிழ்ச்சியைத் தருதலால் நல்வினையைக் கிளியென்றும், அருவருப்பு முதலிய குணமுடைமையாற் றீவினையைப் பூனையென்றும், அற்பவுணவை விரும்புதலுடைமையாற் சிற்றறிவை நாகையென்றும், பயனுள்ளவிடந்தேடி நகரச்செல்லுதலுடைமையால் அந்தக்கரணத்தைப் புள்ளென்று முருவகமாகக் கொண்டுரைத்தாரென்க. புள் - வண்டு. நாகை - ஒரு பறவை. (௯௪)

அற்றவெளியிலறப்பாழதனி
லுற்றபொருளினுணர்வைபறியா
ருற்றபொருளினுணர்வையறிந்தபின்
பெற்றபொருளேபிறவாநெறியே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு-இருவகைப்பற்று மியல்பாகவே யற்றிருக்கின்ற வெளியிற் பெரும்பாழ்போல விளங்குதலுற்ற வானந்தப்பொருளாகிய சிவத்தைபறியு முணர்வாகிய சிவஞானத்தை யறியாரா யிருக்கின்றார்கள். பின்னிரண்டடிக்கு - அங்ஙனமுற்ற பொருளையறிபு மவ் வத்துவிதமாகுமறிவை யறிந்தபின் அதனாற்பெற்ற பொருளாகிய பயனே முத்திநிலையாமென்றவாறு.

பாழ் எனப் பெயர்கூறுதலைத் திருவானைக்காப்புராணம், ஞானவுபதேசப் படலத்தில் "மன்னுமுப்பாழுமொருவிமேற் பெரும்பாழெனு முவப்பிலானந்தப் பொருளோடேகமாய்ப்பொருந்திடு முத்தராயிருந்தார்" எனக்கூறியதனாற் காண்க. இல் - ஒப்புப்பொருட்டு. ()

ஆயத்துணின்றவறுசமையத்தோருங்
காயத்துணின்றகடவுளைக்கண்டிலர்
மாயக்குழியில்வழுவாமனைமக்கள்
பாயத்துணின்றபதைக்கின்றவாறே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - கூட்டத்தினகத்தேநின்ற வறுவகைப்பட்ட சமையத்தோர்களுங் காயத்துள்ளும்(பாலினெய்போலக் கலந்து மறைந்து) நின்ற கடவுளைக் காணுமுறைப்படி கண்டாரில்லை. பின்னிரண்டடிக்கு - (அங்ஙனங்காணாமையால்) மாயமாகிய பிறவிக் குழியினின்று தவறுதழுந்திக்கிடக்கின்ற மனைவிமக்களாகிய அபாயத்துள்ளே (கிடந்து) நடுங்குகின்றவாறுயிற்றென்றவாறு.

ஈண்டு அறுவகைச் சமையமாவன—பாடாணவாத சைவமுதற் சிவாத்துவித சைவமீறாகிய வாறுமாம். அன்றி மாவிரத முதலியனவுமாம். அறுவகைச் சமையத்தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறாய் நின்ற பொருளை ஆனைகண்ட குருடர்போற் கண்டுரைத்தமையாற் கண்டிலரென்றார். பாயம் முதற்குறை. இக் கவியைப் புறச்சமையதூடணமாகவுங் கொண்டுரைப்பர். மனைமக்களைக் கூறவே இனம்

பற்றித் தந்தை தா யுடன்பிறந்தார் பௌத்திரர் முதலானவரையுங் கொள்க; இவர்களை அபாயமென வீண்டுக்கூறல்போலவே திருநாவுக்கரசுநாயனாரும் தேவாரம் பொதுவில் "தந்தையார் தாயாருடன்பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தாமாரே, வந்தவாறெங்ஙனனே போமாறேதோ மாயமாம்" எனக் கூறியருளினமை காண்க. (சுசு)

கத்துங்கழுதைகள்போலுங்கலாதிகள்
சுத்தசிவமெங்குந்தோய்வுற்றுநிற்கின்ற
குற்றந்தெரியாமற்குணங்கொண்டுகோதாட்டிப்
பித்தேறிநாளும்பிறந்திறப்பாரே.

(இ - ள்.) முதலடிக்கு-கலையாதிமண்ணாந்தமாகிய வவைகளெல்லாம் ஒரு பயனுமில்லாமற் கதறுகின்ற கழுதைகளை யொத் திழிந்த தரமாயிருக்கும். இரண்டாமடிக்கு - நின்மலமாக விளங்குகின்ற சிவம் பாலினெய்போலத் தெரியப்படாம லெங்குங்கலந்திருக்கின்றது. பின்னிரண்டடிக்கு - (அதனையறியாது) அக்கலையாதி மண்ணாந்தமான வைகளைக் குற்றமென்று தெறியாமற்பற்றிக் குணமாகக்கொண்டு பாராட்டி மயக்கமதிகரிக்கப்பெற் றெந்நாளும் வீணாகப்பிறந்திறப்பாரென்றவாறு.

இஃதோர் கொடுமையிருந்தவா றென்னையென்ப தெஞ்சிநின்றது. கலையாதிமண்ணாந்தமானவைகளைச் சிவஞானபோதம், மூன்றுஞ் சூத்திரம் ஏழாமதிகரணத்திற் காண்க. நிற்கின்றது என்றது நிற்கின்ற எனக்கடைக்குறையாயிற்று. (சுஎ)

பாம்புமதியைத்தினலுமப்பாம்பு
தீங்குக்கதிரையுஞ்சேரத்தினலுறும்
பாம்புமதியும்பகைதீர்த்துடன்கொளி
னீங்கல்கொடானெங்நெடுந்தகையோனே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு—பாம்பாகிய வாணவமலம் அறிவாகிய வான்மாவை விழுங்கலும் (அதனுடனமையாது) அப்பாம்பு தீங்குக்கதிராகிய பசுஞானத்தையு முடன்றின்னும். பின்னிரண்டடிக்கு-(ஆசாரிய னருண்முறைநின்று) ஆவ்வாணவமு மான்மாவும் அநாதியேபற்றிய பகையைத் தீர்த்து அடக்குமுறையிலடக்கி அத்துவித

பாவனையைக் கொண்டால் உயர்ந்த பண்பையுடையனாகிய பரசிவன் றன்னைவிட்டு நீங்குதலைச் செய்யானென்றவாறு.

அநாதியே ஆணவமலம் பற்றியதென்பதை "மலகன்மமன்றுள வாம்" எனக்கூறிய சிவஞான போதம்-உ-ஆஞ் சூத்திரம்-இரண்டா மதிகரணத் திருவெண்பாவா லறிக. (ருஅ)

திகைக்கின்றசிந்தையுட்சிங்கங்கண்மூன்றண்டு
நகைக்கின்றநெஞ்சினரிக்குட்டிநாலு
மகைக்கின்றசெஞ்சளானைகளைந்தும்
பகைக்கின்றநெஞ்சிற்பகையாவருமே.

(இ - ள்.) நான்கடிக்கும் — பந்தமுற்றுத் திகைப்புறுகின்ற ஆன்மாவிற் சிங்கங்களாகிய முக்குணமுள்ளன (இன்னும்) அவ்வான் மாவில் நரிக்குட்டிகளாகிய வந்தக்கரண நான்கும் விளங்குகின்றன (அன்றியும்)வேதனையுறுகின்ற அவ்வான்மாவி லானைகளாகிய பஞ்சப் பொறிகளும் பகைக்கின்றன இவைகளெல்லாம் அவ்வான்மாவிற்கு அநாதியே பகையாவருமென்றவாறு.

இவற்றையறிந்து வெல்வதே யறிவிற்பெரியோர்கடன் என்ப தெச்சமாக வருவித்துரைக்க. பொறி யந்தக்கரணங்கட்கு மேம்பட்டு மூலப்பிரகிருதியின் றோற்றமா யிருத்தலால் முக்குணத்தைச் சிங்க மென்றும், சேட்டை புரிவதனால் அந்தக்கரணத்தை நரிக்குட்டியென் றும், களிப்புறுதலாற் பொறிகளை யானைகளென்றுங் கூறினர். ஆன் மாவைச் சிந்தையெனக் கூறியதனைச் "சிந்தையைச் சிவனென்றுஞ் சிவனைச் சிந்தையென்றும்" எனக்கூறிய சிவஞானசித்தியார்-௯-ஆஞ் சூத்திரம்-உஅ-ஆந்திருப்பாட்டி லறிக. (ருகூ)

தண்டேறுடித்தலைப்பெய்தயோகிக்கு
மண்டலமூன்றுமகிழ்ந்துடனேத்திடுங்
கண்டவர்கண்டனர்காணார்வினைப்பயன்
பிண்டம்பிரியாப்பிணக்குகின்றாரே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு—ஆதாரமாய் நிற்குந் தண்டா கிய சிவசத்தி துணையாகச் சென்று சிவத்தைக் கலந்த யோகிக்குச் சந்திரமண்டலஞ் சூரியமண்டல மக்கினிமண்டல மிம் மூன்றும் வச

மாகையினாலே அவை யினிமையுற்றிசைந்திருக்கும். மூன்றாமடிக்கு- அவ்வாறு கண்டறிந்தவரே சிவத்தைக்கண்டு கலந்தவர் அவர் இரு வினைப்பயனை யநுபவித்தறியார். நான்காமடிக்கு—(அவ்வாறறியாத வர்) அவ்வினைப்பயனாகிய சரீரசம்பந்தத்திலகப்பட்டு நீங்காமற் பிணங்கியிருக்கின்றா ரென்றவாறு.

தலைப்பெய்த யோகிக்கு நுகரக் கடவனவான வினைப்பயன் களெய்தாமையாற் காணார் வினைப்பயனென்றார். பிண்டம்-சரீரம். மகி ழ்ந்துடலொத்திடும் எனப்பாடங் கூறுவர். அது பொருட் சிறப்பின் மையாலது பாடமன்றென்க. (எ0)

பத்துப்பரும்புலியானைபதினைந்தும்
வித்தகரைவர்விநாயகரெண்ம
ரத்தகுமூவராறுவர்மருத்துவ
ரத்தலையைவரமர்ந்துநின்றாரே.

(இ - ள்.) நான்கடிக்கும்—தசவாயுவாகிய பத்துப்பெரிய புலி யுந் தன்மாத்திரையு ஞானேந்திரியமுங் கன்மேந்திரியமு மாகிய பதி னைந்து யானைகளும் இவற்றைப் பிரேரேபிக்கிற சிவதத்துவங்களாகி வித்தகரைவரும் ஐவகையவத்தையுந் திரிகாலமுமாகிய விசேட முள்ள நாயகரெண்மரும் அத்தன்மையுள்ள முக்குணமாகிய மூவரும் ஆறாதாரங்களாகிய வாறு மருத்துவரும் அவ்விடத்துக்கு முன்னூரிய ஐவகைப்பாசமாகியவை வரும் (பிண்டத்துள்ளே) தங்கிநின்றாரென்ற வாறு.

இங்ஙன மிவற்றைப் பகுத்தறிந் திவற்றினியல்பையுணர்ந்து கொள்க வென்பதெஞ்சி நின்றது. இங்குக் கூறிய வுருவகத்திற் றிணை விரவி மிகுதிபற்றி நின்றாரென வுயர்திணைமுடிபேற்றது. வாயுவா கிய புலியாதிகளை யாறாதாரங்களாகிய மருத்துவரைக்கொண்டு வெல்ல வேண்டுமெனக் கூறினாரென்க. இத்தசவாயு முதலியவற்றியல்பை ஞானமிர்தக் கட்டளையிற்காண்க. (எக)

முன்னிக்கொருமகன்மூத்திக்கிருவராம்
வன்னிக்குமூவர்வதுவைக்குநால்வர்
கன்னிக்குவைவர்மின்னாளில்லைகன்னியை
கன்னிக்குக்கன்னிகாதலித்தாளே.

(இ - ள்.) முன்னிக்கொருமகன்—ஆகாசமாகிய முன்னியென் பவனுக்குச் சத்தமாகிய வொருமகனும். முத்திக்கிருவராம்—வாயுவாகிய முத்தியென்பவனுக்குச் சத்த பரிசமாகியவிரண்டு பிள்ளைகளாம். வன்னிக்குமூவர்—அக்கினியாகிய வன்னியென்பவனுக்குச் சத்த பரிச ரூபமாகிய மூன்று பிள்ளைகளாம். வது வைக்கு நாலவர்—அப்புவாகிய வதுவை யென்பவளுக்குச் சத்த பரிச ரூப ரசமாகிய நான்கு பிள்ளைகளாம். கன்னிக்குவைவர்—பிருதிவியாகிய கன்னியென்பவளுக்குச் சத்த பரிச ரூப ரச கந்தமாகிய ஐந்து பிள்ளைகளாம். மின்னுளில்லை கன்னியை—இந்த வைந்து மாதருக்கும் விளங்கிய நாயகரில்லை கன்னிகையாக விருக்கின்றார்கள். கன்னிக்குக்கன்னி காதலித்தாள்—(இவ்வைவரும் பிள்ளைபெற்ற தெவ்வாறென்னில்?) கன்னியைக் கன்னி கூடிப்பெற்றவாறு மென்றவாறு.

இவ்வியப்புணர்க வென்ப தெஞ்சிநின்றது. ஏனைய பூதத்திற்கு முன்னிருப்பதனான் முன்னியென்றும், அடக்கமுடியாது விட்டுவிடுதலான் முத்தியென்றும், ரூபமுடைமையால் வன்னியென்றும், முக்கியமாய்க் கலந்துகொள்வதனால் வதுவையென்றும், அழியா நிலையாகக் காணப்படுதலாற் கன்னியென்றுங் கூறினார், மாயையினமிசமாயிருப்பதனா லிப்பூதங்களைக் கன்னியென்றார். இவைகள் சிவசத்திபிரேரிக்க மாயையிற்றோற்றலா லிங்ஙனங் கூறினாரென்க. ஆம்-அசை. ()

அநாதிசொரூபியாகியவான்மாத்
தனாதிமலத்தாற்றடைபட்டுநின்றன
றனாதிமலமுந்தடையறநீங்கி
லநாதிசிவத்துடனொன்றாவாறே.

(இ - ள்) அநாதி—உற்பத்தியில்லாதது. தனாதி—தன்னொடுற்பத்தியாயது. ஒன்றுதல்—அத்துவிதமாதல். ஏனையவற்றை விரித்துரைத்துக்கொள்க. இங்ஙனம் பசு பாச பதி யியல்பைச் சுருக்கிக் கூறியவாறு காண்க. (எஙு)

போக்குவரவற்றபூரணகாரண
னேக்கவரியனுண்ணியனுண்ணியன்
றேர்க்குமலத்தன்செவனுக்குரியவன்
பார்க்கில்வியாபிபலவனுமத்தானே.

(இ - ள்.) கடையடி முதலாக வியைத்துரைக்க. ஆராய்ந்து பார்க்கில் வியாபியாகிய பலவாகிய வான்மா நிறைந்த மலத்திலழுந்தி யிருப்பவனுதலால், நாசோற்பத்தியில்லாத பூரணனுகியும், பிரபஞ்ச காரணனுகியும், யாருணர்வாலு நோக்குதற் கரியவனுகியு, மிகநுணு கியவனுகியு மிருக்கின்ற பரமசிவனுக் குரியவனுகிய வடிமையாவ னென்றவாறு.

இக்கருத்தைச் சிவஞானபோதத்தில், "நாமல்ல விந்திரிய"மென் னுந் திருவெண்பாவிற்காண்க. அடுக்கு வியப்புப்பற்றி வந்தது. (எச)

காயம்பலகைகயிறைந்துகண்மூன்று
வாயம்பொருவதோரைம்பத்தோரக்கர
மேயெம்பெருமானிருந்துபொருகின்ற
மாயக்கயிற்றின்மறைப்பறியாரே.

(இ - ள்.) நான்கடிக்கும்—சரீரமே சூதாடுபலகையாகவும்,பஞ் சவிந்திரியமே சூத்திரக்கயிருகவும், (முக்குணவசமாக நடப்பதனுலே) முக்குணமே மூன்றுகண்ணுகவும், சூதுபொருவதற்குரிய வாயமா கிய வறைகள் ஐம்பத்தொரக்கரமே யாகவும் எம்பெருமானுகிய விறைவன் உலகெங்குமிருந்து சூதுபொருகின்ற மாயச் சூத்திரக் கயிற்றி னிரகசியத்தை (அவனறிவிக்க வறிவாரன்றி) ஏனையோரறி யா ரென்றவாறு.

உயி ரறிவித்தா லறிவதென்பதனைத் திருநாவுக்கரசு நாயனுர் தேவாரம் பொது-தனித்திருத்தாண்டகத்தில் "காண்பாரார்கண்ணு தலாய் காட்டாக்காலே" யெனக்கூறியருளியதனுற் காண்க. (எரு)

பன்றியும்பாம்பும்பசுமுசுவானரந்
தென்றிக்கிடந்தசிவகரிகூட்டத்திற்
குன்றுமற்கூடித்தராசுநிறுத்தபின்
குன்றியறிவைக்குறைக்கின்றவாறே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு—அகங்காரமுங் காலமு மாயையு மனமுஞ் சிவசாட்சி சம்பந்தமாயிருக்கும் போதில் (இருவினை விளை தற்குக் காரணமாய்) அவைகளெல்லா முரணிக்கிடந்தனவாம். பின் னிரண்டடிக்கு—அவைகள் முரணுது தந்நிலைமையிற் பொருந்தத்

தாராசுகோல்போல (இருவினையுஞ்சமனாக) நிலைபெறச் செய்தபின் (தன்னையுந் தலைவனையுந் தெரிந்தவறிவானது பானுவின் விழியெனச் சிவத்துள்ளே) சுருங்குவித்து முறையே யழுத்துகின்ற வாறுமென்ற வாறு.

எனவே, பின்னர்ச் சிவாநந்தமே தினைப்பதென்பதெஞ்சி நின்றது. கூடி - கூட என்றும், குன்றி - குன்றிவித்தென்று திரித்துப் பொருள்கொள்க. கூட - பொருந்த. குன்றல் - சுருங்கல். அகங்கார முண்மையால் அகங்காரத்தைப் பன்றியென்றும், நிபதிநோக்கிப் பற்றலாற் காலத்தைப் பாம்பென்றும், மருட்சியுடைமையால் மாயை யைப் பசுவென்றும், பற்றுந்தன்மை விடாமையால் மனத்தைக் குரங் கென்று முருவகப்படுத்தினரென்க. முசுவானரம் - ஒருபொருட் பன்மொழி. முசு குரங்கினு ளோர்சாதியுமாம். இதனால் இருவினை சமமானாலன்றி அத்துவிதநிலைபெய்தாதென்பதறிக. (எசு)

தோட்டத்தின்மாம்பழந்தூங்கிவிழுந்தக்கா
னாட்டின்புறத்தேநரிகளேதின்றிடு
மூட்டிக்கொடுத்தமுதல்வனைமுன்னிட்டுக்
காட்டிக்கொடுத்தபின்கைவிட்டவாறே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - தோட்டமாகிய மாயாசம்பந்த வுலகிலே மாம்பழமாகிய சரீரமானதுலாவித்தங்கி யந்நிலைகுலைந்து விழுந்துவிட்டால், நாட்டின் வெளியிலுள்ள நரிகள் புசித்துவிடும். பின்னிரண்டடிக்கு - இச் சரீரத்துக்கு வேண்டுங் கருவிகளையூட்டி நமக்குக்கொடுத்த முதல்வனாகிய பதியை ஞானகுருமூர்த்தி முன் னிலையாக வந்துநின்று காண்பித்துக்கொடுத்தருளியபின்னே (அச் சரீரம் உறங்கினவன் கைப்பொருள்போல) நீக்கியவாறுகுமென்ற வாறு.

ஆதலா லிச்சரீ ரமிருக்கும்போதே ஞானசிரியனைத்தேடி முதல் வனை யறிந்துகொள்ளல் வேண்டுமென்பது கருத்தாயிற்று. நரிக ளென்றதற்கு மண்ணுந்தீயுமாகிய நரிகளென்றுரைப்பினுமாம். (எஎ)

சொல்லிலுமுக்காதங்காடரைக்காத
மெல்லையகப்பட்டிடந்தவிருநெறி
யெல்லையகங்காவியங்கவல்லார்க்கு
வெல்லைகடந்துசென்றெய்தலுமாமே.

(இ - ள்.) விரியுவமைக் குவமைமுதலாகச் சொல்லப்பட்ட நான்கனு ளிடைப்பட்டன விரண்டனு ளொன்றேயாயினும் இரண் டேயாயினும் யாப்பினிடத் திடைப்பட்டுத்தொகுவது தொகையுவ மையா மென்றவாறு. இதனுள் தொகையென்றதல்லது உவமையென் பது பெற்றதியாதோவெனின், விரியுவமைக்கு முதலே யுரைத்த சூத் திரத்தாற் பெற்றதெனக் கொள்க.

அம்பவளச்செவ்வாயுமாரநிரைவெண்ணகையும்
பைம்பொனசலப்பணேமுலேயின்—விம்பமுடன்
கண்டுகளித்தேந் திருமால்காட்கரையார்கன்னவின்சொல்
லுண்டுகளிப்புற்றிலமன்னே. (154)

இஃ துவமவுரு பொன்று மிடையிற் றொக்க தொகையுவமை ; இதனுள் அம்பவளச்செவ்வாய் முதலியவற்றிடையிற் போலவென்னு முவமவுருபு தொக்கதனுலறிக. நெஞ்சமே யென்னு முன்னிலையு மெழுவாயு மெச்சம். மன்னும் ஓவும் அசை. பகுதி - இயற்கை. துறை - கிளவிவேட்டல்.

நீலம்போற்கண்ணுநிறைமதியம்போன்முகமும்
வாலமதிபோனுதலும்வண்டிமிர்பூங்—கோலத்
தொடைத்துளபமாலேத்தொழுமாறன்வெற்பிற்
படைத்துளதேன்மன்னுயிர்நண்பா. (155)

இஃ துவமவேது வென்பதொன் றிடையிற்றொக்க தொகையுவ மை. இதனுள், கருங்குவளேபோலக் கரியகண்ணிணேயும், எல்லாக் கலேகளுநிரம்பின மதிபோன்ற செம்முகத்திணேயும், பிறைபோல வளேந்த நுதலிணேயும் வண்டுகளாரவாரிக்கு மழகிய தொடையாகிய துளபமாலிகையையுடைய மாயோனேத் தொழு மாறன்றுடரிவெற் பிற் றனக்குறுப்பாகப் பெற்றுநிற்ப நீகண்டதுளதே லஃதென் னிலே பெற்ற வுயிரா மென்றவாறு. இதனுள் நிற்ப நீகண்டது என்னுஞ் சொற்களேயும் அஃதென் னென்னுஞ் சொற்களேயு மெச்சமாக நின் றனவாக்கி விரித்துரைக்க. பகுதி—பாங்கற் கூட்டம். துறை—அவ் விடத்தேகல். அஃதாக இதன் முதனூல் செய்த தெண்டியாசிரியர் வினே பயமுதலிய வேதுக்கடொகுவதே தொகையுவமையென நோக்

கவும் இந்நூலுடையா ருவம வுருபு தொகுவதுந் தொகையுவமை யென்ற தென்னைபோவெனின், அஃதே நன்றுசொன்னாய்! இவை யிரண்டிற்கு முதனூலாகிய தொல்காப்பியத்துள் "உவமைத் தொகையே யுவமவியல" என்பதனாலும், அதன் பின்னர் நேமிநாதர் பவணந்தி முதலியோரும் "உவமவுருபில்லதுவமத்தொகையே" என்பதனாலுங் கூறப்பட்டது.

பவளவாய்முத்தநகைப்பைந்தொடியிருழி
யவளவாய்க்கங்குனெடிதாமோ—துவளருவிச்
சோலைமலையார்துணைத்தோளிற்பைந்துளப
மாலைமலைபாமயிற்கு. (156)

என்ப திரண் டிடையிற் றொக்க தொகையுவமை; என்னை? பவளம் போலச் சிவந்த வாயினையு முத்துப்போல வெளுத்த நகையினையு மென்னு முவமவுருபும் பண்பு மிடையிற் றொக்கதா லென்றுணர்க. திணை—பெருந்திணை. துறை—கண்டுகைசோர்தல்.

கறைவேல்விழியிலவிதழிதழ்
நறைநாண்மலரதானனம்
புருவஞ்சிலையுருவம்புய
லுருவம்புரிகுழலெனுமது
பொன்னங்கிரிகொங்கைத்துணை
மின்னென்றுரையிடைகண்டிலன்
எனவாங்குக்,
கற்றறிவுடையவென்னிறையினைக்கலந்து
ணற்றிருவுறைவிடநண்பா
சொற்றமிழ்மாறன்றுடரிவண்பொழிலே. (157)

இதுவு மிரண்டு தொக்க தொகையுவமை. இஃ தாறடித்தா பொன்றியும் ஒன்றுதும் வரும் வஞ்சித்தனையான், எனவாங்கு என்னுந் தனிச்சொற் பெற்று மூன்றடி நேரிசையாசிரியச் சுரிதகத்தா லிற்ற குறளடிவஞ்சிப்பா. பகுதி—பாங்கற் கூட்டம். துறை—இயல் பிடங்கூறல். இடைப்பட்டடெஞ்சலு மென்ற வும்மையா னிடைப்பட்டுத்தொகாது முதலும் முதலைக்கூறச் சினையறிகிளவியாகிய வாகு

பெயரானு முவமையு முவமவுருபும் விரிந் தீற்றி லிரண்டு தொகு வனவு முளவென்பதூஉந் தோன்றி நின்றது.

கொடிபோல்வடவரைபோற்கொவ்வைபோற்காமர்
பிடிபோலிளமான்பிணைபோல்—வடிவமைந்த
தென்னருயிரமரர்க்கின்னமிர்தன்றீந்தபிரான்
றன்னாகையன்னாடனக்கு. (158)

இது கொடிபோ னுடங்குகின்ற விடையினையும், வடமலைபோலப் பெருத்த முலையினையும், கொவ்வைக்கனிபோலச் செவ்வாயினையும், அழகிய பிடிபோன்ற மென்னடையினையும், இளைய மான்பிணைபோல வெருண்ட நோக்கினையு முடைத்தாகிய வடிவா லழகமைந்திருப்ப தொன்று ; தோழீ யெனக் குயிர்போலச் சிறந்தவனுமாகி யமரர்க்கு முன்னாளா ளமிர்தமீந்தபிரான் றிருநாகையனையாட் கென்றவாறு. இதனு ளீற்றில் விரித்தவிரண்டுஞ் செய்யுட்கட் டொக்கவாறுகாண்க. தோழீ யென்னு முன்னிலை யெச்சமாயிற்று. பகுதி—சேட்படை. துறை - தோழிக் கவயவங்கூறல். இரண்டு மென்ற வும்மை யெச்ச மாதலா னீற்றின் மூன்று தொகுவனவுமுள.

அன்னநடை மானேக் கணியிழாய் வார்சுமந்த
பொன்னசலந்தன்னைப்பொறுப்பதாய்—முன்னுதித்த
வெய்யாநடுவறக்கொன்றிட்டதைவைத்தென்னேசெங்
கையான்மறைத்தமையுண்கண். (159)

என்பது அன்னநடை போன்ற மென்னடையினையு மானேக்குப் போன்ற வெருண்ட நோக்கினையு மழகிய பூணினையு முடையாய் ! வாரைச்சுமந்தவாய்ப் பொன்மலைபோலப் பணைத்தமுலையானவை தம் மைச்சுமப்பதுமாய்த் தாம்பிறந்து பணைப்பதற்கு முன்னே பிறந்த வுடன்பிறப்பாகிய தேயாநடுவினை முற்றக்கொன்றவற்றைக் கொல்க வென வெளியில்வைத்து யானுய்யும்படிக் குனதுயிர்போன்ற தோழி யைக் காட்டித்தந்த மையுண்கண்களைக் கைகளான் மறைத்ததென்ன பேதைமையோ வென்றவாறு. உண்கண்களையென் றோர் சொல் லிறுதி யிரண்டாவது தொக்கு விரிந்தது. ஒழிந்த சொல்லெச்சங் களும் குறிப்பினல் விரித்துரைத்தவாறுங் காண்க. பகுதி—இடந் தலை. துறை - நாணிக்கண்புதைக்க வருந்தல். (கஉ)

98. இருமையுமொருதொடர்பினுளுறலியல்பே.

(எ - ன்.) இன்னுமத்தொகை விரியுவமைகட் காவதோர் விதி யுணர்—ற்று.

(இ - ள்) அத்தொகையுவமையும் விரியுவமையு மாகிய விரண்டு தன்மையு மொருசெய்யுளகத்து வருதலுமாமென்றவாறு. உம்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது.

மொழியமுதமுற்றுமுலைமுகுளம்வைவேல்
விழிமகிழ்மாறன்றுடரிவெற்பி—லெழின்மயிற்கு
நன்போதவிழ்குழல்கார் நம்பனே செம்மேனி
பொன்போன்ம்பல்வெண்முத்தம்போன்ம். (160)

என்பது நம்பனே மகிழ்மாறன் றுடரிவெற்பி லெழுகிய மயில் போலுஞ் சாயலுடையாட்கு மொழி யமுதம்போலும்; இளமுலை தாமரைமுகுளம் போலும்; விழி சுடரிய வேல்போலும்; செருகிய முல்லை யரும்பவிழாநின்றகுழல் கார்போலும்; சிவந்தமேனி பொன்போலும்; வெண்பல் முத்தநிரை போலு மென்றவாறு. இதனுள் முன்னைய நான்கும் உவம வுருபு மேதுவு முவமேயத்தை முன்னிட்டுத் தொக்கன. எழின்மயின் முற்றுவமை. பின்னையவிரண்டும் விரியுவமை. போலு மென்னு முவமவுருபிற்றினுகரம் "செய்யுமெனெச்சவீற் றுயிர்மெய் சேறலுஞ், செய்புளுளும் முந்தாகலு முற்றே, லுயிருமுயிர் மெய்யு மேகலு முளவே" என்பதனல் முற்றுதலின் உயிர் கெட்டது. "மெல்லெழுத்தியையினகாரமாகும்" என்பதனுல் லகாரம் னகாரமாய்த் திரிந்தும் "னகாரமுன்னர் மகாரங்குறுகும்" என்பதனு லீற்றுமகாரங் குறுகியும் "செய்யுளி றுதிப் போலி மொழி வயின், னகார மகார மீரொற்றாகும்" என்பதனு லீரொற்றுடனிலையாயும் மேலே பகரவொற்று வருதலின் செய்யுளிடைப்பட்டும் வந்த முற்றுப் போன்ம் என்றாயிற்று. "ஐயவிரைமான்பகழியாக்கினவாய் போன்ம்போன்ம்போன்ம், பின்னுமலர்க்கண்புனல்" எனப் பரிபாடலாகிய சங்கச்செய்யுளகத்தும் பகரமேலே வருதலாற் செய்யுளிடைப்பட்டும் வந்தமை காண்க. இது தொகைவிரியுவமை. இன்னும் வேறுபட வருவனவெல்லாந் தொகைவிரியுவமைக்க ணமைக்க. (௩௩)

99. அவைதாம்,

வெளிப்படைகுறிப்பினும்விழுமிதினடைபெறும்.

(எ - ன்.) இதுவு மவ்விருவகை யுவமையின் கூறுபாடுணர்—ற்று.

(இ - ள்.) அவைதாம்—அங்ஙனங் கூறப்பட்ட விரியுவமையுந் தொகையுவமையு மென்னு மிரண்டும் வெளிப்படையுவமங் குறிப்புவம மென்னு மிரண்டாய் விழுமிதாக நடைபெறு மென்றவாறு.

பவளச்செவ்வா யென்புழி இரண்டற்கும் பொதுவாய செம்மைக்குணத்தை வெளிப்படையாகக் கூறினமையான், குறிப்பின்றி யுவமை கொள்ளப்படுதலானும், பவளவா யெனநின்றவழிப் பவளத்தினையும் வாயினையுங்கூட்டிச் செம்மைக்குணம்பற்றி யுவமஞ்செய்ததெனக் குறித்துக்கொள்ளப்படுவதல்லது வல்லென்ற பவளத்திற்கும் மெல்லென்ற விதழிற்கு முள்ளதோ ரொப்புமைக்குணங்க ளான்டில்லை யெனவும், பானல்போற் கருங்கண் ணென்புழியும் இரண்டற்கும் பொதுவாய கருமைக்குணத்தை வெளிப்படையாகக் கூறினமையான் குறிப்பின்றி யுவமையே கொள்ளப்படுதலானும், பானலுண் கண் ணெனநின்றவழிப் பானலையுங் கண்ணினையுங்கூட்டிக் கருமைக் குணம்பற்றி யுவமஞ்செய்ததெனக் குறித்துக்கொள்ளப்படுவதல்லது பல விதழ்னோடும் பலவல்லியுந் தாதுவுங் கூடிய பரிமளப்போதிற்கு நீண்டு பிறழ்ந் துலாய்க் குழைமேற்றூய கண்ணிற்கு முள்ளதோ ரொப்புமைக ளான்டில்லை யென்பதூஉ முணர்க. பிறவுமன்ன ; என்னை ? "சுட்டிக் கூறா வுவம மாகிற், பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே" என்றாராகலிற் கொள்க. விழுமிதி னடைபெறு மென்றதனல் விழுமிதாய குறிப்புவமையு முள. அவையுமேற்காட்டுதும்.

பாற்கடல்வெய்யோனிலொளிபாரித்தசோதிவட
நாற்கடலைத்தென்னுரைநன்னூற்கடலாய்—மாற்கடிமை
வாய்ந்தார்டேறவகுத்தளித்தான்றண்ணளிதாந்
தாந்தாமெனும்வகுளத்தான். (161)

இது விழுமிதாய குறிப்புவமை.

(இ - ள்.) உலகின்கண்ணோயிருந்து நோக்குவார்க்குத் திருப் பாற்கடலின்கட் டோன்று முதையதிவாகரனைப்போல ஒளியைப்பாத் தின சோதிச்சொரூபத்தை யுடையான் அவன் யாரெனில்? வட மொழியாகிய சுருதிக்கடலைத் தென்னுரை நூற்கடலாக்கித் திருமா லுக் கடிமையாகத் தோன்றினர் பேரின்பமெய்தப் பாடித்தந்தான் குளிர்ந்த வண்டுகள் தாந்தாமெனப்பாடித் தேனையுண்ணும் வகுள மாலிகையை யுடையான்; அவன்பரமகருணையிருந்தபடியோ! வென்ற வாறு.

இது விழுமிதாய குறிப்புவமையாயது. இதனுள், திருப்பாற் கடலிற்றோன்று முதையதிவாகரன் றனது செய்யமேனியி லாயிரங் கிரணங்களைப்பரப்பி யுலகத்திருளைத்துரத்தி யுலகினுள்ளார்க்குக் கட படாதிகளைக் காட்டி யின்பத்தைப் புரந்தாற்போல விவனும் வெண் டிரைப் பொருநைத்துறை மாடத் திருக்குருகூரினிடத்துச் சிவந்த மேனியோடுந் தோன்றித் திருவாய்மொழியாகிய வாயிரம் பாடல் களையும் விரித்ததனோடு மன்னவர் கனத்தினுந்தோன்றித் தன்னை மனோவாக்குக் காயங்களாற் றியானித்தும் வாழ்த்தியும் வணங்கு வார்மனத்து ளறியாமையாகிய வந்தகாரத்தை நீக்கிப் பரப்பிரமத் தைக் காட்டித்தருவனென வினையுவமம் பயவுவமம் வடிவுவமம் உருப்புவம மென்னும் நான்குவமையுங் குறிப்பினுற் கொள்ளக் கிடந்தமையானெனக் கண்டுகொள்க. தண்ணளி யென்பதற்குக் குளிர்மையுடன் கூடியதாய வண்டுகள் ப்பாடித் தேனையுண்ணும் வகுளமாலிகையையு முடையானெனினுமாம். வெண்டிரைப் பொரு நைமாடத் திருக்குருகூரொடும் அன்னவாகனமுந் திருப்பாற்கடற் குவமை. இக்குறிப்புவமை இந்நூலுடையார் யாண்டுப் பெற்றாரெ னின்? நலமிகு புலமை நக்கீரர் "உலக முவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங், கோவற விமைக்குஞ் சேண் விளங் கவிரொளி" எனக் கூறிய முருகாற்றுப்படுத்ததுட் பெற்றாராம். வாழ்த்தெல்லாம் பாடாணாதலால் திணை—பாடாண்சார்ந்த பொது வியல். துறை—பனுவல் வாழ்த்து; அன்றியும், வாகையைச் சார்ந்த பொதுவியலிற் கூறிய பாடல் வென்றியுமாம்.

மின்பதிந்தகார்மேனிவின்னகர்மாலைப்புலவன்
பின்பதிந்துசென்றபெருமானை—முன்பதிந்து
சேவித்தாராளுந்திருநாடுதேவரெனப்
பாவித்தார்க்கெட்டாப்பதம். (162)

இதுவுமது; என்னை? மின்குடிகொண்ட கார்போலுந் திருமகள் குடிகொண்ட மார்பினோடுங் கூடிய கரியதிருமேனியையுடையான் எனக் குறிப்புவமை கொள்ளக்கிடந்தமையா னெனக்கொள்க. தேவரெனப் பாவித்தார்க் கெட்டாப்பதம் என்பது—கண்டா கன்னனு லறிக. திணை—பாடான். துறை—பழிச்சினர்ப்பரவல். (கச)

100. உவமேயத்தியலுயர்த்தியபின்ன
ருவமப்பொருளியலுயர்த்திமுடித்தலுங்
கவினப்பொருட்குறிற்கடிநிலையிலவே.

(எ - ன்) இஃது தவ்வுவமத்திற் கெய்தாததெய்துவித்தது.

(இ - ள்) முதலே யுவமேயத்தினது பட்டாங்கை யுயர்த்திக் கூறி யதன்பின்னர் உவமப்பொருளின் பட்டாங்கை யுயர்த்திமுடித்தலும் அவ்வுவமேயத்திற் குயர்ச்சிக்குறிப்பினு லுண்டாம்படி பயனிலை தோன்றுமெனி னீக்கப்படா தென்றவாறு. கவின் ஆகுபெயர்.

முத்திரைக்கைம்மாறன்மொழிந்ததிருவாய்மொழியே
சத்தியநூலென்பர்தகைசான்ற—மெய்த்தமிழோர்
மேதினிமேலாரணப்பாமெய்த்திருமாலேபரனென்
றோதியதூஉமாதியினிலுண்டு. (163)

(இ - ள்) திரு ஞானமுத்திரைக் கையினையுடைய காரிமாறப்பிரான் சீமந் நாராயணனே பரத்துவமென்று அவனது சொரூப ரூப குணவிபூதிகளைக்கூறிய திருவாய்மொழியே யுண்மைநூலென்று பெருமை பூர்த்தியான வாய்மைத் தமிழ்ப்புலவோர் கூறுவர். அத் திருவாய்மொழியேயன்றி யுண்மைப்பொருளான திருமாலே பரத்துவமென் றாதிகாலத்துப் பூலோகத்துக்கு மேலாய சத்தியலோகத்தினுமிருந்து வடமொழியாகிய சுருதி கூறியதூஉ. முண்டென்ற

வாறு. எனவே, ஆதியாய்ச் சத்தியலோகந் தொடங்கிப் பரந்த வட மொழியா யுணர்த்திற்றென்று சுருதியாகிய நூலை மிகச்சிறப்பித்துக் கூறுவானாகித் திருவாய்மொழியாகிய நூலை யுயர்த்திக் கூறுதது போல வியல்பினாலாய வுவமங் கூறினாராயினும் மண்ணின்குடத் தோடு பொன்னின் குடத்திற் குண்டாய வேற்றுமைபோல அந்தணரு மேனை மூவகைக் குலத்தோரு மோதுவதாகவும் பரந்துபோகாதே தமிழ்மொழியா லெவ்வுலகத்தாரும் பரத்துவத்தை யுணரும் படிக்கு மறைவின்றி யிருட்டற வேதசாரத்தை யெடுத்துக்கூறித் தெருட்டிற் றெனத் திருவாய்மொழிக் கேற்றமானதோர் பயனில்லை குறிப்பினாற் றோன்றினவாறு காண்க. என்னை? "உவமத் தன்மையு முரித்தென மொழிப, பயனிலை புரிந்த வழக்கத் தான" என வொல்காப்பெரு மைத் தொல்காப்பியனார் கூறிய விலக்கணத்தானும், "பாரி பாரி யென்றுபல வேத்தி - யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர் - பாரி யொருவனு மல்லன் - மாரியு முண்டீண் டுலகு புரப்பதுவே" என் னுஞ் சங்கச்செய்யுளாய இலக்கியத்தானு முணர்க. திணை - பாடாண். துறை - பானுவல்வாழ்த்து ; அல்லது வாகைசார்ந்த இயல் வென்றியு மாம். இதுவுங் குறிப்புவமைப்பாற்படும். (௯௫)

101. பலபொருளொருபொருளொருவயிற்பலவயிற்
போலியில்பொருண்மறுபொருள்விபரீத
மருட்கைதல்தடுமாற்றம்விகாரந்
தடுமாற்றம்மேசமுச்சயமின்சொ
வியமமனியமம்புகழ்நிந்தையுவம
மோகமவயவமவயவிமுற்றே
யேகமாலைபந்தாதிபொதுநீங்கலென்
றுகவைபைந்தாமதன்விரியே.

(எ - ன்.) இதன்முன்னர் உவமையெனத் தொகையா னென் றுய் நின்றது வினை பய முறுப் புருவென்ற நான்கினோடுங்கூடி யேது வைந்தா மென்னுமவைமுதலிய வகையின் பாகுபாடுகளெல்லா முணர்த்தி யவற்றினின்றும் விரிந்த வுவமையினது பெயர்வேறு பாடுந் தொகையு முணர்—ற்று.

(இ - ள்.) அதன் விரி - அங்ஙனங் கூறுபடுத்தின வுவமை யின் விரி, பலபொருளுவமை முதலாகப் பொதுநீங்குவமையீருக விருபத்தைந்தா மென்றவாறு. இவற்றிற்கெல்லாம் என்னும்மை தொக்கன. போலியென்பதனை யிறுதிவிளக்காக்கி, யிருவயினுங் கூட்டி, உவமமென்பதனை மத்திமதீபமாக்கி, முன்னும் பின்னும் எல்லாவற்றோடுங் கூட்டி யுரைக்க. என்றென்ப தென்னிடைச்சொல்; "என்று மெனவு மொடுவு மொருவழி, நின்றும் பிரிந்தெண் பொரு டொறு நேரும்" என்பதனுலறிக. இவையெல்லாஞ் சொல்லின் முடியு மிலக்கணத்தனவாதலாற் பெரும்பான்மையும் தம் பெயருள்ளே இலக்கணமும் புலப்படும். அல்லதூஉ முரையினுங்கொள்க.

க. அவற்றுள், பலபொருளுவமை யென்பது ஒருபொருட்குப் பலபொருளுவமை காட்டுவது. பலபொருளுவமையெனப் பொதுப் படக் கூறினமையான், அது ஒன்றுபலகுழீஇயபலபொருளுவமையும், வேறுபலகுழீஇயபலபொருளுவமையுமென விருகூற்றவாம். அவற்றுள், ஒன்றுபலகுழீஇயபலபொருளுவமை வருமாறு:—

எண்ணிற்கடங்காவிளஞாயிறென்றியபோற்
கண்ணிற்கடங்காக்கதிர்விரிக்கும்—விண்ணிற்
பரந்தாமமாதவன்பொற்பாதநினைந்தேத்தும்
வரந்தாம்படைத்தார்வசம். (164)

இது ஒன்றுபலகுழீஇயபலபொருளுவமை. இதனுள், பரந்தாமம் என்றது பரமபதம். வரந்தாம் படைத்தார் வசம் என்பது மாதவன் றிருவடிகளை யிப்பிறப்பிற் சிந்திக்கவும் வாழ்த்தவும் முற்பிறப்பில் வரம்படைத்தவர்தா மெவர் அவர் கைப்படும் பொருளா மென்றவாறு.

கொடியுமொருபிடியுங்கோளரவுமின்னுந்
துடியும்புரைமருங்குற்றோகை—வடிநெடுங்கண்
ணென்னுயிர்க்குத்தம்பமதாயிந்தஞேர்மால்வரைத்தன்
மன்னுயிரைக்காட்டுமெதித்து. (165)

இது வேறுபலகுழீஇபபலபொருளுவமை. ஒரு பிடி—ஒரு கையை விரன்மடக்கின அளவாம். "ஒருபிடிநசுப்பினுட்கே" எனச் சிந்தாமணியினுங் கூறினமை காண்க. பகுதி—இயற்கை. துறை—பாங்கியைப்பறிதல்.

ஆலம்போற்செவ்வேளயில்போலடுங்காலன்
சூலம்போற்காமன்றொடுத்தியக்கு—நீலம்போற்
கொல்வான்பிறழ்கட்கொடிக்கிடமாமூலமெனச்
செல்வான்கடிகைச்சிலம்பு. (166)

இதுவுமது. பகுதி—பாங்கற்கூட்டம். துறை—இயல்பிடங்கூறல்.

உ. ஒருபொருளுவமை யென்பது பலபொருட் கொருபொருளுவமை காட்டுவது:—

உமிழ்திரைநீர்ஞாலத்திருளிரியவான்றோய்த்
தமிழ்கதிர்வெண்டிங்களுடனேயெஞ்ஞான்றும்
வலஞ்செய்சுவணவடவரைபோன்மாடம்
பொலஞ்செய்மதில்கோபுரஞ்சிகரபந்தி
யிலங்குமதிளரங்கத்தெம்பிரான்பல்புகழைப்
பாடினர்பாதந்தனைப்பாடிச்சென்னியின்மேற்
சூடினர்க்குண்டோதுயர். (167)

என்பது பலபொருட்கொருபொருளுவமை. பலபொருள்—செம்பொன்மாட முதலியன. உவமை வடமேருவெனும் ஒன்றும். பா—எழடிபான்வந்த பலவிகற்பபஃறொடைவெண்பா. திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப்பணிதல்.

வண்ணவனசமலர்போற்றிருமுகமுங்
கண்ணுமலரடியுங்கைக்கொண்ட—பெண்ணரசைச்
செந்தமிழ்மாறன்சிலம்பிற்சேர்ந்தகன்றேன்பாலுரைக்க
வந்தவினைதிண்ணிபனுவான். (168)

இதுவும் ஒருபொருளுவமை. பகுதி—இதுவுமது. துறை—தலைவினை விபத்தல்.

௩. ஒருவயிற்போலி என்பது ஒரு தொடர்மொழிக்கட் பல வுவமை வந்தா லுவமை தோறும் உவமைச்சொற் புணராது இறுதியிலோ ருவமைச்சொற் புணர்ப்பது:—

வர்வித்திரையெறிந்தநித்திலத்தின்மள்ளரெறி
காவித்திரள்சேர்கமலமலர்—பாவைமார்
வெண்ணகையுங்கண்ணுமனம்போன்மெனத்தோன்றுங்
கன்னபுரத்தானிமையோர்கள். (169)

இஃதொருவயிற்போலி. திணை—பாடாண். துறை—கடவுள்வாழ்த்து; நாடுவாழ்த்துமாம். திரையெறிந்த நித்திலத்தினோடு மள்ளர் களைகட்டெறிந்த காவிகளுஞ் சேர் கமலமென்க. போன்மெனத் தோன்றுமென்பது போலத்தோன்று மென்றவாறு. ஒழிந்த அகல முரையிற்கொள்க.

௪. பலவயிற்போலி யென்பது ஒருதொடர்மொழிக்கட் பலவுவமைவந்தா லுவமைதோறு முவமைச்சொற் புணர்ப்பது.

பொன்மலைபோலுந்திருமால்புட்குழியாள்பூண்முலைநீர்
மன்னருவிபோலுமணிவடங்கள்—சொன்னதன்மேற்
செக்கர்வான்போலுமெழிற்செம்படாமும்புனைந்தா
ரெய்க்குறாலென்னுமினி. (170)

இது பலவயிற்போலி. எய்க்குறால்—எய்யாநிற்குறால். பொன்மலைபோன்ற முலையின்மேற் பொற்பூணையும் பூட்டி. முத்துவடத்தையும் பூட்டிச் செம்படாத்தையு முத்தரீகமாகப் போட்டமையா னினியிடையிறு மென்றவாறு. என்னு மென்பது குறிப்புமொழி. எனவே, இடையைத்தாங்கி வடமுதலியவற்றைத் தாங்கிப் புடைபெயர்த்துத் தனத்தைப் பரிசித்து மருங்கணைந்தானும். பகுதி—இடந்தலை. துறை—மருங்கணைதல்.

௫. இல்பொருளுவமையாவது முன்பில்லாத தொன்றை யொன்றற் குவமையாக்கி யுரைப்பது:—

உதிக்குங்கருஞாயிறென்றேயுவமை
மதிக்கும்வடமலைமாயோனைத்—துதிக்குந்
திருநாவுடையபிரான்செந்தமிழையோதி
யிருநாவேவாராதிடர். (171)

என்பது இல்பொருளுவமை. என்னை? கருஞாயிறு இல்லாத பொரு ளாதலால் அதனைக் காளமேகம்போன்ற திருமேனிக்குவமை கூறின மையா னென்றுணர்க. திணை - பாடாண். துறை - ஓம்படை.

சொன்னவாறென்றுரைக்கக்காணோன்றுணைமேரு
வென்னவாழ்வுற்றவிணைமுலையாள்—மன்னவா
பந்துகழங்கம்மனைகைப்பற்றுகவென்றின்றெனையும்
வந்துதழீஇக்கொண்டான்மகிழ்ந்து. (172)

இதுவுமது; இதனுள் துணைமேருவென்றதனால் வடமேரு ஒன்றல்ல தில்லையால் இல்பொருளுவமையாயிற்று. இவ்வண்ணஞ் சிந்தாமணியினும் "கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்ற மொத்தே" என வந்தமையாலிதனது வேறுபாடுங்காண்க. பகுதி - உடன்போக்கு. துறை - குறிப்புணர்தல்.

சு. மறுபொருளுவமை யென்பது முன்னர்வைத்த பொருட்கு நிகராவதோர் பிறிதொருபொருள் பின்னரு மதன்கண் வைப்பது:—

மாண்குலமாறனின்வண்டமிழ்போன்மற்றொருநூல்
காண்கலேனுங்கதுபோற்காண்கலேன்—மீண்டும்
புதல்வற்கருள்புரிந்துபொற்றாணிற்றேன்று
முதல்வற்கிணையா முதல். (173)

இது மறுபொருளுவமை. திணை - பாடாண். துறை - பனு வல் வாழ்த்தோடு, கடவுள் வாழ்த்துமாம்.

எ. விபரீதவுவமையென்பது முன்பிலுவமையாக வந்ததனைப் பொருளாக்கிப் பொருளை யுவமை யாக்குதல்:—

மென்றேளெனத்திரண்டவேயினங்கள்வெம்முலைக
ளன்றேயெனக்கோங்கரும்புற—நின்றனவால்
வண்டமிழ்மாறன்றுடரிவண்பொழிலுமின்றெனக்கவ்
வொண்டொடியாய்த்தோற்றமுறும். (174)

இது விபரீதவுவமை. என்னை? "பொருளே யுவமஞ்செய்தனர் மொழியினு, மருளறுசிறப்பினஃதுவமமாகும்" என்றாராகலின். அன்றே வென்பது அல்லவோவென் எதிர்மறையாகி ஆம் என்றாயிற்று. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - பொழில்கண்டு மகிழ்தல்.

அ. மருட்கையுவமை யென்பது உவமை கூறுவான் மருட்கை வயத்தனாகி யொருபொருட்குக் கூடாதபண்பினைக் கூடுவதாகக் கொண்டு அதனை யொன்றற் குவமையாக்கி யுரைப்பது:—

தாகம்பெறநுகர்தீந்தண்மருந்துகைத்தழலின்
வேகம்பயின்றவிதிபோலு—மோகம்
படையாதமாறன்பனிவரைமேலென்னைப்
துடையாதநீயுரைக்குஞ்சொல். (175)

இது மருட்கையுவமை. தண்டியாசிரியர் கூடாவுவமை யென்பது மிது. தீந்தண்மருந்து - இனிய குளிர்ந்தவமிர்து. கைத் தழலின் வேகம் பயிலுதல்—கயந்து தழல்போலச் சுடுங்கோப மிடைவிடாமை. பகுதி—இதுவுமது. துறை—பாங்கனைநொந்துகூறல்.

கூ. தலைதடுமாற்றவுவமை யென்பது மேற்றொட்டு முதலே வந்த வுவமப்பொரு ளிடையினு மீற்றில் வந்த வுவமேயப் பொருண் முதலினும் இடையினின்ற வுவமவுருபு இறுதியிற் றொக்கதும் விரிந்ததுமாகப் புணர்ப்பது:—

மையமருண் கண்காவிவாய்பவளந்தோளினைவே
யையவிடைநுண் ணூலகலல்குல்—பையரவங்
கஞ்சத்திருமாதுகாதலிக்குமார்பகத்தான்
றஞ்சைத்திருமான்றனக்கு. (176)

இது தலைதடுமாற்றவுவமை. இவை யுவமவுருபு இறுதியிற் றொக்கது. "குவவினகொங்கை குரும்பை குழல் கொன்றை" யென் பதுமிது. மையமருண்கண்—கருமை பொருந்திய மையுண்கண். ஐயவிடைநுண்ணூல்—உண்டில்லையென்று சந்தேக முற்றவிடைநுண் ணிய நூல்போலு மென்றவாறு. ஐயவிடை யென்பதற்கு ஐயனே யென அண்மைவிளியா யுவப்பின் கண்ணே மயங்கியதாகக் கூறினு னெனினுமாம். பகுதி—இதுவுமது. துறை—இயல்பிடங்கூறல்.

௧௦. விகாரவுவமை யென்பது உவமையாகிய தன்மைப் பொ ருள்களை விகாரம் பண்ணியதாக உவமிப்பது:—

தெள்ளமிர்தத்துள்ளாயதீஞ்சுவையைமெய்வேதத்
துள்ளவுணர்வையுணர்வினு—லள்ளி
யெடுத்திசைத்ததொன்றெனலாமின்பொருளான்மாறன்
றொடுத்திசைத்தவுத்தமப்பாச்சொல். (177)

இது விகாரவுவமை. உணர்வை யுணர்வாலள்ளி யென்பது உபநிடதச் சொல்லுளிருந்த ஞானத்தைத் தனதுண்மைஞானத் தாற் சொல்லைநீக்கித் திரட்டியெடுத்தென்றவாறு. இரும்பை யிரும் பினுலறுத் தென்பதுபோலக் கொள்க. சொல்லேனவே சொல்லு மதனுட் பொருளுமாயிற்று. சொல்லு மதனுட்பொருளும் அமிர்தி னுள்ள சுவையையு முபநிடதச் சொல்லினுள்ள வுணர்வையுந் தனது பரமஞானத்தா லள்ளியெடுத்துச் சொல்லும் பொருளுமாகத் தொ டுத் திசைத்ததொன் றெனலாமென்க. இது பனுவல்வாழ்த்து.

௧௧. தடுமாறுவம மென்பது ஒருபொருள் ஒருகால் உவமையு மாய் ஒருகாற் பொருளுமாகி யொருதொடர்ச்சிக் கண்ணே தடுமாறி வருவது:—

மெய்வேதம்போன்றதுநின்மெய்த்தமிழ்நின்மெய்த்தமிழ்போன்
மெய்வேதமுங்காட்சிமேயதால்—வையகமேண்
ணுவலவர்காரிதருநாவீறநின்னிகராம்
பாவலரிங்காரேரோபகர். (178)

இது தடுமாறுவமை; என்னை? "தடுமாறுவமங் கடிவரை யின்றே" என்றாராகலின். தண்டியாசிரியர் இதா விதர மென்பது மிது. திணையுந் துறையு மிதுவுமது.

கஉ. சமுச்சயவுவமை யென்பது இதனானேயன்றி யிதனை யொப்பதினானு மொக்கும் என்பது:—

வண்ணத்தாலன்றிவடிவாலளவினு
லெண்ணிற்கமலமுகையேய்க்குமே—கண்ணன்
வழியார்துணைமாறன்மால்வரையாய்கன்னன்
மொழியார்துணைமாமுலை. (179)

இது சமுச்சயவுவமை. கண்ணன்வழியார்—கண்ணனே பரத்துவ மெனநிற்கு மார்க்கத்தினையுடையார். துணை யென்றது அவர்களான்மாவுக் குறுதித்துணை யென்றவாறு. மாறன் மால்வரையிலுள்ள தலைவனே கன்னலினது பாகுபோலு மொழியையுடையாரென்று நீ சொல்லப்பட்டவ ருபயமுலை செம்மை நிறத்தா லொத்ததன்றி வடிவினானு மளவினானு முள்ளத்தா லுவமை குறிக்கின்ற செந்தாமரைமுகையை நீ சொன்னபடியே யொக்குமென்றவாறு. குறிவழிச்சென்ற பாங்கன் தலைவி தனமுங் காண்டலானே வெனிற் காண்பதுண்டென்பதற்குச் செய்யுள்:—"அரனம்பலத்தி, னியலுளவேயினைச்செப்புவெற்பாநினைதீர்ங்கொடிமேல்" என்றதனாலறிக. மால்வரையாயென்றதனா னிலமொன்றென்பதாயிற்று. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - செவ்வி செப்பல்.

கங. இன்சொலுவமை யென்பது பொருளினு முவமைக்கோர் மிகுதி தோன்றக்கூறி யுவமேயத்தினு மிகுதியுளவேனு மொப்பதன்றிச் சிறந்ததன்றென்பது:—

ஒன்றாயநின்முகத்ததொண்டமிழ்வேதங்குரவ
னன்றாயுநான்முகத்ததவ்வேத—மென்றாலும்
வண்டமிழ்மாறவண்டமிழ்மறைக்கொப்பன்றிமறைக்
குண்டெனலாமோவேறுயர்பு. (180)

இது இன்சொலுவமை. இதனுள் ஒப்பதன்றியென்பது ஒப்பன்றியெனச் செய்யுள்விகாரத்தாற் றொக்கது. திணை - பாடாண். துறை - பனுவல்வாழ்த்து.

கச. நியமவுவமை யென்பது இன்னதற் கின்னதே யுவமையென்று தேற்றேகாரம் பெறத் துணிந்து சொல்லுவது:—

வாய்மைமறையேநினதுவாய்ந்ததமிழ்மறையின்
வாய்மைதனக்கிணையாம்வாழ்த்துங்காற்—றூய்முலைப்பா
லுண்றுதமெய்ஞ்ஞானமோங்கியமாறாகமலக்
கண்ணனேநின்னிணையாங்காண். (181)

இது நியம வுவமை. வாய்மைமறை - மெய்வேதம். திணை - வாகை. துறை - தாபதவாகை.

பைம்பொற்குன்றேபணையிளவனமுலை
யம்புர்துணையேயரிமதருண்கண்
குனிசிலையிரண்டேகொடுநன்புருவம்
பனிமாமதியேபழிதீர்நன்முகங்
கொடியேதளரிடைகொண்மூவேகுழ
லாடரவின்படமாமேகடிதடங்
காந்தளின்றுணைமலர்க்கவினேகையும்
பூந்தளிரன்றேபுடைபெயர்மெல்லடி
மாதே,
படர்புகழ்மாறன்பராங்குசன்
அடரிமால்வரைவளர்தோகைபதிபலே. (182)

இதுவுமது. பா - பொதுச்சீர் பதினாறும் வந்து நேரிசையாசிரியச் சுரிதகத்தாலிற்ற குறளடி வஞ்சிப்பா. பணையிளவனமுலை- பெருத்த இனிய அழகிய முலை. அரிமதருண்கண் - செவ்வரிபரந்து கண்டார்க்கு விருப்பத்தைக்கொடுக்கு மையுண்கண். பகுதி - சேட்படை. துறை - அவயவங்கூறல்.

கரு. அநியம வுவமை யென்பது நியமித்த வுவமையை விலக்கிப் பிறிதுமோருவமை புணர்ப்பது:—

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1913 ஞு ஜனவரிமீ 1உ முதல் 31உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ. | அ. | ப. | செலவு | தொகை ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| கானாடுகாத்தான் மகா-ள-ள-ஸ்ரீ ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்களிடமிருந்து பரீதாபிஞு மார்கழிமீ முதல் பிரமாதீசஞு கார்த்திகைமீ முடிய 12மீத்திற்கு மீ1-க்கு ரூ. 50 வீதம் சந்தாவரவு 600—0—0 | | | | சங்கம் சிப்பந்திகளுக்கு 1912-ஞு டிசம்பர் மீத்திற்குச் சம்பளம் செல்லாக்கியது ரூ. 341—14—10 | | | |
| 1912ம்ஞு டிசம்பர் 1913-ஜனவரி ஆகஇரண்டு மீங்களுக்குரிய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச்சந்தா வரவு ரூ. 100—0—0 | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு 1912ஞு நவம்பர், டிசம்பர் மீங்களுக்குச் சம்பளம் செல்லாக்கியது ரூ. 76— 0— 0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய வகையிற் செலவு ... | 417 | 14 | 10 |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ... | 700 | 0 | 0 | | | | |
| செந்தமிழ்ச்சந்தா வகையில் வரவு ... | 612 | 4 | 0 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு 1912-ஞு நவம்பர்மீத்திற்கு ஆகாராதி போஷணைக்குச் செல்லாக்கியது ரூ ... | 27 | 3 | 2 |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு 256-13-9 | | | | பைண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச் செலவு ... 8—10—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு ... 50- 8-0 | | | | ஷை ஆபீஸ் ரயில்வே சார்ஜ் செலவு 0— 8—0 | | | |

| | | | |
|---|---|---|---|
| ஆக பிரிண்டிங் ஆபீசு வரவு ... | 307 | 5 | 9 |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 80—3—6 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... 8—12—0 | | | |
| ஆக பைண்டிங் ஆபீஸ் வரவு ... | 88 | 15 | 6 |
| புத்தக விற்பனை வரவு ரூ ... | 80 | 7 | 3 |
| பிரிண்டிங் பேப்பர், கலர் ராப்பர் காகிதம் விற்றவகையில் வரவு ரூ. 51-12-6 | | | |
| கோர்ட்டு சம்மன் படி வரவு ரூ. 0—12—0 | | | |
| விளம்பர சார்ஜ் வகையில் வரவு... 3—0—0 | | | |
| சங்கம் சாலிகிலம் மாக்கடை வாடகை நாளது பரிதாபி-ளு மார்கழி மீ" த்துக்கு வரவு... 55—0—0 | | | |
| மதுரை கோ ஆபபரேட்டிவ் ஸ்டோர்ஸிலிருந்து வட்டிவரவு ரூ. 5—13—6 | | | |
| சங்கம் ஆங்கிலப் பரீக்ஷை கட்டணம்வகையில் வரவு ... 12—2—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ ... | 128 | 8 | 0 |

| | | | |
|---|---|---|---|
| பைண்டிங் ஆபீசு கண்டின்ஜன்சிச் செலவு ... 18—7—11 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 27 | 9 | 11 |
| பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ... 90—3—0 | | | |
| ஷை ஆபீசு எண்ணெய்ச் செலவு 11-14—8 | | | |
| ஷை ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு 6—6—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 108 | 8 | 2 |
| போஸ்டேஜ் வகையிற் செலவு ... | 39 | 8 | 3 |
| மெஷீன் போல்ட்டு ஆணி வகையரா ரிப்பேர் செலவு ரூ | 2 | 11 | 0 |
| சங்கம் வைத்திருக்கும் கட்டடத்திற்கு கர்குஸ்வரி 1912ளு ஏப்பிரல் முதல்1913-மார்ச்சுமீ" முடிய செலுத்தியது ரூ. 7—14—0 | | | |
| சங்கம் கலாசாலைவைத்திருந்த கட்டடத்திற்கு 1912ளு ஜூன் முதல் 1913 ஜனவரிமீ" 15வ வரை வாடகை செலுத்தியது 135—0—0 | | | |
| சங்கம் சாலிகிலத்திற்கு 1912ளு ஏப்பிரல் முதல் 1913 மார்ச்சு முடிய வருஷம் 1-க்கு வீட்டுவரி செலுத்தியது 82—8—0 | | | |
| சங்கம் வைத்திருக்கும் கட்டடத்திற்கு 1912ளு டிசம்பர்மீ" த்திற்கு வாடகை செலுத்தியது 25—0—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 250 | 6 | 0 |
| சீமையிலிருந்துவந்த பேப்பர்பேல்களுக்கு ஷ்டாண்டு [3] செய்ததற்கு கூலி ... | 2 | 10 | 0 |

| | |
|---|---|
| வி. பி. புஸ்தகங்கள் வாங்கியதற்கு | 0—4—0 |
| சீமையிலிருந்து தருவித்த பிரிண்டிங்பேப்பர்களுக்கு 2-வதுவாயி தாத்தொகை இன்ஷியூர்டு மூலமனுப்பியது ரூ. | 110—5—6 |
| ஷேபெல்களுக்குக் கப்பல்சார்ஜ் ரூ. | 27—6—0 |
| ஆபீஸ் உபயோகத்திற்கு அரக்கு முதலிய சாமான்கள் வாங்கியதற்கு ரூ. | 0-13—6 |
| வண்டிவாடகை ரூ. | 0-13—0 |
| பரம்பக்குடிக்கு (arrears collect) செய்யப்போன பில் கலெக்டருக்கு ரயில்சார்ஜ் வகையரு செலவு ரூ. | 0-12—0 |
| தனித்தமிழ்ப் பரீக்ஷை செலவு ரூ. | 12-15—9 |
| சங்கம்கேஸ்க்கு சாக்ஷிகள் படிகட்டுவதற்காக ரூ. | 3—8—0 |
| கலாசாலைசாமான்களை சங்கம் வைத்திருக்கும் கட்டிடத்திற்குக் கொண்டுவர கூலி ரூ. | 2—1—0 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | பிரிண்டிங் ஆபீஸ் பில்ப்படி சங்கம் ஆபீசு அச்சுக்கூலி வகைக்குச் செல் ரூ ... | 50—8—0 | | | |
| | | | | ஷை ஆபீஸ் பில்ப்படி ஷை ஆபீஸ் பைண்டிங் வகைக்குச் செல் ரூ | 8—12—0 | | | |
| | | | | ரசீது ஸ்டாம்புகள் 3-க்கு ரு. | 0—3—0 | | | |
| | | | | மெடல்கள் தயார்செய்த ரங்கசாமி பத்தருக்கு அட்வான்ஸ்கொடுத்தது ரு. | 40—0—0 | | | |
| | | | | கலாசாலை உபயோகத்து கிரோசின் எண்ணெ வாங்கியதற்கு ரு. | 1-15-6 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | | 260 | 5 | 3 |
| ஆக மொத்தம் வரவு ரூ | 1917 | 8 | 6 | 14-12-12ல் சங்கத்திற்கு T.N. சுந்தரராஜ ஐயங்கார் அவர்களிடமிருந்து கடனாகவாங்கி வரவு வைத்த தொகையை வாபஸ் செய்தது ... | | 75 | 0 | 0 |
| சென்ற டிசம்பர்மீ த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ரூ ... | 144 | 4 | 1 | ஆகமொத்தம்செலவு | | 1211 | 12 | 7 |
| | | | | போகபாக்கியிருப்பு* | | 850 | 0 | 0 |
| ஆக மொத்தம் ... | 2061 | 12 | 7 | * By Pass Book 600—0—0<br>By cash on hand 250—0—0 | | | | |
| ஆக மொத்தம் ரூ ... | 2061 | 12 | 7 | ஆக மொத்தம் ... | | 2061 | 12 | 7 |

**M. R. Srinivasa Iyer,**
*(Offg.) Manager.*
20—2—13.

*Audited and found Correct*
**S. Gopalaswami Aiyengar,**
22—2—13. *Auditor.*

உ

## மதுரைத் தமிழ்ச்சங்கத்து

## 1913-ஞு பிப்ரவரி௴ 1௳ முதல் 28௳ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை ரூபா. | அ. | ப. | செலவு. | தொகை. ரூபா. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| செந்தமிழ்ச் சந்தா வகையில் வரவு ரூ | 207 | 13 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1913-ஞு ஜனவரி மாதத்திற்கு சம்பளம் செல்லாக்கியது ரூ 345—0—4 | | | |
| பிரிண்டிங்ஆபீசு அச்சுக்கூலிவரவு 247—10-3 | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு ௸ மாசத்துக்கு செல்லாக்கியது ரூ 68—0—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்மந்தமான அச்சுக்கூலி வரவு ... 154—7—0 | | | | பிப்ரவரி௴த்தில் வேலைபார்த்த சங்கம் சிப்பந்திகளுக்கு வேலை பார்த்த நாளுக்குக் கணக்குத்தீர்த்த வகையில் ரூ 13—3—5 | | | |
| ஆக பிரிண்டிங் ஆபீசு வரவு ரூ | 402 | 1 | 3 | | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 56—7—6 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செல்லாக்கியது. | 426 | 3 | 9 |
| சங்கம்ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... 23-10—0 | | | | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு ஆகாராதி போஷணைக்காக செல்லாக்கியது ... | 48 | 0 | 0 |
| ஆக பைண்டிங் ஆபீசு வரவு ரூ | 80 | 1 | 6 | கலாசாலை உபயோகத்துக்குப் புஸ்தகம் வாங்கிய வகையில் செல் ரூ | 4 | 14 | 3 |
| | | | | பைண்டிங் ஆபீஸ் கண்டின்ஜன்சிச் செலவு ரூ | 46 | 6 | 10 |
| புத்தக விற்பனை வரவு ரூ | 145 | 3 | 11 | பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ 48—9—10 | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| பிரிண்டிங்பேபர் கலர் ராபர் காகிதம் விற்றவகையில் வரவு ... | 3--15—5 | | | |
| கோர்ட்டு சமன்படி வரவு ... | 0— 4—0 | | | |
| விளம்பர சார்ஜ் வகையில் வரவு | 4— 0—0 | | | |
| சங்கம் காலி நிலம் மரக்கடை வாடகை பரிதாபி-ஞு தைமீத்திக்கு வரவு ... | 55—0—0 | | | |
| சங்கம் ஆங்கிலத்தமிழ் பரீக்ஷைக் கட்டணம் வரவு ... | 28-10—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ... | | 91 | 13 | 5 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஷெ. ஆபீஸ் ஆயில் இன்சின் சம்பர் தமாய் எண்ணெய்ச் செலவு ரூ | 11-13—0 | | | |
| ஷெ.ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு | 5--13—9 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செல்லாக்கியது. | | 66 | 4 | 7 |
| போஸ்டேஜ் வகையிற் செலவு ரூ | 14—15--0 | | | |
| தந்திகொடுத்தவகையிற் செலவுரூ | 3-- 3—6 | | | |
| ஆக மேற்காட்டிய விபரப்படி செல்லாக்கியது. | | 18 | 2 | 6 |
| ரிப்பேர் வகையிற் செலவு ... | | 6 | 3 | 0 |
| சங்கம் ஆபீஸ் வைத்திருக்கும் கட்டிடத்திற்கு 1913-ஞு ஜனவரி பிப்ரவரி மீத்துக்குறிய வாடகையிலிருந்து முனிசிபல்வரி செலுத்தியது ரூ | | 45 | 0 | 0 |
| லைப்ரேரி உபயோகத்துக்குப் புஸ்தகங்கள்வாங்கிய வகையிற் செலுத்தியது ரூ | | 2 | 9 | 0 |
| ஸ்டோர்ரூம் ரிபேர் செய்யும் பொருட்டு அங்குள்ள சாமான்களைக் கொண்டுவந்தவகையில் கூலி ... | 0—10—0 | | | |
| வேளிர்வரலாறு புஸ்தகத்திற்கு காபிரைட்டுக்காக பணமனுப்பிய வகையில் ... | 2—1—0 | | | |
| மானேஜ்மெண்டாபீஸிற்கு அரக்கு வகையரு கண்டின்ஜன்ஸி ஸாமான் வாங்கியவகையில் ... | 2—3—0 | | | |
| வண்டிவாடகைக்காகச் செல்லாக்கிய வகையில் ... | 0—13—0 | | | |
| சங்கப்பரீக்ஷையிற் தேறிய மாணவருக்காக மெடல் தயார்செய்த ஆசாரிக்குக் கணக்குத் தீர்த்த | | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | லேட் பிரஸிடெண்டு டிரஸ்டியவர்களிடமிருந்து கடன் வரவு ரூ 1000-த்தில் முன் செல்லாகிய தொகை ரூ 700 போக நாளது மீ"த்தில் செல்லாகியது . ரூ | 300 | 0 | 0 |
| ஆக மொத்தம் வரவு .. | 927 | 1 | 1 | | | | |
| சென்ற ஜனவரி மீ"த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 850 | 0 | 0 | ஆகமொத்தம் செலவு ரூ | 1379 | 4 | 11 |
| ஆக மொத்தம் ... | 1777 | 1 | 1 | By pass Book Rs. 300-0-0 } போக பாக்கி<br>By cash Rs. 97-12-2 } இருப்பு ... | 397 | 12 | 2 |
| ஆக மொத்தம் ... | 1777 | 1 | 1 | ஆக மொத்தம் ... | 1777 | 1 | 1 |

**M. R. Srinivasa Iyer,**
*Offg: Manager.*
24—3—13.

*Audited and found Correct,*
**S. Gopalasami Iyengar,**
24—3—13. *Auditor.*

உ.

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக.] பரீதாபி வரு பங்குனிமீ [பகுதி-ரு.

## வினைப்பகுபத விளக்கம்.

இது சுன்னாகம் வித்வான் ஸ்ரீமத்-அ. குமாரசுவாமிப்பிள்ளையவர்களா லியற்றப்பெற்ற வொருவகைச் சொல்லிலக்கண நூல்.

சொல்லிலக்கண நூல்களா லாகும் பயன் பலவற்றுள்ளும் முதன்மையுள்ளது மொழித்திறத்தின்முட்டறுத்தலாம். அம்மொழி ஒருமொழி தொடர்மொழி யென இருவகைப்படும்.

அவற்றுள், தொடர்மொழி யிலக்கணங்களே தொல்காப்பிய முதலிய பலநூல்களாலும் குறைவறக் கூறப்பட்டுள்ளன. ஒரு மொழியிலக்கணம் அவ்வாறு ஒரு நூலாலும் கூறப்பட்டிலது. இது தமிழ்மொழிக்குள்ள குறையுட் டலையாயது.

இவ்விலக்கணம் வடமொழியகத்துக் குறைவற வகுக்கப்பட்டிருத்தலால் அது சிறப்புற்று விளங்குகின்றது. அவ்வாறே தமிழ் மொழிக்கண்ணும் இவ்விலக்கணம் நிரம்புதல் தமிழ்மொழிவளர்ச்சிக்கு முக்கிய சாதனமாகும்.

வீரசோழியம், பிரயோகவிவேகம் என்னும் நூல்களுள் ஒருமொழியிலக்கணம் சிறிது விதிக்கப்பட்டிருக்கிறது. அது அவ்விலக்கணம் வகுக்கப்புகுவார்க்கு வடமொழிநெறிபற்றி வழிகாட்டிய துணையே யாவதன்றி வரையறுத்து முடிக்கப்பட்டதன்று.

*

அவ்விலக்கணங்களை யெல்லாம் ஒருவரிருவரால் வரையறுத்துரைத்த லரிதேயாயினும், பிள்ளையவர்கள்போல வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லராய் வழக்குஞ் செய்யுளு மாராய்ந்த புலவர் பலர் புகுந்து ஓரோரிலக்கணத்தை யோரொருவ ராராய்ந்து வரையறுத்து வருவாராயின், அவை நிரம்புத லுடையவா மென்பதி லொருசிறிதும் தடையில்லை.

அவ்விலக்கணங்களாவன:—பெயரடியாகப் பிறக்கும் பெயர்ப்பகுபத விலக்கணங்களும், வினையடியாகப் பிறக்கும் வினைப்பகுபத விலக்கணங்களும், பெயரடியாகப் பிறக்கும் வினைப்பகுபத விலக்கணங்களும், வினையடியாகப் பிறக்கும் பெயர்ப்பகுபத விலக்கணங்களு முதலிய பலதிறப் படுவனவாம்.

அவற்றுட் பெயரடியாகப் பிறக்கும் பெயர்ப்பகுபத விலக்கணங்களைத் தத்திதாதிகாரத்துட் பலதிறப்படப் பகுத்துக்கூறி முடிப்பர் வடநூலார்.

தமிழிலும் அவ்வாறு பகுத்து முடித்தற் குபகாரமாகுமாறு பலதிறப்படும் பெயர்ப்பகுபதவிலக்கணங்களை யொருவாறுதொகுத்து முன்னமே பிள்ளையவர்களால் இலக்கணசந்திரிகை யெனப் பெயரிட்டு ஒருசிறுநூல் வெளியிடப்பட்டுள்ளது.

அவ்வாறே வினையடியாகப் பிறக்கும், வினைப்பகுபத விலக்கணங்களையும் பெயர்ப்பகுபத விலக்கணங்களையும் வரையறுத்தற் குபகாரமாகுமாறு வினைப்பகுபதவிளக்கம் என்னு மிந்நூலும் பின்னுப் பிள்ளையவர்களா லியற்றி வெளியிடப் பெற்றிருக்கிறது.

இந்நூலுட் சற்றேறத்தாழ முந்நூற்றைம்பது வினைப்பகுதிகளை ஈறுபற்றி வேறுபடவகுத்து, அவற்றினடியாகப் பிறக்கும் வினைப்பகுபதங்களாகிய தொழிற்பெயர், வினையெச்சம், பெயரெச்சம், வினைமுற்றென்னு மிவற்றின் வடிவு தோன்ற வரலாறு காட்டியும், அப்பகுதியடியாகப் பிறக்கும் சில பெயர்வேறுபாடுகளும், அவற்றிற்கேற்ற சில விகுதிபெறு முறைகளும், துணைவினைப் பகுதி வருநெறிகளும், சில பகுதிகள் திரிந்து விகாரப்படும் வகைகளும், சில பகுதிகள் விகுதியாற் பொருள்வேறுபடுந் திறங்களுமாகிய பலவகை

யிலக்கணங்களைத் தெளிவுபெறக் காட்டியும், அரிய சொற்களுக்குப் பொருளுரைத்தும், அவை அப் பொருளில் ஆன்றோரால் வழங்கப் பட்டனவெனப் பிரயோகங் காட்டியு முடிக்கப் பெற்றிருக்கிறது.

இதிலமையாத சிலவற்றைப் பிள்ளையவர்கள் "செந்தமிழ்"க் கெழுதி வரும் வினைப்பகுதிவேறுபடுகை என்னும் பொருளுரையிற் சேர்த்திருக்கின்றனர்.

இது தமிழில் வினைப்பகுதியடியாகப் பிறக்கும் ஒருமொழி யிலக் கணத்தை வரையறுக்கப் புகுவார்க்குப் பெரிது முபகாரமாகு மென் பதி லொருசிறிதுந் தடையின்று.

இது கொண்டு இன்னும் தமிழிலுள்ள வினைப்பகுதிகளை யெல் லாம் ஈறுபற்றி இத்துணையென வரையறுத்துச் செய்கை வேறுபாடு நோக்கி வேவ்வேறு விகரணங்களில் வைத்துப் பொருளுரைத்து வட நூலாரோதும் தாதுபாடம் போல்வதோ ரிலக்கணநூலி னுருப்பா யமைத்தலு மெளிதாகும்.

அஃதமைக்கவே அதனையடுத்த இடைநிலை, சாரியை, சந்தி, விகார முதலிய வொருமொழி யிலக்கணங்களையெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக வரையறுத் துரைக்கவு மியலும்.

இத்தகைய இலக்கணநூல்களே தமிழ்மொழி வளர்ச்சிக் கின்றி யமையாத சாதனங்களாகுமென வெல்லாராலுஞ் சொல்லத்தக்கன.

இன்னு மிவ்வாறுய பல இலக்கணங்களை இயன்றவரை தொகுத் துத் தமிழுலகுக் குபகரித்துவருமாறு பிள்ளையவர்கள் நீண்ட ஆயு ளும் அரோகதிட காத்திரமு முடையராய் வாழ விறைவனருள் புரிக.

திரு. நாராயணையங்கார்,

பத்திராதிபர்.



# அந்தகக் கவிவீரராகவர் காலம்.



மேற்கூறிய பெயர் தரித்த புலவரொருவர் பண்டைக் காலத்தி லிருந்தனரென்பது தமிழ் நூலறிவுள்ள யாவரும் ஒத்துக்கொள்வர். இவரைப் பற்றிச் சென்னைச் சர்வகலாசாலையாரால் பீ. ஏ. பட்டஞ் சூட்டப்பெற்றவரும் தமிழ்வித்துவானுமாகிய குப்புசாமிமுதலியா ரவர்கள் (1) சிலவரலாறுகளைத் திரட்டி வரைந்துள்ளார். இப்பெருங் கவி காஞ்சிபுரத்துக் கணித்தான பூதூரிலே வடுகநாத முதலியாருக் குப் புத்திரராய் உதித்தனர். இவர் இருகண்ணுந்தெரியாத பிறவிக் குருடராய் இருந்தனர். இவர் குடும்பத்தார் இவர் காலத்திலேயே பூதூர் நீங்கி அதற் கருகிலுள்ள பொற்களந்தை குடிபுக்கனர். பின் னர் இவ்வந்தகர் காஞ்சிபுரஞ் சென்று கல்விபயின்று பிறகு கல்வி யிற் சிறந்து விளங்கினர். இவ்வந்தகக் கவியார் செய்யூரில் கோயில் கொண்டிருக்கும் முருகவேள் பேரிலே ஒரு பிள்ளைத்தமிழ்நூலும் கலம்பகமும் இயற்றினதுமன்றி அந்நகர அதிபரான அம்மையப்ப முதலியார் என்றவர் பேரிலும் பிள்ளைத்தமிழொன்று பாடியுள்ளா ரென்றுந் தெரியவருகின்றமையால் அவர் அச்செய்யூர் வேளாள ரோடு மிகவும் பழகி உறவுகொண்டிருந்தன ரென்பது வெளிப்படை யாம். இனி, அவர்தன்னூராகிய பொற்களந்தையில் தன் மனையா ளோடு வாழுநாட்களில் ஒரு நாள் அவர் வெளிச்சென்று திரும்பி வருவதை அங்கிருந்தவர்களிலொருவர் அவர்மனையாளுக்குத் தெரி விக்க அவள் "தமது வித்துவத்திறமையினல் யானைக்கன்றும் வள நாடும் பெற்றுவந்தனரோ" என்று சொல்ல, அதைக்கேட்ட புலவர் தம்வறுமையையுன்னி மனைவியார் தம்மை இகழ்ந்தனரென்று மனதி லெண்ணிப் பொருள் தேடும் நோக்கமாக ஒரு குற்றேவலாளையுந் தன் னுடன் கூட்டிக்கொண்டு தேசயாத்திரை சென்றனர். அவர் சோழ நாட்டிலே சிலகாலம் தங்கியபின் ஈழத்துக்குச் சென்றனர். அக் காலத்தில் "பரராசசிங்கனென்போன் ஈழத்துக் கரசனாயிருந்தான். அரசரும் அவர் அவையோரும் அந்தகருடைய புலமையையும் யாழ்

---

1. முதலியாரவர்கள் பதிப்பித்த "செய்யூர்முருகன்பிள்ளைத்தமிழ்" "நூலா சிரியர் வரலாறு" பார்க்க.

வாசிக்குந் திறத்தினையும் வியந்து அவர்க்குப் பற்பல பரிசளித்தனர். அவற்றில் (2) யானைக்கன்றும் (3) பொற்பந்தமும் முக்கியமானவை. இத்தருணத்தில் கவிராயர் அரசனைப்புகழ்ந்து பாடியபாக்களில் அவரை "வீரபராசசிங்கம்" என்றும் தன்னை "யாழ்ப்பாண" னென்றும் கூறியுள்ளார். "என்னொருவாய்க்கு இரைதேடுவதே பெருந் தொல்லையாயிருக்க அரசர் கொடுத்த நால்வாய்க்கு எங்ஙனம் இரை தேடுவது" என்று அந்தகர் புலம்ப, அரசர் அவ்வானை வளரும்படி யான நாடுங் கொடுத்தாராம். சிலவருஷங்களுக்கு முன்னே எனக்கு வாசிக்கக்கிடைத்த சோழமண்டல சதகப் பிரதியொன்றிலே (4) இக் கவிராயர் பாடிய சிலபாக்களும், இவரைப்பற்றிய சில செய்திகளு மிருந்தன. அதிலே சோழவரசன் ஈழத்தை வெற்றிகொண்ட சங் கதியைக் கேள்வியுற்ற கவிராயர்மனைவியார் வெளிச்சென்று வீட் டுக்குத் திரும்பிவருகிறவரான தனது நாயகனை நோக்கி "அரசன் ஈழத்தை வெற்றிகொண்டானும். அவர்மீது கவிபாடி யானையொன்று பெற்று வருகின்றீரோ" என்று கேட்க அவர் அக்குறிப்பை அறிந்து வேந்தனிடஞ் சென்று அவர்மீது கவிபாடி யானையொன்று பரிசாய்ப் பெற்றனரென்று கூறப்பட்டுள்ளது. யாழ்ப்பாணவைபவத்தின்படி பராசசிங்கனது தந்தையார் பட்டத்துக்கு வந்து வன்னியராலும்

---

2. யானைபெற்றதற்குப் பாடிய விருத்தம்.

"இல்லெனுஞ் சொல்லறியாத சீமையில்வா ழுதானனைப்போய்
யாழ்ப்பாணன் யான்
பல்லைவிரித் திரந்தக்கால் வெண்சோறும் பழந்தூசும்
பாலியாமற்
கொல்லனினைந் தேதனது நால்வாயைப் பரிசென்று
கொடுத்தான் பார்க்குள்
தொல்லையென தொருவாய்க்கும் நால்வாய்க்கு மிரையெங்கே
துரப்புவேனே"

3. பொற்பந்தம் பெற்றபோது பாடிய வெண்பா.

"பொங்குமிடி யன்பந்தம் போயதே யென்கவிதைக்
கெங்கும் விருதுபந்த மேற்றதே—குங்குமந்தோய்
வெற்பந்த மானபுய வீரபர ராசசிங்கம்
பொற்பந்த மின்றளித்த போது"

4. இது "பிறிற்ரேப் பிள்ளை" யவர்களுடைய விரிகாமத்துப் பெருந் தோட்டத்திலிருந்த புத்தகசாலையிலே கிடைத்தது.

சிங்களராலும் துரத்தப்பட்டுத் தம்மனைவியோடும் மிகவும் இளைஞ ரான தமது குமாரரோடுங் கோவலூர்க்குத் தப்பியோடி அங்கே நெடுங்காலமிருக்க "விஜயவாகு" வென்ற சிங்களவரசன் யாழ்ப் பாணத்தை ஆண்டுகொண்டிருந்தான். அவர் குமாரர் பெரியவர்க ளானபோது மதுரையை யடுத்தநாடுகளிலே ஒருசேனையைத்திரட்டி ஈழஞ்சென்று பெரும்போர்புரிந்து, சிங்களவரசைக் கவிழ்த்து, மறு படியும் யாழ்ப்பாணத்துக் காசராய்ச் சிம்மாசனமேறினர். பின்பு அவர் வயோதிபம் மேலிட ராஜ்யப் பொறுப்பைத் தம்மகன் பராாச சிங்கனிடம் ஒப்புவித்துச் சிம்மாசனம் விட்டிறங்கச் சயதுங்கனான பாராசசிங்கன் ஈழத்துக் கரசனாயினன்.

நெடுங்காலம் காஞ்சிபுரத்திலும் அதையடுத்த நாடுகளிலும் வாசஞ்செய்துகொண்டிருந்தவரான அந்தகக் கவியார் அந் நகரத்துக் கணித்தான கோவலூரிலே ஈழத்தரசன் தன் குடும்பத்தோடு பல் லாண்டுகளாய்த் தங்கியிருந்த செய்தியை அறிந்திருந்தாரென்று நினைத்தற்கு இடமுண்டன்றோ. இனி, பராாசசிங்கனது தந்தையார் சிங்களரை வென்று ஈழத்தைக் கைப்பற்றின செய்தி சோழநாடெங் கும் ஒய்யென பரவியிருக்குமன்றோ. இந் நற்செய்தியைக் கேள்வி யுற்றே கவிராயர் மனைவியார் அவரை ஈழஞ்செல்லும்படி ஏவினா ளென்னல் இழுக்காகாது. சிலகாலம் கவிராயர் ஈழத்தரசனிடமிருந்து அவ்வூர்ப் புலவரெல்லோரையும் தமது கல்வித் திறமையினால் மகிழ் வித்துக்கொண்டிருந்தார். பராாசசிங்கரும் அந்தகருடைய புலமை யை வியந்து அவர்மீது பாக்கள் சில (5) வியற்றினர். பின்னர்க்

5. கவிராயர்மீது பராாசசிங்கம் பாடியது.

"இன்னங் கலைமகள் கைம்மீதிற் புத்தக மேந்தியந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப் பாளென்ன புண்ணியமோ
கன்னன் சயந்தன் கவிவீர ராகவன் கச்சியிலே
தன்னெஞ்ச மேடெனக் கற்றான் கனமுத் தமிழையுமே"

ஆருலாவைக்கேட்டுப் பராாசசேகரன் (பராாசசிங்கம்) பாடியது.

புவியே பெறுந்திரு வாரு ருலாவைப் புலவர்க்கெல்லாஞ்
செவியே சுவைபெறு மாறுசெய் தான்சிவ ஞானமனு
பவியே யெனுநங் கவிவீர ராகவன் பாடியநற்
கவியே கவியவ னல்லாத பேர்கவி கற்கவியே"

கவிராயர் தான்பெற்ற பல்லக்கு முதலிய பரிசுகளுடனும் பரிவாரங்களுடனும் தான்பிறந்த ஊர்க்குத் திரும்பிப்போயினர். தன்னூர்க்குப் போகும்போது திருநெல்வேலியிலுள்ள கயத்தாற்றரசன் பேரில் ஓர் உலாப்பிரபந்தம் பாடினர். இக்காலத்திலேயே அந்தகர் "கிருஷ்ணப்ப வாணன்" என்றவோர் அரசர்மீது சீட்டுக்கவியொன்று பாடியனுப்பி அவரையுங்கண்டு பரிசுகள் பல பெற்றனரென்றும் (6) அக் காலத்திலிருந்த "திம்மைய அப்பையன்" என்னு மொரு பிரபுவின் கேள்விப்படி 'திருக்கழுக்குன்றப் புராணத்தை'ப் பாடினரென்றும் (7) தெரிய வருகின்றது. இப்படிப் பல்வேறிடங்கள் சென்று பாடிப் பரிசுகள் பெற்றுத் திரும்பித் தன் ஊர்சேர்ந்து தன் மனையாளுக்குத் தான் பெற்ற பரிசுகளையும் காண்பித்து அவளுடனிருந்து பலநாள் இல்லற நடாத்திக் காலப்போக்கில் அம்மைக்குச்சென்றனர். இவர் வழித் தோன்றியவரென்று பரம்பரையாய் அறியப்பட்டோர் இவரிருந்த நாட்டிலே இன்றுமுள்ளனராம்.

இவ் வந்தகக்கவியார் எக்காலத்தவரோவென்பது இனி ஆராயத் தக்கது. பின் சொல்லப்படும் காரணங்களைக்கொண்டு அந்தகர் 17-ம் நூற்றாண்டின் கடைப்பகுதியில் இருந்திருக்கலாமென்று குப்புசாமி முதலியார் நினைக்கின்றனர். கி. பி. 1685-ம் ஆண்டு துவக்கம் 1728-ம்

---

(6) கவிராயர் கிருஷ்ணப்பவாணன்மீது பாடிய சீட்டுக்கவி.

"இனிதினி தெனச்சேர சோழபாண் டியர்மெச்சு மிச்சித்த மதுரவாக்கி
யீழமண் டலமளவு திறைகொண்ட கவிவீர ராகவன் விடுக்குமோலை
வனிதையர் விகாரமன் மதராஜ ரூபன்மயி லையாதி பதிசக்கிர
வாளத்தி யாகிநங் காளத்தி கிருஷ்ணப்ப வாணனெதிர் கொண்டுகாண்க
கனதமிழ்த் துறையறி மரக்கலங் கன்னிகாமாட நன்னூற்
கட்டுபேர் கொட்டாரம் வாணிசிங் காதனங் கவிநாட கஞ்செய்சாலை
வினவுசிவ காதையிற் சர்க்கரை யெனத்தக்க வினையே னுடம்புநோயால்
மெலியுமோ மெலியாத வகைபால் பெருத்தொரு மேதிவர விடவேணுமே."

(7) திம்மைய அப்பையன்மீது பாடிய சீட்டுக்கவி.

"இந்நா ளிருந்தபேர் புதியபா கம்பண் டிருந்தபேர் பழையபாக
மிருபாக மும்வல்ல லக்கணக் கவிவீர ராகவன் விடுக்குமோலை
அன்னாதி தானப்பிர வாசன்பிர சங்கத் தனந்த சேடாவதார
னகிலப்பிர காசன்திம் மைய வப்பையன் மகிழ்ந்து காண்க
தன்னுளு மோலையும் வரக்கண்டு நாம்வேத சயிலப் புராணத்தையித்
தனைநா ளிருந்தோதி னேமரங் கேற்றுவது தான்வந் தலாமலில்லை
நன்னுவ லோருட னிதைக்கேட் டெனச்சோழ நாட்டுக் கனுப்பவேணும்
நவிலோலை தள்ளாம லேசுக்கிர வாரத்து நாளிங்கு வரவேணுமே."

ஆண்டுவரைக்கும் இராமநாதபுரத்தில் அரசாண்டிருந்த இரகுநாத சேதுபதியின் சம்ஸ்தான வித்துவானுயிருந்த படிக்காசுப் புல வருக்குக் குருத்துவம் வகுத்தவரும் இலக்கண விளக்கவாசிரியரு மான வைத்தியநாத நாவலரைப்புகழ்ந்து இவர் ஒரு வெண்பாப் பாடியிருக்கின்றாரென்றும் மேற்சொன்ன இரகுநாதசேதுபதிக்குமுன் அரசாண்ட சேதுபதியின்பேரிற் கோவைநூலொன்று செய்த அமிர்த கவிராயரும் இவரும் ஒரே காலத்தவரென்றும் இவர் தமது சீட்டுக் கவியிற் குறித்த "திம்மைய அப்பையன்" கி. பி 1680-ம் வருஷம் வரையில் செங்கற்பட்டிலும் சென்னையிலும் இருந்து கனவானென்று புகழ்படைத்த "திம்மையநாயக்கன்" என்னலாமென்றும் இவர் வம்சத்திலிப்போதிருக்கும் கவிராயர் "ஸ்ரீநிவாச முதலியாரவர்கள் இவரது எட்டாவது தலைமுறையிலுள்ளவரென்றும் காட்டி இவர் இருந்த காலம் கி. பி. 1660-ம் வருஷம்வரையில் என்று கொள்ளலா மென்று குப்புசாமிமுதலியார் கூறுகின்றனர்.

அந்தகர் காலம் இவ்வளவு தூரம் பிந்திப்போவதற்கு முதலியாரவர்கள் எடுத்துக்காட்டிய நியாயங்கள் போதுமானவை யாய்த் தோன்றவில்லை. ஏனெனில் அவர் எக்காலத்தவரோ என் பதைத் துணிதற்கு அவர்பாடிய கவிகளிலுள்ளகுறிப்புக்களையேஆதா ரமாகக் கொள்ளல்வேண்டும். இவர் இயற்றியதாக முன் சொல்லப் பட்ட பிள்ளைத்தமிழில் சிறுதேர்ப்பருவத்து ஆறாவது செய்யுளில் (8) சகாப்தம் 1443-ல் அதாவது கி. பி. 1521-ல் அவ்வூர் முருகன் ஆலயம் திரும்பக்கட்டப்பட்டபின் முதற்றிருவிழா ஆரம்பிக்கப்பட்டு நடந்ததெனக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே அந்தகர் 15-ம் நூற்றாண்டின் கடைப்பகுதிக்கு முற்பட்டவரல்லர் என்பது ஐய மின்றிக் கொள்ளக்கிடக்கின்றது. கவிராயர் மேற்கூறியசெய்யுளிலே

---

(8) பௌவத் தலத்தெழு சகாப்தமோ ராயிரத்
தொருநாறு நூற்றின் மேலும்
பயிலுநாற் பத்துமூ வருடமாம் விடுவருட
மகரம் பகுத்த திருநாட்
டெய்வத் திருத்தே ருருட்டியது போலவிச்
சிறுதே ருருட்டி யருளே
செய்கையாய் சரவணப் பொய்கையாய் தோகையாய்
சிறுதே ருருட்டி யருளே.
«செய்யூர்முருகன்பிள்ளைத்தமிழ்» 76, 77-ம் பக்கங்கள் பார்க்க.

வருடத்தையும் "மகரம்பகுத்த திருநா"ளென்று மாதத்தையு மாத்திரம் சொல்லி, வாரம், நக்ஷத்திரம், திதி, யோகம், கரண முத லியவற்றைச் சொல்லாது விட்டமையான் அக்கவி எழுதப்பட்டது. அத்தேதிக்கு அநேக வருஷகாலம் பிந்தியேயென்று குப்புசாமி முத லியார் நினைக்கின்றனர். இக் காரியத்தில் முதலியார் கூற்றுத்தக்க ஆதாரங்கொண்டு நிற்பதாய்த் தோன்றவில்லை. காலங்குறிப்போர் பிற்காலத்தார்க்கென்று எப்போதும் தீர்க்கமாய் எழுதுபவரல்லர். ஆகவே திதியோகம் முதலிய விவரங்களைக் காட்டாமல்விட்டது அக் காலத்துக்கு மிகப் பிந்தியவரென்பதைக் கிஞ்சித்தேனும் உறுதிப் படுத்தமாட்டாது. ஈழத்தரசன் பரராசசிங்கனையும் நமது கவிராயர் தமதுகவிகளில் குறித்திருக்கின்றாரென மேற்சொல்லப்பட்டது. இப் பரராசசிங்கன் காலமெதுவென நிச்சயித்தல் கூடுமாயின், கவிராயர் காலமும் இதுவென ஐயமின்றித் துணிதல் கூடியதாகும். ஈழத்தை ஆண்டவரென வைபவத்தில் குறிக்கப்பட்டுள்ள அரசர்வரிசையில் (9) "பரராசசிங்கன்" என்ற பெயரையுடைய அரசர் ஒருவரே. 16ம் நூற்

(9) இவ் வரசனுடைய முழுப்பெயர் "பரராசசேகர சிங்கையாரியன்" என்றும் "சிங்கைப் பரராசசேகரன்" என்றும் "வைபவம்" சொல்லுகின்றது. (Vide English Translation of "Yalpana" "Vaipavamalai" by the late C. M. Britto Esq. p. 25.) இவர் தந்தையாருக்கும் யாழ்ப்பாணத்தை ஆண்டுகொண்டிருந்த சிங்கள அதிபதிக்கும் நேரிட்ட செருமுகத்தில் பரராச சேகரன் அவ் வதிபதியின்மேற் சிங்கத்தைப் போலப் பாய்ந்து அவனை வெட்டிக் கொன்றனனென்றும் அவ் வதிபதியின் பெயர் "விஜயவாகு" என்றும் மேற் கூறிய நூலிற் சொல்லப்பட்டுள்ளது. (Vide idem p. 25.) சிங்கள இதிகாச நூலாகிய "இராஜவழியில்" சொல்லியிருப்பதோடு இது சற்றே முரணும். ஏழாம் விஜயவாகு என்பவன் கொழும்பிலிருந்து சில காததூரத்திலுள்ள பழைய "ஜயவர்த்தனபுரம்" என்ற நகரத்திலிருந்து ஆண்டுகொண்டிருந்தவனென்றும் அவனுக்குக் கீழான ஒரு "கருணாதிபதி" (கருமத்தலைவன்) யாழ்ப்பாணத்திலிருந் தானென்றும் கூறப்பட்டுள்ளது. (Vide Rajavaliya edited by B. Gunesekera Mudaliar pp: 74—5). இவன் பெயரும் "விஜயவாகு" வென்றிருந் திருக்கலாம். பரராசசேகர சிங்கன் செருக்களத்திற் காட்டிய உக்கிர தீரத்தை யும் கைக்கொண்ட வெற்றியின் மேன்மையையும் நோக்குங்கால் அவனுக்கு "சய துங்கவீரபரராசசிங்கன்" என்ற பெரும்பெயர் நனிபொருந்துமன்றோ.

பரராசகேசரி (பரராசசிங்கன்) 17-ம் நூற்றாண்டின் முதலிலிருந்ததாகத் தெரியவருகின்றதென முதலியார் எழுதியுள்ளார். பரராசசேகரனுடைய பௌத் திரன் ஒருவர் "பரராசசிங்கன்" என்றபெயரையுடையராய் 17-ம் நூற்றாண்டின் முதற்பகுதியில் இருந்தனரென்பது உண்மையே. ஆயின் அவர் ஈழத்தரசனாய் இருந்தவரல்லர். அவர் தமதுபாட்டனார் பெயராகிய பரராசசிங்கன் என்ற பெயரி னால் வழங்கப்பட்டனர் என்று 'வைபவம்' கூறுகின்றபடியால் 'பரராசசிங்கன்' என்ற பெயர் பரராசசேகரனுக்கு முந்தி வழங்கப்பட்டது என்பது உண்மைப் படுகின்றது. யாழ்ப்பாணச்சரித்திர மென்ற வேறொரு நூலிலும் "பரராச சேகரன்" "பரராசசிங்கன்" என்று வழங்கப்படுகின்றான். (Vide Vaipavamalai p. 32 and Yalpana Charitram p. 34.)

ற்றாண்டின் நடுப்பகுதியில் பிரான்சிஸ் சவியரால் கிறிஸ்தவ மார்க்கத்துக்குத் திருப்பப்பட்ட மன்னார் தேசத்துக் குடியானவரில் அநேகரைக் கொலைசெய்வித்த "சங்கிலி" என்ற யாழ்ப்பாணத்தரசன் இப்பரராசசிங்கருடைய மகனேயாவன். ஆகையினால் சங்கிலி அரசன் தந்தையார் 16ம் நூற்றாண்டின் முதற்பகுதியில் இருந்தவராதல் வேண்டும். 17ம் நூற்றாண்டின் முதற்பகுதியில் ஈழநாடு வேற்றரசர் கைக்குட்பட்டுத் தன்னரசை முழுதும் இழந்துவிட்டபடியினால் ஈழநாட்டரசன்மீது கவிபாடிய கவிராயர் இக்காலத்துக்கு முந்தினவராதல் வேண்டும். பரராசசிங்கனது தந்தையார் காலத்துச் சிங்கள அரசன் "விஜயவாகு" என்றும் வைபவம் கூறுகின்றது. 7ம் "விஜயவாகு" கி. பி. 1505ம் வருஷமுதல் 1534ம் வருஷம் வரைக்கும் அரசுபுரிந்தவனாகையால் பரராசசிங்கன் காலம் 16ம் நூற்றாண்டின் முதற்பகுதியேயென்று அமைகின்றதன்றோ. மேற்குறித்த விஜயவாகுவின் காலத்தில் யாழ்ப்பாணம் சிங்கள அரசுக்குட்பட்ட நாடாகவிருந்ததென்பது சிங்கள இதிகாசங்களிலும் கூறப்பட்டுள்ளது. கவிராயர் தம்சீட்டுக்கவியொன்றில் 'திம்மைய அப்பையன்' என்னுமொரு பிரபுவைத் தன்காலத்துள்ளோராகக் குறித்திருக்கின்றனரென்று முன் சொன்னோம். இப்பெயரையுடைய ஒருவர் விஜயநகரத்தில் கி. பி. 1509ம் ஆண்டு துவக்கம் இருபது ஆண்டுகளுக்கு (1529ம் வருஷம் வரைக்கும்) அரசராயிருந்த "கிருஷ்ணதேவராயருக்கு மந்திரியாயிருந்து (10) புகழ்பெற்று விளங்கினவர். கிருஷ்ணப்பவாணனென்று அந்தகர் தம்சீட்டுக்கவியிலே குறித்திருப்பவர் இக்கிருஷ்ணதேவராயரே (11) யென்று ஊகித்தல் மிகப் பொருந்தும். மேற்

---

(10) நரசிம்மலு நாயுடு அவர்கள் செய்த "தக்கண இந்தியாவின் சரித்திர சார சங்கிரகம்" 70-ம் பக்கம் பார்க்க.

(11) கிருஷ்ணதேவராயர் விஜய நகர அரசர்கள் எல்லோரிலும் அதிக புகழ்படைத்தவராய் இருந்தவர். இவரே கூர்ச்சரம் மகதம் முதலிய வடநாடுகளைக்கைப்பற்றி அநேக ராஜாக்களை அடக்கி ஆண்டுவந்தனர். இவர் வடநாடுகளை வென்ற செய்தியைக் குறித்தே "இவரைச் சக்கரவாளத்திபாகி" என்று அந்தகக்கவியார் தமது சீட்டுக்கவியில் சொன்னாரெனல் பொருத்தமுடையது. "சரித்திரசாரசங்கிரகம்" 91—ம் பக்கம் பார்க்க.

குறித்த திம்மைய அப்பையன் "திம்மராஜா" என்றும் "திம்மாராஜா அப்பாயு" என்றும் வழங்கப்பட்டுள்ளார். அவர் தானுவம் என்ற வொரு சிறு கிராமத்தில் ஓர் எளிய பிராமணக் குடும்பத்திற் பிறந்து தம் கல்வித்திறமையினாலும் விழுமிய நடைகுறைதிகளாலும் உயர் நிலையடைந்து கௌரவம் பெற்றவர். அவர் பிராமணராய் இருந்தமை யானுக்கும் "திம்மைய" (திம்ம+ஐய) ரென்று அழைக்கப்பட்டனர். இதுகாறும் வரைந்துள்ள உண்மைகளால் அந்தகக் கவியார் காலம் 16ம் நூற்றுண்டின் முதற் பகுதியே யென்பது அங்கையில் ஆமலகம் போல் தெள்ளிதின் விளங்கும்.

(தொடரும்)

வே. ஜோ. தம்பிப்பிள்ளை. (M. R. A. S.)

---

உ

## செந்தமிழ்த் தொகுதி-10 பகுதி-12 ல் வெளியான

# 7-ஆவது ஐயவினவின் விடையுரை ஆராய்ச்சி.



7-ஆவது வினா:— புதல்வரைப்பெறுதல் என்ற அதிகாரப் பெயர்க்கு "இருபிறப்பாளர் மூவரானு மியல்பாக விறுக்கப்படுங் கடன் மூன்றனுள் முனிவர்கடன் கேள்வியானும், தேவர்கடன் வேள்வியானும், தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலானுமல்ல திறுக்கப்படாமையின் அக்கட னிறுத்தற்பொருட்டு நன்மக்களைப் பெறுதல்" என்று விவரண மெழுதப்பட்டிருக்கிறதே ; இவ் வதிகாரத்துக்கு இருபிறப்பாளர் மூவரே இலக்காகவும், நான்காம் வருணத்தவர் விலக்காகவுங் கொள்ளுதல் பொருந்துமா ? விலக்காயின், உரைப்பாயிரத்துள் "ஈண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவராற் சிறப்புடைய வொழுக்கமே அறமென வெடுத்துக்கொள்ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடை மையின், சிறுபான்மையவாகிய சிறப்பியல்புகளொழித்துப் பெரும் பான்மையவாகிய பொதுவியல்புபற்றி இல்லறம் துறவறமென இரு வகை நிலைபாற் கூறப்பட்டது” என்பதுடன் எவ்வாறு பொருந்தும்?

2. விடை:—முக்கடனேக்கி நின்றது. விலக்கன்று. என்பது.

3. விடையுரையின் கருத்து:—நான்காம் வருணத்தவர்க்கு விதிக்கிலக்காகாமையானும் அவற்றின் மறுதலைச்செய லன்மையா னும் அறனும் அறன்கடையு மாகாது விழைவன புரிதலின் பாற்படும் ஐம்புலநுகர்ச்சிபோல இல்லறத்துள் இன்பம் பயப்பதோர் உலக நடையா மென்பது கருதியே முக்கடனேக்கி நின்றது. விலக்கன் றென்று விடைகூறப்பட்டதென வுணர்க. என்பது.

4. விடையால் பெறப்படுவது சதுர்த்தருக்குப் பிதிர்க்கடனாற் றற்பொருட்டுப் புதல்வரைப்பெறுதலென்னு மொழுக்கம் விதி. என் பது. அதன் உரையின் கருத்தால் பெறப்படுவது சதுர்த்தருக்குப் பிதிர்க்கடனாற்றற்பொருட்டுப் புதல்வரைப்பெறுத லென்னு மொ ழுக்கம் விதியன்றெனினும் அது விதி விலக்குகளாகாது விழைவன புரிதலின்பாற்பட்டு உலகநடையாமென்பது. இவ்வாறு விடையும் அதன் உரையும் ஒன்றுக்கொன்று மாறுபட்டுக்கிடத்தல் மிக்க வியப்பே! விடையை விளக்க உரையெழுதப் புகுந்தார் அதன் கருத் தைத் தழுவியன்றே எழுதுவது சிறப்பு. அங்ஙனமெழுதாது மற் றென்றுகூறி மலையவைப்பது எது கருதி? விடை தவறாயின் அது தப்பென்று காட்டித் தாம் கண்ட உண்மைப்பொருளையன்றே விளக் கல் வேண்டும். அது குற்றமாகாமல் அறிஞர் ஒப்பத்தக்கதாம். இது நிற்க.

5. இனி விடை உரைகளில் பலம் பலமின்மையைச் சிறிது ஆராய்ச்சிசெய்து முடிவுகொள்வாம்.

6. ஸ்ரீமத்-மு. ராகவையங்கார் முதலிய சில்லோர் அச்சிட்ட திருக்குறட் பிரதிகளில் புதல்வரைப்பெறுத லென்னு மதிகாரமுகத் தில் முக்கடன்களி லொன்றாகிய பிதிர்க்கடனிறுத்தற்குப் புதல்வரைப்

பெறுதல் இருபிறப்பாளர்கட்கு உரித்தென்னும் பொருள்பட எழுதியிருக்கிறது. திருத்தணிகை ஸ்ரீமத்-சரவணப்பெருமாளையர், களத்தூர்த் தமிழ்ப்புலவர் ஸ்ரீமத்-வேதகிரிமுதலியார் முதலிய பல்லோர் அச்சிட்ட திருக்குறட் பிரதிகளில் புதல்வரைப்பெறுத லென்னு மதிகாரமுகத்தில் நால்வகை வருணத்தார்க்கும் பொதுப்படப் பிதிர்க்கடனியற்றற்குப் புதல்வரைப்பெறுத லுரித்தென்னும் பொருள்படக் குறித்திருக்கின்றது. இங்ஙனம் திருக்குறட் பிரதிகளில் இருவிதமாயிருக்க எங்ஙனம் திருக்குறள்கொண்டு பிதிர்க்கடனியற்றற்குப் புதல்வரைப்பெறுதல் துவிஜர்கட்குமட்டும் விதியுடைத்தென்றும் சதுர்த்தருக்கு மட்டும் விதியுடைத்தன்றென்றும் துணிந்து கூற முடியும்?

7. உரையாசிரியராம் பரிமேலழகரும் உரைப்பாயிரத்தில் நால்வகை வருணத்தார்க்கும் பொதுவாதல் பற்றி இல்லறம் துறவறமென எடுத்துக்கொண்டார் வள்ளுவரெனக்கூறி, வருணபேத மொழித்ததுபோலத் துறவறவியலில் கொல்லாமை என்னு மதிகாரத்தின் 2-ஆவது பாட்டு விசேடவுரையில் "எல்லாநூல்களினும் நல்லனவெடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கியல்பாகலின் ஈண்டும் பொதுப்பட நூலோரென்றும், அவரெல்லார்க்கும் ஒப்ப முடிதலான் இது தலையாய வறமென்றுங் கூறினு" ரென்றும் ஷை அதிகாரம் 5-ஆவது பாட்டு விசேடவுரையில் "துறவு ஒன்றேயாயினும், சமயவேறுபாட்டால் பலவாமாகலின், நீத்தாருளெல்லாமென்று" ரென்றும் நூலாசிரியர் வசனங்காட்டிச் சமயபேதத்தோடு வருணபேதமு மொழித்தது காண்க. நூலாசிரியராம் வாய்மைத் திருவள்ளுவரும் அறத்துப்பாலில் யாண்டும் யார்க்கும் பொதுவாய் மொழிந்தே செல்கின்றார். யாக்கியவற்கிய ஸ்மிருதியில் சூத்திரன் தானத்தையும், நிருகஸ்தனுகிப் பிதிர்சிராத்தாதிகளையும், நமஸ்கார மந்திரங்களைச் சொல்லித் தேவயக்கிய முதலிய பஞ்சமகா யக்கியங்களையும் செய்யக்கடவனென்று வற்புறுத்திச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதனை இக் கலியுகத்துக்குரிய "பராசரஸ்மிருதியில்" ஆசார காண்டத்திலுள்ள சூத்திரதர்ம பிரகரணசுலோகத்தின் உரையில் ஸ்ரீமத்-மாதவாசாரியரால் எடுத்தாளப்பெற்றிருக்கிறது.

8. வேதத்தில் மூவர்க்குமே முக்கடனுளொன்றாகிய தென் புலத்தார்கட னிறுத்தற்பொருட்டுப் புதல்வரைப்பெறுதலென்னு மொழுக்கங் கூறப்பட்டிருக்கிறதெனின் அது பொருந்தாது. என்னை? வேதத்தின் உபாங்கம் நான்கனுளொன்றாகிய ஸ்மிருதியில் கூறியதுகொண்டு வேதத்திலும் உண்டென்பது உறுதி. ஏனெனின் வேத நோக்கத்துக்கு ஸ்மிருதி முரண்படாது. அதனை வேதாங்கம் வேதோபாங்கம் முதலிய யாவையும் ஐயந்திரிபறக்கற்றாய் பின் வேதத்தை யோதியுணர்ந்த வல்லபண்டிதரே அறியற்பாலர். மற்றை யாரறியார். மேற்கூறியபாங்குள்ள பண்டிதரும் இக்காலத்தில் இல்லை. ஆகலின் தென்புலத்தார்கட னிறுத்தற்பொருட்டு முதன் மூவர்க்குமே புதல்வரைப்பெறுதலென்னு மொழுக்கம் வேதஞ்சாற்றிய தென்பது பயனில் கூற்றாம். அவ் வேதம் சதுர்த்தருக்கும் தென் புலத்தார்கட னிறுத்தற்பொருட்டுப் புதல்வரைப்பெறுத லென்னும் ஒழுக்கம் உண்டென்பதை ஓரிடத்திலாயினும் சொல்லாமலிராது.

9. இதுகாறுங் கூறிவந்த துணையானே சதுர்த்தருக்கும் பிதிர்க்கடன் செய்தல்வேண்டிப் புதல்வரைப்பெறுதலென்னு மொழுக்கம் விதியென விளங்கி விடை பலமுடையதாதலும் விடையினுரை பலமின்மையடைதலும் வெளியாம்.

அ. முத்தையமுதலி,

திருப்பாதிரிப் புலியூர் ஞானியார்

மடாலயத்துச் சுவாமிகள் மாணவன்,

பரங்கிப்பேட்டை.

---

ஸ்ரீ:

# ஐயவினுவின் விடையுரை யாராய்ச்சியின் எதிருரை.

"செந்தமிழ்"ப் பத்தாந்தொகுதியின் பன்னிரண்டாம் பகுதியில் வெளிவந்த "ஐயவினுவின் விடையுரை" யானது விடையொடு மாறு பட்டிருப்பதாக வுணர்ந்து, பரங்கிப்பேட்டை ஸ்ரீமான்-அ. முத்தைய முதலியார் அவர்கள், "ஐயவினுவின்விடையுரை ஆராய்ச்சி" என்னும் வியாசத்தால், அவ்விடை யுரைகளின் வன்மை மென்மைகளை யாராய்ந்து விடை பலமுடையதென்றும், விடையுரை பலமில்லதென்றும் தமது துணிவை வெளியிட்டிருக்கிறார்கள்.

ஒருபொருளில் ஐயம் நிகழ்ந்துழி ஆராய்ச்சியாலே தெளிவு பிறக்கின்றமையானும், பண்டைத்தமிழ்ப் புலவர்களும் "சங்கமிருந்து தமிழாராய்ந்தார்" என்பதனானும் தமிழுணர்தற்கு ஆராய்ச்சி சாதனமாக வேண்டற்பாலதேயாம்.

அதுவும், "காய்த லுவத்த லகற்றியொருபொருட்கண், ஆய்த லறிவுடையார் கண்ணதே" என்றமையால் ஆராயப்படுவதொரு பொருளை வெறுப்பு விருப்புக் கிலக்காக்காது நொதுமலாகவைத்தே நியாயவாயிலா னாராயவேண்டும்.

அங்ஙனம் செய்பு மாராய்ச்சியாற்றானே யொரு பொருளிற் பலர்க்கு மொரேதுணிவு பிறக்கின்றது. ஒரோவிடயத்தில் ஒரொருவர்க்கு வெவ்வேறு துணிவு பிறப்பது முண்டு. நியாய விரோதமின்றி வெவ்வேறுதுணிவு பிறக்குமாயின் அவையே மதபேதமாகின்றன.

அம்மதபேதங்களுள் வேண்டுவதொன்றை உடன்படல் அல்லது மறுத்தல் முதலிய புரிதலும் புலவரது செயலேயாம். ஆதலாற் பிறரெழுதும் பொருளுரையிற் பொருந்தாமைகண்டோர் அதனை மறுத்துப் பொருந்துவதொன்றை நாட்ட நியாயவாயிலான் வாதுசெய்வதும் அறிவுளர்ச்சிக்குரியதே.

அவ்வாறு வாதுசெய்வோர்களுக்கு அவ் வாதி னிறுதியில் வெற்றி தோல்விகளும் விளைகின்றன. அவற்றுள் வெற்றி செருக்கை விளைக்கின்றது; தோல்வி மெய்யுணர்ச்சியையும் அறிவுவளர்ச்சியையும் விளைக்கின்றது. வெற்றியாலுண்டாம் செருக்கினும் தோல்வியாலுண்டாம் மெய்யுணர்ச்சியும், அறிவு வளர்ச்சியும் விழுமிய வாதலால், வெற்றியினும் தோல்வியே மேலானதென விரும்பத்தக்கது. ஆதலால் வெல்வதும் தோற்பதும்பற்றி யொருவர்க்கொருவர் பகையாகி யுரைபாடல் விரும்பற்பாலதன்று.

இதனைச் சிறிதும் நினையாது, எதிரியை எள்ளுதல், இகழ்தல், வைதல் என்னுமிவையே சாதனமாகக்கொண்டு வாதுபுரிவதன்றி அவற்றுள் ஒன்றேனும் சிறிதும் நிகழாது நியாயத்தினின்று நழுவாது வாதுசெய்வோர் மிகவும் அரியராகின்றனர்.

ஆதலின், இதன்முன் சேர்க்கப்பட்டுள்ள "ஐயவினுவின்விடையுரையாராய்ச்சி"யுள், "மிக்கவியப்பே" என்பது தொடக்கமாக இடையிடையே யெழுதப்பட்டுள்ள சில வாக்கியங்களால் அவைசிறிது புலப்படுவதுகொண்டு பேரிதுங்குறைவுடையதெனக் கருதல்கூடா தென்பது பற்றியே அவ்வாராய்ச்சி இச்செந்தமிழில் வெளியிடத் தக்கதாயிற்று. இது நிற்க.

வாதி யெழுதிய ஆராய்ச்சியின் முடிவான துணிவு ஐயவினுவின் விடையும் அதனுரையும் மாறுபட்டுள்ளன வென்பதும், அவற்றுள் விடை வலியுடையதும் விடையுரை வலியில்லதுமா மென்பதும், புதல்வரைப் பெறுத லென்னுமொழுக்கம் நான்குவருணத்தினர்க்கும் அறனேயா மென்பதுமே.

ஐயவினுவின்விடையின் கருத்தும் அதனுரையின் கருத்தும் ஒன்றேயாயினுமாக; வெவ்வேறாயினுமாக. அதனல் எதிரிக்கு நேர்வதொரு லாபநட்டமு மின்றாம். விடையும் உரையும் வேறுபட்டவழியும், விடையே வலியுடையதாயினுமாக; விடையுரையே வலியுடையதாயினுமாக. அதனுலும் எதிரிக்காகும் நட்டலாப மொன்று மின்று. புதல்வரைப்பெறுதல் என்னு மொழுக்கம் இருபிறப்பாளர்க்கே யுரிய அறனாயினுமாக; எல்லாவருணத்தினர்க்கு மொத்த வறனாயினுமாக. அதனுலும் எதிரிக் கொருவரவுசெலவு மின்று.

ஆதலால் எதிரிக்கியல்பானே காய்தலுவத்தற் கிலக்காகாத இவ் விடயத்தில் வெறுப்பு விருப்பொன்று மின்றி மெய்யுணர்ச்சியையும் அறிவுவளர்ச்சியையும் விரும்பியே இவ்வெதிருரை யெழுதப்படு கிறது.

ஐயவினாவின் விடையுரையாராய்ச்சியின் நான்காம் பந்தியில், விடையாற் பெறப்பட்டது உரையாற் பெறப்பட்டதின் வேறுபட்ட தெனக் கூறப்பட்டிருக்கிறது.

இங்கெடுத்துக்கொண்ட ஆராய்ச்சிக்கு மூலகாரணமான வினா திருக்குறளைப்பற்றி யெழுந்ததன்று ; அதற்குரையெழுதிய பரிமே லழகர் வாக்கியத்தையே பற்றியெழுந்த தென்பது வெளிப்படையாம். அதற் கிறுக்கும் விடையும் அப்பரிமேலழகர் கருத்தொடு மாறுபட லாகாதென்பது வாதிக்கும் உடன்பாடேயாம். எதனையேது விளக்கு வது அதனின் அது மாறுபடலாகா தென்பது உபயவாதிகளுக்கும் ஒப்பமுடிந்த நியாயமே. இந்நியாயம் வாதிக் குடன்பாடில்லை யென்ப ராயின் விடையின் கருத்தொடு மாறுபட்ட துரையென விடையுரை யைக் குறைகூறுவதெங்ஙனம் பொருந்தும். ஆதலாற் பரிமேலழகர் கருத்துக் கிணங்கியே ஐயவினாவிற்கு விடையிறுக்கப்பட்டிருக்க வேண்டுமென்பது உபயவாதிகளுக்கும் ஒப்பமுடிந்ததாம். ஆகவே விடையுரை பரிமேலழகர் கருத்தொடு மாறுபடாதிருத்தலால் அவர்கருத்தொடு மாறுபடாத விடையின் கருத்தொடும் மாறுபட்ட தில்லை யென்பது நன்குபெறப்பட்டது. ஆதலால் விடையின் மாறு பட்ட துரையெனக்கருதி வாதியினால் அவ்வாராய்ச்சி யெழுதற்கு விவாத மூலமே யில்லையாயிற்று.

ஆயினும் பரிமேலழகர் கருத்தொடு விடையின்கருத்து மாறு படாது எதிரிக் கநுகூலமாயிருக்கிற தென்பதை நிரூபிக்கவேண்டு மெனிற் பின்வருமாற்றால் நிரூபிக்கலாகும்.

புதல்வரைப்பெறுதல் என்னு மதிகாரத்திற்கு இருபிறப்பாளர் மூவரே யிலக்காகவும், நான்காம் வருணத்தவர் விலக்காகவும் கொள் ளுதல் பொருந்துமா? என்னும் கருத்தால் இரண்டுபொருள்கள் ஒரு வாக்கியத்தால் வினவப்பட்டன. அதற்கு, "முக்கடனோக்கி நின்றது."

"விலக்கன்று." என இரண்டு வாக்கியங்களால் விடையிறுக்கப்பட்டிருக்கிறது. இவ்விடை வாக்கியங்களில் பயனிலையொன்றே கூறப்பட்டிருத்தலால் அதற்கேற்ற எழுவாய் யாதென ஆராயின், வினவின்கண் ஐயநிலைக்களமாய் வெளிப்பட்டுநின்ற "புதல்வரைப்பெறுதல்" என்பது பெறப்படும். இதனை, சாத்தனுக்கு மகனுண்டோவென்று வினவியவழி இல்லை என விடையிறுத்தால் மகன் என்னும் எழுவாயும் சாத்தனுக்கு என்னும் எழுவாயடையும் தானே சென்றடைந்து சாத்தனுக்கு மகனில்லையென்னும் பொருள்தோன்ற நிற்பது கொண்டு கண்டுகொள்க.

அவ்வாறே யிங்கும் விடைவாக்கிய மிரண்டும் நிரனிறையணி பற்றிப் புதல்வரைப் பெறுதல், முதன் மூவர்க்கு முக்கடன் நோக்கி நின்றது. எனவும், அவ்வொழுக்கம் நான்காம் வருணத்தவர்க்கு விலக்கன்று. எனவும் பொருள் கொள்ளுமாறு கூறப்பட்டனவாகவே காணப்படுகின்றன. இங்ஙனம் கொள்ளுவதால் பரிமேலழகருரையொடு விடை முரணுவதின்றாம். ஆதலால் அதனை மறுக்கக்கருதிய வாதி பரிமேலழகரையே முதலெதிரியாகவைத்து வாதிக்கவேண்டும்.

வாதி அவரை யெதிரியாகக் கொள்ளாமையால் அதிகார முகப்பிலவரெழுதியுள்ள "இருபிறப்பாளர் மூவ" ரென்ற சொற்றொடருக்கு நான்காம் வருணத்தவரும் பொருளென அவர்பக்கத்துக் கநுகூலமாக நிரூபிக்கவேண்டும் அங்ஙனம் நிரூபித்துவிட்டால் விடையின் பொருள் தாம்கருதியதெனக் கூறுதல் ஒருவாறு கூடும்.

அவ்வாறன்றி விடை பரிமேலழகருரையை மறுத்திறுத்ததேயாமெனக் கருதுவாராயின் அதற்குவேண்டிய சாதனங்களைக்கொண்டு சாதிக்கவேண்டும்.

சொற்றொடர்களுக்குப் பொருள் துணியுமிடத்துத் தாற்பரியவுணர்வே முக்கிய சாதனமாகும். ஆதலால் விடையின் றாற்பரியமின்னதென்பதே யிங்குத் துணியத்தக்கது. அது துணிதற் குரிய கருவிகள் பலவற்றுள்ளும் விடையிறுத்தார் வாய்மொழியே மேலாயது. ஆதலா லதனையவர்கட் கெழுதியுமறியலாம்; ஐயவினவின்

விடையுரையைப்பற்றி யவர்களெழுதிய * வபிப்பிராயத்தாலுந் தெரியலாம்.

இவ்விரண்டனு ளொன்றாயினும் வாதிவழக்குக் கநுகூலமாயிருக்குமாயின் விடையின் உரை மாறுபட்டதெனக் கண்டு வாதி வியத்தலும் சாலும். அவ்விரண்டனு ளொன்றும் வாதிக்கநுகூலமில்லாதவரை எதிரி மற்றொன்றுகூறி மலைபவைத்ததாக வாதிசொல்லுவது பொருந்தாது.

ஆராய்ச்சியின் ஆரம்பத்தில் "ஸ்ரீமத்—மு. ராகவையங்கார் அவர்கள் முதலிய சில்லோரச்சிட்ட திருக்குறட் பிரதிகள்" எனவாதி கரிகூறியவை பரிமேலழகருரையைக் குறித்தலால் அவையே இங்குச் சான்றாதற் குரியன. அவையெல்லாம் இருபிறப்பாளர் மூவரானு மிறுக்கத்தகுங்கடன் மூன்றனுள் தென்புலத்தார்கடன் புதல்வரைப் பெறுதலானல்ல திறுக்கப்படாதென வாதிக்கு விரோதமாகவும், எதிரிக்கநுகூலமாகவுமே கரிகூறி நின்றன. அவற்று ளொன்றாயினும் வாதி கருதியவாறு பிதிர்க்கட னியற்றற்குப் புதல்வரைப்பெறுதல் என்று கூறியதன்று. பிதிர்க்கடனிறுத்தற்கு என்றே கூறிநின்றன. வாதிகருத்தின்படி பிதிர்க்கடனியற்றல் என்பது திதிமுதலிய புரிதலாகக் காணப்படுகின்றது. அது பிதிர்க்கட னிறுத்தலின் வேறாயுள்ளது. பிதிர்க்கடனிறுத்தல் நன்மக்களைப் பெறவிரும்பி மனையாளுடன் கூடிவாழ்தல். இயற்றற் கிலக்காகிய திதி முதலிய பிதிர்க்கடனென்றும் விவாதவிடயமன்று. உடனெண்ணிய கேள்வி வேள்விகளைப்போல ஒருவன் தானே இறுத்தற் கிலக்காகும் பிதிர்க்கடனாகிய புதல்வரைப்பெறுதலே யிங்கு விவாத நிலைக்களனாயிருக்கின்றது. அம் முக்கடனுளொன்றாகிய கேள்வி இருபிறப்பாளர்க்கே யுரியதென்பது எதிரிக்கு முடன்பாடென்பது தோன்ற அதனை அவர்

* "செந்தமிழ்" தொகுதி கக—பகுதி—கூல் அ0-வது பக்கத்து உஉ-ம் வரியிற் காண்க.

அபேக்ஷிக்கவில்லை. ஏனை யிரண்டும், அத்தன்மையவாகவே வேண்டும். திருத்தணிகைச் சரவணப்பெருமாளையர் முதலியோ ரச்சிட்டனவாகச் சொல்லும் பிரதிகள் பரிமேலழகருரையன்மையால் அவை ஈங்குச் சான்றாதற்குரியவல்ல. ஆதலாற் சான்றாதற்குரிய பரிமேலழகருரைப் பிரதிகளில் இவ்விடத்தில் மாறுபாடில்லாமையால் விடையுரையின் அணிவு தவறாகாது.

ஆராய்ச்சியின் ஏழாம்பத்தியில் வரைவனவெல்லாம் எதிரிக்கு முடன்பாடேயாம். அவற்றுள் ஒன்றாயினும் எதிரிவழக்குக்கு விரோதமா யிருக்கவில்லையென்பது விடையுரையால் விரித்துரைக்கப்பட்டது. அதனை யிங்கு மறித்தும் விரித்தெழுவது 'பிட்டபேடணம்' என்பதுபற்றி விட்டுவிடப்பட்டது.

மாதவசாரியரால் பராசரஸ்மிருதி யுரையில் எடுத்தாளப்பட்ட பிரமாணங்களுளொன்றும் எதிரிக்கு விரோதமுள்ளதில்லை. அவற்றாற் சொல்லப்படும் சிராத்தம் தேவபூஜை முதலியன நான்காம்வருணத்தவர்க்கும் விதிக்கப்பட்டனவென விடையுரையின்கண்ணே எதிரியால் அங்கீகரிக்கப்பட்டு விரோதமில்லையென்று காட்டப்பட்டுள்ளன.

ஆராய்ச்சியின் எட்டாம் பத்தியில் புதல்வரைப்பெறுதல் என்னு மொழுக்கம் ஏனையோர்க்கும் வேதத்தில் விதிக்கப்பட்டதெனத் துணியக்கருதிச் சில வாக்கியங்கள் எழுதப் பட்டிருக்கின்றன. அவற்றுள், "ஸ்மிருதியிற் கூறியதுகொண்டு வேதத்திலு முண்டென்பதுணிவு" பென்று கூறியதனால் ஸ்மிருதியிற் கூறப்பட்டதாகச் சொல்லும் சிராத்தாதிகளைத் துணிவதாலெதிரிக்கு விரோதமில்லை.

"வேதநோக்கத்துக்கு ஸ்மிருதிநோக்கம் முரண்படாது." அதனை "வேதாங்கம் வேதோபாங்கம் முதலிய யாவையும் ஓதியுணர்ந்த வல்ல பண்டிதரே யறியற்பாலர்" என்றெழுதப்பட்டிருக்கிறது. வாதி அதனை யறிந்தமைதோன்றக் கூறுகின்றமையால் அவர் அங்ஙனம் வல்ல

பண்டிதராயிருந்துகொள்வதில் எதிரிக்கு ஆக்ஷேபமில்லை. ஆயினும், அங்ஙனம் வல்ல பண்டிதரல்லாதாரும் அறிந்துகொள்வரெனக் கருதியே வாதி யதனைச் சொல்லியபடியால், எதிரியாலு மறியத்தகுமென்பதும் வாதிக்குக் கருத்தாம் என்பதற்கு அவர் கூற்றே சான்றாகின்றது.

மற்றையார் அறியார் என்றதில் மற்றையார் என்ற குறிப்பால் எதிரி யங்ஙனம் வல்ல பண்டித ரல்லரென்பது போதரும். எதிரியின் கொள்கையு மதுவேயாகலின் அது எதிரிக் கிசைந்தபொருள் சாதித்தல் என்னும் பக்கப்போலியாம்.

"மேற்கூறி யாங்குள்ள பண்டிதரு மிக்காலத் தில்லை" யென்று சொல்லப்பட்டிருக்கிறது. தமதுகூற்றால் அங்ஙனம் வல்ல பண்டிதரெனப் பெறப்பட்ட வாதி தாமே யிருக்கவும் இல்லையென்று கூறுதல் முன்னொடுபின் மலைதலாம்.

"தென்புலத்தார்கட னிறுத்தற்பொருட்டுப் புதல்வரைப்பெறுதல் என்னு மொழுக்கம் முதன் மூவர்க்கே வேதம் சாற்றியதென்பது பயனில் கூற்றாம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. பயன் பொருள் என்பன ஒருபொருட் சொற்களாதலாற் பொருளில்லாத பொய்யுரையாமாயின் அது பயனில் கூற்றென்னத் தடையில்லை. யசுர்வேதத்தின் மூன்றாங் காண்டத்தில் "பிறக்கும்பொழுதே பிராமணன் மூன்று கடனொடு பிறக்கிறான். கேள்வியான் முனிவர்கடனையும், வேள்வியாற் றேவர்கடனையும், மக்கட்பேற்றாற் பிதிரர்கடனையும் இறுக்கிறான்" என்ற பொருளுடைய வாக்கியங்களுள்ளன. இவ் வாக்கியங்களைப் பராசரஸ்மிருதியுள் ஆசாரகாண்ட வ்யாக்யானத்தில் வாதி கரிகூறிய மாதவாசார்யராலேயே யெடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இங்கு அவ் வேதவாக்கியத்தில் பிராமண னென்றது இரு பிறப்பாளனை யென வுணர்க. இவ்வாறு திருவள்ளுவரும் இருபிறப்பாளர்நூல்

என்பார் அந்தணாநூலென்றுகூறுதலுங்கண்டுகொள்க. வேதநோக்கத்துக்கு ஸ்மிருதி முரண்படாதென்ப துடன்பாடெனக் கொண்ட வாதியால் இவ் வேதத்திற்கு விரோதமாய்த் தமது பக்கத்திற் கநுகூலமாக ஸ்மிருதி கூறிபதென நிரூபித்தல் எங்ஙனம் கூடும். ஆதலால் வேதங் கூறியதென் றெதிரிகூறியது பயனில் கூற்றின்றும்.

ஏனையோர்க்கும் அவ்வொழுக்க முண்டென்பதனை வேத மோரிடத்திலாயினுஞ் சொல்லாமலிராது. என்று எழுதப்பட்டிருக்கிறது. வாதிக்காரவாக, வேதம் ஓரிடத்திலும் சொல்லாமலிராது என்று சொல்லுவதைக்காட்டிலும், எதிரிக்காரவாக மூன்றுங் காண்டத்திற் சொல்லியிருக்கிறதென்றெடுத்துக் காட்டியிருப்பது வலிமையுடையதா யிருக்கிறது.

முடிவுரையில் விடை பலமுடையதாதலும் விடையினுரை பலமின்மையடைதலும் வெளியாமென்று எழுதப்பட்டிருக்கிறது. விடையும் உரையும் மாறுபட்டவழியன்றோ அவற்றின் வன்மை மென்மைகளைச்சீர் தூக்கவேண்டும்; அவ்வேறுபாடு நிலைபெறுதவழிச் சீர்தூக்கியதிற் பயனென்னை ? வேறுபாடு நிலைபெற்றவழியும் வலியுடையது வெல்லும் என்பதும், சமபலமுடையது மதபேதமாகுமென்பதும் நியாயசம்மதமாம்.

திரு. நாராயணையங்கார்,

பத்திராதிபர்.

———

# முகவுரைப்பெயர்கள்.

"முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்."

நூற்றிறன் முதலியன அந்நூன்முகத்தே உரைத்தலின் முகவுரை யெனப்பட்டது. பதிகம் என்பது பிரதிகம் என்னும் வடமொழிச்சிதைவு. அதன்பொருள் முகம். அதுவும் முகவுரை யென்னும் பொருட்டு. நூன்முகமென்பதும் அப்பொருட்டேயாம்.

நூற்புறமாகிய முகத்தே உரைக்கப்படுதலின் புறவுரை யெனப்பட்டது. தந்துரை நூலுரை. பாயிரமென்பதற்கு இளம்பூரணர் புறவுரை யென வுரை யுரைத்தனர். அது பஹிர் என்னும் வடமொழி யடியாகவந்தது. பாஹிர் என்னும் தத்திதாந்தம் அம் பெற்றுப் பாஹிரமாகி மஹேந்திரம் மயேந்திரமானாற்போலப் பாயிரமாயிற்று. பஹிர் - புறம். ஆதலின், புறவுரை பாயிரமென்பன வொருபொருட் சொற்களாம்.

இனி ஆராயக்கிடப்பன அணிந்துரை புனைந்துரை யென்னுஞ் சொற்களே. அணிந்துரை புனைந்துரை என்வுஞ் சொற்களிலே யுள்ள உரை என்னுஞ் சொல் பெயர். அப்பெயர்ச்சொல்லை விசேடித்து நிற்கும் அணிந்து புனைந்து என்பனவற்றை வினையெச்சங்களாகக்கொண்டு உரை கூறப்பட்டுவருகின்றது. அவ்வுரை பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. பெயர்ச்சொல்லை வினையெச்சம் விசேடித்து நில்லாதன்றோ. அதுவுமன்றி ஒட்டி ஒருமொழியாக்கும் வகையில் வினையெச்சம் ஒட்டாமாறுமில்லை. அதனாலும் அவை வினையெச்சங்களாகா.

அணிந்து புனைந்து என்பனவற்றைப் பெயர்ச் சொற்களாகக் கொள்வது தகுதியாம். அவை அணி புனை யென்னும் பகுதிகளினடியாக வந்த பெயர்கள். வகு என்னுமடியாக வகுந்து என்னும் பெயரும் சிதையென்னு மடியாகச் சிதைந்து என்னும் பெயரும் வந்தாற்போல வந்த பெயர்களாம். வகுந்துவழி. சிதைந்துவழு. அணிந்துரை அணிந்தாகியவுரை. புனைந்துரை புனைந்தாகியவுரை.

யாழ்ப்பாணம்,
நாவலர்கோட்டம்.
13—4—13.

இங்ஙனம்,

ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.

உ

# மதுரைத் தமிழ்ச்சங்கம்.

---

இச் சங்கத்தார் பரீதாபி-ஷு தைமீ 8, 9, 10-ம் தேதிகளில் நடாத்திய தனித்தமிழ்ப் பரீக்ஷைகளிற் றேறிய மாணாக்கர்களின் விவரம்.



## பிரவேசபண்டித பரீக்ஷை.

### II-வது வகுப்பு

1. 6. மு. வடிவேற்பிள்ளை, மதுரைத் தமிழ்ச்சங்கம் கலாசாலை மதுரை.

2. 7. R. கிருஷ்ணசாமி, மதுரைத் தமிழ்ச்சங்கம் கலாசாலை மதுரை.

3. 10. K. P. பொன்னம்பலம்பிள்ளை, காட்டுப்புத்தூர், திருச்சிறாப்பள்ளி ஜில்லா.

4. 8. S. இராகவன், மதுரைத் தமிழ்ச்சங்கம் கலாசாலை, மதுரை.

5. 15. அ. பொன்னண்ணா, ஆலங்குடி பிராஞ்சுபோஸ்டு, திருச்சிறாப்பள்ளி.

6. 9. P. S மாணிக்கம்பிள்ளை, முத்துசெட்டி தெரு, திருப்பத்தூர், வட ஆற்காடு ஜில்லா.

P. S. Subramania Aiyer,
*President,*

29—4—13. Madura Tamil Sangam.

---

# மதுரைத் தமிழ்ச்சங்கம்.

இச் சங்கத்தார் 1913-ஞு மார்ச்சுமீ 1-ம் தேதியில் நடாத்திய ஆங்கில கலாசாலைத் தமிழ்ப் பரீக்ஷை களிற் றேறிப் பரிசும் யோக்கியதா பத்திரமும் பெறும் மாணாக்கர்களின் விவரம்.



பி. ஏ பரீக்ஷை.

II-வது வகுப்பு.

1. 1. S. R. ஸ்ரீநிவாஸன், S. P. G. காலேஜ், திருச்சினுப் பள்ளி.

யப். ஏ. பரீக்ஷை.

1-வது வகுப்பு.

1. 17. உ. வே. கோவிந்தசாமி, S. P. G. காலேஜ், திருச்சி. (முதற்பரிசு ரூ 40 பெறத்தக்க தங்கப்பதக்கம்.)

2. 20. T. S. கந்தசாமி, S. P G. காலேஜ், திருச்சினுப் பள்ளி. (இரண்டாவது பரிசு ரூ 35.)

II-வது வகுப்பு.

1. 5. V. S. இராமசுவாமி, பிண்டிலேகாலேஜ், மன்னார்குடி.

2. 6. K. திருநாராயணன், ஷை ஷை.

3. 12. Z. அருளப்பன், ஸ்காட் கிறிஸ்தவ காலேஜ், நாகர் கோயில்.

4. 19. A S. நடராஜன், S. P. G. காலேஜ், திருச்சினுப்பள்ளி.

5. 14. K. S. கிருஷ்ணமூர்த்தி, S. P. G. காலேஜ், திருச்சி.

6. 3. M A. ஸ்ரீநிவாஸன், வெஸ்லிகாலேஜ், ராயப்பேட்டை, சென்னை.

7. 7. S. V. சுப்பிரமணியன், பின்டிலே காலேஜ், மன்னார்குடி.

8. 8. S. C. ஹென்றி, ௸ ௸.

9. 4. V. இராமாநுஜன், ௸ ௸.

10. 16. M. V. மகாதேவன், S. P. G. காலேஜ், திருச்சி.

## மெற்றிக்குலேஷன்.

### I-வது வகுப்பு

1. 96. S நாவலடி வெங்கைபர், முனிஸிபல் கலாசாலை, சேலம். முதற் பரிசு ரூ 30. (வெள்ளிப்பதக்கமும் மீத ரூபாவும்.)

### II-வது வகுப்பு.

1. 85. T. K. கோபாலன், பின்டிலேகாலேஜ், மன்னார்குடி.

2. 76. P. தியாகராஜன், நாஷனல் ஹைஸ்கூல், மன்னார்குடி.

3. 97. S. V. வேணுகோபால், முனிஸிபல் காலேஜ், சேலம்.

4. 123. ஜெம்புநாதன் c/o. ஹெட்மாஸ்டர், நாஷனல் ஹைஸ் கூல், திருச்சினாப்பள்ளி.

5. 47. S. முத்துகிருஷ்ணன், முத்தியாலுப்பேட்டை ஹைஸ் கூல், சென்னை.

6. 50. K. S. இராமசுவாமி, வெஸ்லி காலேஜ், சென்னை.

7. 89. A. இராஜப்பன், His Highness, the Maharaja's College, புதுக்கோட்டை.

8. 126. P. மேரி தேவதாஸன், மஹாராஜாஸ் கெர்ல்ஸ் காலேஜ், அண்டு H. G. S. ஸ்கூல், திருவனந்தபுரம்.

9. 41. M. குழந்தைவேலு, அர்ச்சு சூசையப்பன் கலாசாலை, மஞ்சக்குப்பம்.

10. 48. K. P. சேஷாத்திரி ஐயங்கார், முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூல், சென்னை.

11. 68. S. வைத்தியநாதன், முனிஸிபல் ஹைஸ்கூல், மாயவரம்.

12. 144. M. S. ஸ்ரீநிவாஸன், வூரிஸ்காலேஜ், வேலூர்.

13. 53. K. சேஷாசாரி, ஹிந்துஹைஸ்கூல், திருவல்லிக்கேணி.

14. 105. S. கோவிந்தன், கல்யாணசுந்தரம் ஹைஸ்கூல், தஞ்சை.

15. 122. M. K. இராமசந்திரன் c/o. ஹெட்மாஸ்டர், நாஷனல் ஹைஸ்கூல், திருச்சினாப்பள்ளி.

16. 71. G. எதிராஜலு, நாஷனல் ஹைஸ்கூல், மன்னார்குடி.

17. 83. R. ஜெகன்னாதன், பின்டிலேகாலேஜ், மன்னார்குடி.

16. 111. C. P. கேசவலு, கல்யாணசுந்தரம் ஹைஸ்கூல், தஞ்சை.

19. 128. S. மார்க்கசகாயம், ஸ்ரீ மகன்த் ஹிந்து ஹைஸ்கூல், வேலூர்.

**P. S. Subramania Aiyer,**
*President,*
Madura Tamil Sangam.

29—4—1913.

---

# புத்தக வரவு.



(1) யோக உபந்யாஸங்கள்:—இது, மாது ஸ்ரீ அந்நிபெஸண்டு அம்மையால் ஆங்கிலத்திற் செய்த உபந்யாஸங்களின் தமிழ்மொழி பெயர்ப்பு. இதில் யோகசாஸ்திரத்தின் இயல்பும், பலதர்ஸனங்களின் முடிபும், யோகம் ஒரு சாஸ்திரம் என்பதும், அது அப்யசிக்கத்தக்க தென்பதும் ஆகிய விஷயங்களுடன் உபந்யாஸஞ் செய்யுமுறையில் அவற்றினிடையே யுணர்த்தவேண்டிநின்ற பல அரிய விஷயங்களும் விரித்துரைத்து முடிக்கப்பெற்றிருக்கின்றன. இவையெல்லாம் இந் திபாஷையுள்ள தமிழ்மக்களும் எளிதினுணரும்படி மதுரை பிரம்மக் ஞான ஸபைத்தலைவர் ஸ்ரீமத்—ப. நாராயணையர் அவர்களால் தெளி வான தமிழ்நடையில் மொழிபெயர்க்கப்பட்டு அச்சிடப்பட்டிருக் கிறது. இதன்விலை அணா 12.

(2) ஞானமிருதம்:—இது கும்பகோணம் ஸ்ரீமத்—சு. இராமஸ் வாமி ஐயர் அவர்களால் எழுதப்பட்டதொரு புனைகதை. பஞ்சாக்ஷர மஹா மந்திரத்தை அஸ்திவாரமாகக்கொண்டு எழுதப்பட்டதாக முக வுரையால் விளங்குகிறது. இதன்விலை அணா 10.

வேண்டியோர் ஆக்கியோர்கட்கெழுதிப் பெறலாம்.

☞ மேற்கண்டபுத்தகங்களும், விஜாப்பகுபத விளக்கமும் வழக்கப்படி பாண்டியன் புத்தகசாலையில் சேர்க்கப்பட்டன.

---

பத்திராதிபர்.

(இ - ள்.) முதலடிக்கு - (விரும்பியடைந் தனுபவிக்குங்) கொல்லை மூன்றுகாததூரமும் (அடையாது வெறுக்கத்தக்க) காடரைக்காததூரமுமாம். இரண்டாமடிக்கு - இவ்விரண்டி னெறியெல்லையை யறியாமல் இவ் விரண்டினையு மொன்றையொன்றாக மயங்கக் கிடந்தன. பின்னிரண்டடிக்கு—அவ்விரண்டி னெல்லையை மயங்காமலறிந் தியங்கவல்லாருக்கு அவ்வெல்லை கடந்து அக்கொல்லையை யடைதலுங் கூடுமென்றவாறு.

கொல்லை யென்றது பதியை; அது பெத்ததசையிற் பாசமாக விருப்பதனால் முக்காதமென நீட்டிப்புக்கூறினர். காடென்றது தறுகரணதியை; இவை பெத்ததசையிற் பதியாக விருப்பதனாலரைக் காதமெனச் சமீபங்கூறினர். இக்கருத்தைத் துறைசைப் பஞ்சாக்கர தேசிகராந்தாதி முதற்கவியிலறிக. மயங்கி - மயங்கவெனத் திரித்துரைக்க. (எஅ)

எண்ணாயிரத்தாண்டுயோகமிருப்பினுங்
கண்ணாலமுதினைக்கண்டறிவாரில்லை
யுண்ணாடிக்குள்ளேயொளியுறநோக்கினாற்
கண்ணாடிபோலக்கலந்திருந்தானே.

(இ - ள்.) யோகம் - அங்கயோக முதலியன. கண் - ஊனக் கண். உண்ணாடி - சுழுமுனாநாடி. நின்மலபூரணமாயிருத்தலா லதற்குக் கண்ணாடியை யுவமைகூறினர். ஏனையவெளி. அட்டாங்கயோகமாவன - இயமுமுதலாயின. இவற்றினைச் சங்கத்திலச்சிட்டிருக்கிற அட்டாங்கயோகக் குறளிலுங்காண்க. (எகூ)

அஞ்சுளசிங்கமடவியுள்வாழ்வன
வஞ்சும்பொய்யஞ்சுந்தம்மஞ்சகமேபுகு
மஞ்சினுகிருமெயிறமறுத்திட்டா
லெஞ்சாதிறைவனையெய்தலுமாமே.

(இ - ள்.) சிங்கமைந்தென்றது பஞ்சேந்திரியத்தை. அடவியென்றது அவற்றின் றானங்களையுடைய வுடம்பை. உகிர் - நகம். எயிறு - பல். சிங்கத்திற்கு நகமும் பல்லு மில்லையேற் றுன்பஞ் செய்யாதாகையா லவையிரண்டையு மறுத்திடவேண்டுமென்றார். ஏனைய

வெளி. மனத்தையும் புத்தியையு முகிரும் பல்லுமாக வுரைத்தார். ஒருபுலியின் பல்லையு முகிரையுஞ் சேதித்தகதை பாரதத்திற் காண்க.

புலமைந்துளமைந்துபுட்சென்றமேயு
நிலமைந்துநீரைந்துநீர்மையுமைந்து
குலமொன்றுகோல்கொண்டுமேய்ப்பானொருவ
னுலமந்துபோம்வழியொன்பதுதானே.

(இ - ள்.) புலமைந்தென்றது பஞ்சபூதத்தை. உளமைந்து புள் என்றது உள்ளத்துடன்கூடிய பஞ்சேந்திரியமாகிய பறவையை. மேயுநிலமைந்தென்றது தன்மாத்திரை யுள்ளவிடத்தை. நீரைந்தென்றது அப்பஞ்சேந்திரியங்களின் குணத்தை. நீர்மையுமைந்தென்றது அவை நுகரும் விடயசுகத்தை. குலம் - சாதி, நன்மையுமாம். மேய்ப்பானென்றது ஊட்டுவிப்பானாகிய கர்த்தாவை. உலமந்து - தன்புற்று. வழியொன்பது. நவத்துவாரம். ஏனைய விசைத்துரைக்க. இவ்வொன்பது வழியிருந்து மோடிவிடாமல் மேய்ப்பானுக்கிணைப்படி யொடுங்குங்காலத் தொடுங்கி வெளிப்படுங்காலத்தில் வெளிப்படலால் இவ்வியல்பை யறியவேண்டுமென்ப தெஞ்சி நின்றது. (அக)

மூன்றுளமாளிகைமூவரிருப்பிட
மூன்றினின்முப்பத்தாறமுதிப்புள
மூன்றினுள்ளேமுளைத்தெழுஞ்சோதியைக்
கான்றிடிற்காயங்கணக்கற்றவாறே.

(இ - ள்.) மூன்றுளமாளிகை - அகார உகார மகார மாகிய மூன்று மாளிகையுள்ளன. மூவரிருப்பிடம் - அம்மாளிகை மூன்று மயனரியரனென்னு மூவரிருப்பிடமாம். இரண்டா மடிக்கு - அவ் வகார முதலிய மூன்றின்ளே முப்பத்தாறு தத்துவங்களுந் தோன்று தலுள்ளன. மூன்றாமடிக்கு - அவ்வகாரமுதலிய மூன்றினுள்ளே நின்று மேலாய் முளைத்தெழுஞ் சோதியாகிய சிவத்தை. கான்றிடில்- அறியாதுவிடில். காயங்கணக்கற்றவாறே - இருவினையால் வருமுடம்பு மாறிமாறிக் கணக்கில்லாமலுண்டாகு மென்றவாறு.

அகாரமுதலிய மூன்றிற்கு மதிதெய்வமாயிருத்தலின் அவை மூன்றையு மூவரிருப்பிடமென்றார். முப்பத்தாறு கருவிகளு மிங்

னனந்தோன்று மென்பதைத் திருவிளையாடற்புராணம் - வேதத் துக்குப் பொருளருளிச்செய்த படலத்தில் - "ஆதியிலான்மதத்துவ மான" என்னுஞ் செய்யுளினுங்காண்க. மூன்றினுள்ளே முளைத் தெழுஞ்சோதியென்றது அம்மூன்றினுள்ளே நின்றும் பிரணவ மைந்தக்கரமாதலால் அவ்வைந்தக்கரத் தெய்வங்கட்கு மேலாயெழுஞ் சோதியையெனினுமாம். இதனைச் சிவஞானசித்தியார் - ச - ஆஞ் சூத்திரம் - ந - ஆந் திருப்பாட்டிலறிக. (அஉ)

மொட்டித்தெழுந்ததோர்மொட்டுண்டம்மொட்டினைக்
கட்டுவிட்டோடிமலர்தலுங்காணலாற்
பட்டுவிட்டம்மனைபாழ்படநோக்கிட்டுக்
கட்டுவிட்டார்க்கன்றிக்காணவொண்ணாதே.

(இ - ள்.) நான்கடிக்கும் - (இதயத்திலே வாழைப்பூப்போலக் கீழ்நோக்கி) முகிழ்த்தெழுந்ததொரு அரும்புளது, அவ்வரும்பினில் முறுக்கவிழ்ந்து விசாலித்து விரிதலும், அங்கே சோதிமயமாகச் சிவந்தோன்றலால், அதனைப்பிறவிக்கிடமாய தாய் பட்டு நீங்கிப் பாழ் பட நோக்கிப் பந்த நீங்கினர்க்கன்றி யேனையோர்க்குக் காணமுடியா தென்றவாறு.

இதயத்தி லிம்மலருண்டென்பதனைச் சிவஞானசித்தியார் - கூ - ஆஞ் சூத்திரம் - அ - ஆந் திருப்பாட்டிற்காண்க. மொட்டினை— உருபுமயக்கம். அம்மனை - தாய். (அங)

கரடிகளேந்துங்கடுங்கானம்வாழ்வன
திருடியிராப்பகநின்றுதிரிவன
கரடிகளேந்துங்கடைத்தலைபட்டாற்
குருடிகள்குத்தினுங்குண்டுரலாமே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு-கரடிகளாகிய பஞ்சேந்திரியங்க ளுங் கொடுங்காடாகிய தேகத்தில் வாழ்ந்திருக்கின்றன, அவை தமக்குரியவைபன்றிப் பிறர்க்குரியவற்றையு மபகரித்து இராப்பகல் துய்த்துச் சரிப்பன. பின்னிரண்டடிக்கு - அக்கரடிகளாகிய விந்திரி யங்க டம்மிடங்களிற் செயலற்றொடுங்கினால், குருடிகளாகிய விருவினை கள் வந்துதாக்கினுமுரன்டைக்கல்லுரல்போ லச்சமில்லை யென்ற வாறு.

தாமே செல்லுகையின்றி நியதியின்வழியாகச் சேறலாற் குருடிகளென்றார். இந்திரிய நிக்கிரகஞ் செய்தவர்க்கு வினைகள் வந்து தாக்கினு மவற்றாற் சலனமில்லை யென்பது கருத்தாயிற்று. விடாது பற்றலா லிந்திரியங்களைக் கரடிகளென்றார். சலனமில்லை யென்பதனைச் சிவஞானசித்தியார் ௧0-ஆஞ் சூத்திரம்-௩ ஆந் திருப்பாட்டில், "வருஞ் செயல்க ளுண்டேன், முந்தனுடைச் செயலென்று முடிந்தொழுக வினைகள் மூளா" எனக் கூறியதனாற்காண்க. (அச)

விச்சுக்கலமுண்டுமேலைச்செய்யொன்றுண்டு
வுச்சிக்குமுன்னேயுழவுசமைந்தது
வச்சைக்கொண்டச்சையறுத்துண்ணறியாம
'விச்சைக்குப்பிச்சையிரக்கின்றவாறே.

(இ - ள்.) வித்து என்றது அறிவை. செய் என்றது அருட் சத்தியை. உச்சி என்றது பாதிவேளையினை; அது ஐம்பதுவயது என்க. உழவு என்றது சரியைமுதலானவை. அச்சு என்றது இச்சரீரத்தை. அச்சையறுத்தல் - இனிவருஞ் சரீரத்தை நீக்கலே. உண்ணுதல் என்றது விளைந்த சிவானந்தவமுதந்துய்த்தலே. ஏனைய வியைத்துரைக்க.

இரக்கின்றவாறு என்றதன்பின் இதனாற் பயனில்லை யென்பது வருவித்துரைக்க. ஐம்பதுவயதிற்குப் பின் கருவிகள் வரவர வோய்வுபெறுதலால், அதற்கு முன்னே சரியை முதலியவற்றைச் சாதித்துச் சிவானந்தவமுதந்துய்த்தல் வேண்டுமென்பது கருத்தாயிற்று. "முப்பதா மாண்டளவின் மூன்றற் றொருபொருளைத், தப்பாமற் றன்கைப் படாஇனாகில்" எனக் கூறுதலுங்காண்க. இதிற் "காலமுண் டாகவே காதல்செய் துய்ம்மின்" என்றுரைத்தருளிய திருவாசகத்திருப்பாட்டின் கருத்தடங்கி யிருத்தல்காண்க. உண்ண என்பது விகாரமாயிற்று. (அரு)

உச்சிக்குமேலேயுணர்வுக்குங்கீழே
வைச்சபொருளின்வகையறிவாரில்லை
வைச்சபொருளின்வகையறிவாளர்க்கு
வெச்சவெருதமிளவெருதாமே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - மாயைக்குமேலே ஞானரூபமாகிய பதிக்குங்கீழே ஆகிய நடுவிலே வைத்திருக்கப்பட்ட பொருளாகிய வான்மாவின் வகையையறிவாரில்லை. பின்னிரண்டடிக்கு - அங்ஙனம் வைத்த பொருளாகிய வான்மநிலையை யறிதலுடையார்க்குத் (தன்னையறிந்தவரே தலைவனையு மறிவாரென்ற பழமொழிப்படி) தலைவனையறிதல் கூடுமாதலால், அவ்விடத்தேயினைத்தோய்ந்த எருதுகளாகிய கருவிகளெல்லாஞ் சிவகரணமாகையால் இளமைத் தன்மையுடைய வெருதுகளைப்போலச் செய்தொழிற்பய னுதவுவனவா மென்றவாறு.

கருவிகளை யெருதுகளாகக் கூறினமையாற் சரியை முதனுன் கையு முழவுதொழிலாகக்கொள்க. எல்லாத்தத்துவங்கட்கு மேலாதனேக்கி மாயையினையுச்சி யென்றார். (அசா)

வம்புபழுத்தபலாப்பழமொன்றுண்டு
தன்பாற்பறவைபுகுந்துணத்தானொட்டா
வம்புகொண்டெய்திட்டகலத்துரத்திடிற்
செம்பொற்சிவகதிசென்றெய்தலுமாமே.

(இ - ள்.) முதலடிக்கு - புதுமையாகப் பழுத்த சிவகதியாகிய பலாக்கனி யொன்றுளது. இரண்டாமடிக்கு - அதனிடத்துப் புகுந்துணப் பஞ்ச விந்திரியங்களாகிய பறவைகள் தம்வசமாக்கித் தடுத்துக் கூட்டமாட்டா. மூன்றாமடிக்கு-ஞானமாகிய வம்பினைக்கொண்டு அவ் விந்திரியங்களாகிய பறவைகளை யெய்து தூரத்தே நீக்கிடில். நான்காமடிக்கு - செம்மையுடைய வழகிய சிவகதியாகிய வப் பலாக்கனியை யடைந்து துய்த்து வாழலுமாகு மென்றவாறு.

இதுகாறுங் கிட்டாது கிடைத்ததோர் திப்பியமாகிய கனி யென்பார் வம்புபழுத்த பலாப்பழமொன்றென்றார். இதில் ஓரினவெதுகை வந்தவாறு காண்க. (அஎ)

பள்ளச்செய்யொன்றுளபாடச்செயிரண்டுள
கள்ளச்செயங்கேகலந்துகிடந்தது
வுள்ளச்செயங்கேயுழவுசெய்வார்க்கு
வெள்ளச்செயங்கேவிளைந்ததுதானே.

(இ - ள்.) பள்ளச்செய்யொன்று என்றது காரணதநு, சூக்கு மதநு, தூலதநு என்னு மூன்றனுள்ளே காரணதநு வனை யிரண்டு தநுவுக்கு முள்ளிருத்தலா லதனைப் பள்ளச்செய்யென்றார். உள - அதன்பின்னுள்ளனவாகிய. பாடச்செயிரண்டு என்றது அதனி னின்றுந் தோற்றுவிக்கப்பட்டமையாற் சூக்குமதநு, தூலதநு இரண்டையும் பாடச்செய்யென்றார். இரண்டாமடிக்கு - கள்ளச் செய்யாகிய மாயை அத் தநுத்திரயங்களையுட்கொண்டு கலந்திருந் தது. மூன்றாமடிக்கு - உள்ளுகின்ற அச் செய்களினிடத்தே இவை களைப் பொய்யெனக் காணுதலாகிய வுழுதொழிலைச்செய்யு ஞானி யர்க்கு. நான்காமடிக்கு-மிகுதியாகிய அச் செய்களிளிடத்தே நின்று தானே சிவமாகுதலாகிய விளைவு விளைந்தது என்றவாறு.

முதலில் உளது என்பது துவ்விறு குறைந்து நின்றதெனினு மாம். சிவமாகுதலாகியவிளைவு வருவித் தியைத்துரைக்க. (அஅ)

அன்னமிரண்டுளவாற்றங்கரையினிற்
றன்னியிரண்டுந் துணைபிரியாதென்க
வந்நிலையன்னந்தனியொன்றுபோனக்காற்
பின்னைமுடவன்னங்கூடுகிலாவே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - தமக்காதாரமாகிய வாற்றங் கரையைப் பிரியாம லிரண்டன்னங்களிருப்பனபோல இடைகலை பிங் கலையாகிய வந்நிலையையுடைய வன்னமிரண்டுந் தமக்குச் சார்பாகிய சுழுமுனையைச்சேர்ந்து பிரியமாட்டாதென்க. தனியொன்றுபோனக் கால் - தனியாகிய வேர் சுழுமுனை யடங்கினால். கடையடிக்கு-பின்பு நடையில்லாமையாலே முடவன்னம் போலாகி யவை சேரமாட்டா வென்க.

இரண்டும் என்பதனோடு அந்நிலையன்னம் என்பதனைக் கூட்டி யுரைக்க. ஓரினவெதுகை யிதில் வந்தவாறு காண்க. (அகூ)

மலமில்லைமாசில்லைமானபிமானக்
குலமில்லைகொள்ளுங்குணங்களுமில்லை
நலமில்லைநந்திஞானத்தினாலே
பலமன்னியாங்கேமதித்தவைப்பார்க்கே.

(இ - ள்.) நந்திபெருமானாகிய குருமூர்த்தி யருளிய பரஞானத்தினாலே கண்டபொருளை நிலைபெற விளங்கக் கண்டவிடத்தே சிந்தித்து வைப்பார்க்கு, ஆணவமுதலிய மும்மலமில்லை, அவையடுத்து வருங்கருவிகளுடனஞ்ஞானமுமில்லை, அஃதில்லையாகவே, அதுகாரணமாக வரு மானவபிமானத்துடன் கூடிய குலவேற்றுமையில்லை, மாறி மாறிக்கொள்ளுங் குணங்களுமில்லை, அம்முக்குணங்க ணீங்கவே விடயசுகமுமில்லை யென்றவாறு. நந்தி என்பது முதலாவுரைக்க.

கண்டபொருளை யென்பத னிசையெச்சமாக்கி யுரைக்க. மன்னி - மன்ன வெனத் திரித்துரைக்க. மானபிமான மென்பது மானபிமானம் என நின்றது. நலம் ஈண்டு விடயசுகம். அருளியஞானமாவது, சிவஞான சித்தியார்-அ - ஆஞ் சூத்திரம் - ௩௰ - ஆந் திருப்பாட்டினும், மலமில்லை யென்பது முதலியனவற்றை ௩௨ - ஆந் திருப்பாட்டினுங் காண்க. (௩௰)

பழுத்தனவைந்துபழமறையுள்ளே
விழித்தங்குறங்கும்வினைவையறியா
ரெழுத்தறிவோமென்றுரைப்பர்களேதா
மெழுத்தையழுத்துமெழுத்தறியாரே.

(இ - ள்.) பழைய வேதாகமத்துள்ளே ஐந்தெழுத்து மேலோங்கி யிருக்கின்றன, (அவைகளை யைந்தவத்தையினு நிற்குமுறை யறிந்த பின்) துரியாதீதத் துறங்கும் வினைவை யறியார்கள். அவ் வெழுத்துக்களை யறிவோமென் றுரைப்பார்கடாம், ஏனை யெழுத்துக் களைத் தன்னு ளமைப்பதாகிய முத்தி பஞ்சாக்கர நிலைமையை யறியா ரென்றவாறு. முதலடிமுதலாக வியைத்துரைக்க.

பழுத்தல்-எல்லாச் சமையங்களுள்ளுங் கூறப்படும் பொருளெல்லாந் தம்முளடக்கி மேலோங்கியிருத்தல். இத் திருப்பாட்டின் கருத்தைக் காஞ்சிப்புராணம் - பாயிரத்தில், "எவ்வெவகோட்படுபொருளும்" என்னுஞ் செய்யுளிற் காண்க. ஐந்தவத்தையினுங் கணிக்குமுறையை யுபதேசமுறையானுணர்க. (௩௧)

முத்துப்பவளம்பச்சையென்றிவைமூன்று
மொத்துப்புணருமுணர்வையறியா

ரொத்தப்புணருமுணர்வையறிந்தபின்
கொத்தப்படுங்கொக்குப்போற்குருவாமே.

(இ - ள்.) அகார முகார மகாரமென்ற இவை மூன்று மோங் காரமாகப் பொருந்த அவற்றின் மேலாகப் பொருந்தியிருக்கு முணர் வாகிய பதியை யறியார்கள்; அங்ஙனமாகப் புணரு முணர்வாகிய பதியை யறிந்தபின் றான் கருதியிருந்ததை யகப்படக் கொத்துதல் பொருந்துங் கொக்குப்போல வாசாரியராவ ரென்றவாறு. முதலடி முதலாகவுரைக்க.

முத்து உருத்திரவடிவமும், பச்சை திருமால் வடிவமும், பவளம் பிரமன்வடிவமும் பெற்றிருத்தலால் அவைகளை யெடுத்துக் கூறினர். செய்யுளாதலின் முறைபிறழக் கூறினர். அகாரத்திற்குப் பிரமனையும், உகாரத்திற்குத் திருமாலையும், மகாரத்திற்கு ருத்திரனையும் பொருளாகக் கூறலினிங்ஙனம் விதந்து கூறினர். என்றவிவை யென்பது என்றிவை யென நின்றது. ஒத்து ஒக்கவெனத் திரித்துரைக்க. (கூஉ)

பண்ணுதபேரொளிக்கப்புறத்தப்புற
மெண்ணுபசஞானிசைந்தங்கிருந்திட
[illegible]ன்னுவெளியதுரைசெயாமந்திரஞ்
சொன்னான்கழன்முன்னறிந்தமர்ந்தோமே.

(இ - ள்.) சன்மார்க்கராய ஞானியரெண்ணத்தில் விளங்கிய தலைவராகிய அவரிசைந்திருந்த அவ்விடம் பிறரால் பண்ணப்படாத பெரிய சோதியின் மேலாகிய விடமாம்; (அத்தலைவரை யின்னும்) உன்னுதற்கரிய பரமாகாசமாயுள்ள தென்றும், சொல்லுதற்கரிய இரகசியமாயுள்ளதென்று முன்னே யுபதேசித்தருளின நந்திபெரு மான்றிருவடி யவ்வாறிருப்பதை யறிந்து அதனுட்பிரிப்பின்றியத்து விதமாயடங்கினே மென்றவாறு. இரண்டாமடி முதலாக வுரைக்க.

இனிப்பெரும்பே றில்லையென்ப தெஞ்சிநின்றது. வாக்குமனா தீதமாதலால் உன்னுவெளியதுரைசெயாமந்திர மென்றார். இருந்த விடம் என்பதிற் பெயரெச்ச விறு தொக்கது. உரைசெயா மந்திர மென்பதற்கு அசபாமந்திரமெனப் பொருள்கூறலுமொன்று; அது வருமாறு; அதனை அஞ்சமந்திர மெனவும், அன்னபபெயர்மந் திர மெனவுங் கூறுவர். காஞ்சிப்புராணம் - திருவேகம்பப் படலத்தில் -

"கர்யத்திரியதனிலதிக மஞ்சமாமந்திரம்" என்றும், பிரபுலிங்கலீலையில் "அறிவோர் சிறிதுஞ் சலியாம லன்னப் பெயர்மந் திரமாறி" என்றுங் கூறுமாறுகாண்க. அது, நான் அவன் எனப் பொருள்படு மந்திரம். ஹ ஸ: - அஞ்ச என்றாயிற்று. அவன் நான் எனப் பொருள்படும் (சோகம்) ஸோஹ என்பது எழுத்து மாறி ஹம்ஸ: என்றாயிற்று. ஜபா - செபித்தலுடையது. அஜபா செபித்தலில்லாதது. மதுரைத்தமிழ்ச்சங்கத்திலச்சிட்ட தமிழ்ச்சொல்லகராதியில் இதன் விரிவைக்காண்க. (கங)

பாருக்குக்கீழேபகலோன்வரும்வழி
யாருக்குமெட்டாவகலமுடையவ
னிருக்குந்திக்குநடுவேயுதித்தவ
னூருக்குமேற்கேயொடுங்குகின்றானே.

(இ - ள்.) ஆன்மாத் தோன்றும் வழியாவது பிருதிவியன் கீழாகிய மாயையேயாம், (ஈசுரன் அரியகாட்சியனாதலால்) பெத்தான்மாக்கள் யாவருக்கு மணுகவொண்ணாத தூரநிலையினோன், அங்ஙன மான்மா எவ்வாறு தோன்றினானெனில்? சுக்கில சுரோணித சேர்க்கையினிடையிலே தோன்றினவனாவான், அவன் முத்திநிலையி லெங்கே யொடுங்குகின்றானெனில்? மாயையாகிய வூருக்குமேலிடமாகிய அவ் வீசுரனிடத்தி லத்துவிதமா யொடுங்குகின்றா னென்றவாறு. முதலடி முதலாகவுரைக்க.

அகக்காட்சியாகி ஞானத்தா லஞ்ஞான விருளை நீக்கலால் ஆன்மாவைப் பகலோனென்றார் நீர் வெண்ணிறமுந் தீ செந்நிறமு முடைமையாற் சுக்கில சுரோணிதத்தை நீருந்தியுமாகக் கூறினர். வரும் வழி மாயையெனக் கூறியது "மாயாதநுவிளக்காமற்றுள்ளங் காணாதே, லாயாதாமொன்றை" எனச் சிவஞானபோதம் ச-ஆஞ் சூத்திரம் - உ - ஆ மதிகரணத்திற் கூறியதனாலென்க. (கச)

ஆரைபழுத்துக்கிடக்குதுவையக
மாரையைச்சூழநீர்கோத்துநிற்குது
வாரைபறித்துக்கறியுண்ணமாட்டாது
கீரைக்குநெல்லிட்டுக்கெடுகின்றவாறே.

(இ - ள்.) உலகில், சிவமாகிய ஆரைக்கீரை பறிப்பாரரியாராக முதிர்ந்திருக்கின்றது, அவ்வாரைக்கிரைக்கு அருளாகிய நீர் என்றும்

பொருந்தியிருக்கின்றது. அவ்வாரைக்கிரையைத் தன்னுட் கொண்டமைத்துச் சிவஞானத்தா லத்துவித நிலையாகிய கறியையமைத்துண்ணவறியாமற் பூமியிற்றோன்றிய வெறுங்கிரைக்கு நெல்லைக்கொடுத்து வாங்கியுண்டு அவமே காலங்கழித்துத் தொலைகின்றவாறு யாதுகாரண மென்றவாறு. முதலடி முதலாக வுரைக்க.

யாதுகாரண மென்ப தெஞ்சிநின்றது. இது அநித்தியமாகிய கிரையையுண்டு காலங்கழிப்பாரை நோக்கி யிங்ஙனங் கூறினாரென்க. கிரைகளில் ஆரைக்கிரை யுயர்வுடைய தென்ப துலகவழக்கு. (கஅ)

ஐவர்க்கொருசெய்விளைந்துகிடந்தது
வைவருமச்செய்யைக்காத்துவருவார்க
ளைவர்க்குநாயகனோலைவருதலா
லைவருமச்செய்யைக்காவல்விட்டாரே.

(இ-ள்.) ஐவர் என்றது பஞ்சேந்திரியத்தை. ஒரு செய் என்றது வினையை. விளைந்து கிடத்தலாவது-வினைப்பய னுகரக்கிடத்தல். செய்யைக்காத்து வருதலாவது - அவ் வினையைப் பிறர்நுகராமல் நியதியின்படி தாங்களே நுகரப்பார்த்திருத்தல். ஐவர்க்கு நாயகன் என்றது ஐவரையுஞ் சேட்டிப்பிக்கும் பதியை. ஓலை என்றது இத்தேகத்தா னுகரக்கிடந்த வினைப்பயனற்றபடியால் எஞ்சிய வினைப்பயனுகர வேறு தநுவாதியைக் கொள்ளுமாறு வரு மிறைவனாணையை. அச்செய்யைக் காவல்விடல் என்றது அவ் வினையைத் தாம் நுகராமல் விடல்.

இதன் கருத்து "வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினைதானொழிந்தாற் - றினைப்போதளவுநில்லாதுகண்டாய்" என்ற பட்டினத்தடிகள் பாடற்கருத்துப்போற்கொள்க. ஆதலா லித்தேகமிருக்கும்போதே அந் நாயகன் றிருவடிக்கலப்பைப் பெறவேண்டு மென்ப தெஞ்சிநின்றது. (கசஅ)

கரும்புந்தேனுங்கலந்ததோர்காயத்தி
லரும்புங்கந்தமுமாகியவானந்தம்
விரும்பியேயுள்ளம்வெளியுறக்கண்டபின்
கரும்புங்கைத்ததுதேனும்புளித்ததே.

(இ - ள்.) ஆன்மாவானது, கரும்பு மதுர ரசமாகியதேனும், அரும்பு மதன்மணமுங் கலந்ததையொத்திருக்கின்ற வானந்தத்தை ஒரு காயத்தினுள்ளே பரவெளியிற் (சிவஞானத்தாற்) காதலித்து அத்துவிதமாகப் பொருந்த வறிந்தபின்னர்க் கரும்புங் கசந்துவிட்டது, தேனும் புளித்துவிட்டதென்றவாறு. உள்ளமென்பது முதலாக விபைத்துரைக்க.

இத் திருப்பாட்டு, அணைந்தோர் தன்மைகூறியதனுல் அவர்க்குலகிய வின்ப மித்தையா யிருத்தல்பற்றி யிவ்வாறு கூறினரென்க. உள்ளம் - ஆன்மா. ஆதல் - ஈண் டொப்புப்பொருட்டு வெளி - பரமாகாசம். ஏ - அசை. (கூஎ)

நினைப்புமறப்புமிலாதவர்நெஞ்சம்
வினைப்பற்றறுக்கும்விமலனிருக்கும்
வினைப்பற்றறுக்கும்விமலனைத்தேடி
நினைக்கப்பெறிலவனீளியனுமே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - தன்னைபணைந்தோர் வினைப்பற்றை நீக்கு மலமுத்தன் அறிவு மறியாமையுமாகிய நினைப்பு மறப்பு மற்றவராகிய மெய்ஞ்ஞானியரது இதயகமலத்தில் (ஞானகாசமாகிய சோதியாய்) இருப்பன். பின்னிரண்டடிக்கு-அவ்வாறு வினைப்பற்றை நீக்கு மலமுத்தனை நினைப்பு மறப்பு மறுமற் றேடிச் சிந்திக்கப்பெறிலவர் நினைவி லகப்படானுகி யவன் றாரத்தவ னுவனென்றவாறு.

அறிவு மறியாமையு மகற்றியதுணையானே (அறிவினுள்ளே யறிவத்தொரு குறி குருவருளினுலறிதல்) கூடுமாதலி னதனை யூகித்தறிய முன்னிரண்டடியி லவ்வாறு கூறினரென்க. (கூஅ)

பூதக்கண்ணாடியிற்புகுந்திலன்போதுளன்
வேதக்கண்ணாடியில்வேறேவெளிப்படு
நீதிக்கண்ணாடிநினைவார்மனத்துளன்
கீதக்கண்ணாடியிற்கேட்டுநின்றேனே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - பூதவிகாரமாகிய லோகங்களினுகிய கண்ணாடியிலே முகமுதலிய பெரியவடிவங்களின்சாயை யுள்ளடங்கி விளங்குமாறுபோல, வேதமாகிய கண்ணாடியி னுட் புகுந்து

தோன்றுனுப் வேதாந்தப்பொருளாய்த் தனியே வெளிப்பட்டுத் தோன்றுவன், அவ னெக்காலமுமுள்ளான். பின்னிரண்டடிக்கு-(இங் ஙனமுளனுயினும்) அவ்வேதநீதியாகிய கருமஞான முறைப்படி யாராய்ந்து சிந்திப்பா ரிதயகமலத்து விளங்கித் தோன்றுவன், (இவ் வியல்பையெல்லாம்) இசையுடைய அவ்வேத நூலாகிய கண்ணுடியில் (செவியாகிய கண்ணுல்) அறிந்து நின்றேனென்றவாறு.

வேத மிதுவே பிரமமெனச் சுட்டிக்காட்டப் பெருமையால் அத னுட் புகுந்திலனென்றும், வேதாந்தப்பொருளா யிருத்தலில் வேறே வெளிப்படுமென்றுங் கூறியவாறுணர்க. கீதம் என்பது ஆகுபெய ராய் வேதநூலை யுணர்த்திநின்றது. (௯௯)

மண்ணிற்கலங்கியநீர்போன்மனிதர்க
ளெண்ணிற்கலங்கியிறைவனிவனென
ருண்ணிற்குளத்தின்முகந்தொருபால்வைத்துத்
தெண்ணிற்படுத்தச்சிவனவனுமே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு—நிலத்தியல்பாற் றிரிந்த நீர் போல மாபாசம்பந்தத்தா லெண்ணத்திற் கலக்கமுற்று (உண்மை விளங்காமையால்) இறைவ னிவனென் றறியமாட்டார். பின்னிரண் டடிக்கு - உள்ளேநிற்கு முளமாகிய இதயகமலத்தி லொரு பாலாகிய பொருளை முகந்துவைத்துக் கேட்டுச் சிந்தித்தபடியே தெளிவு நிற் றல்செய்ய அவனே நிட்டைகூடிச் சிவனுயிருப்பனென்றவாறு.

மண்ணல் நீர் திரியுமென்றதனை "நிலத்தியல்பா னீர்திரிந் தற்று கும்" எனக்கூறிய திருக்குறளிற்காண்க. பால் - என்பது இயல்பு; "பால்புடை யியல்பு திக்குப் பகுத்தல்பா லென்னு மைம்பேர்" என நிகண்டிலுங் கூறுதல்காண்க. முகத்தல் - ஈண் டபேதபாவனையைக் குறித்து நின்றது. (௧௦௦)

முற்றிற்று.

